அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



“एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा”

# श्रीजगद्गुरुग्रन्थमाला–१३



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 13

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

1964


விஷயாநுக்ரமணிகை



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை.

ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்களின் பரிபூர்ண அனுக்ரஹத்தால் வெளியிடப்பட்டுவரும் 'ஸ்ரீஜகத்குரு கிரந்தமாலாவில்' இது 13வது மலர். இதில் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாள் அருளிய ' அபரோக்ஷானுபூதி ' 'வாக்கிய வ்ருத்தி ' என்ற இரு பிரகரணங்கள் வழக்கம்போல பதவுரை, பொழிப்புரை, கருத்துரைகளுடன் வெளியிடப் பட்டுள்ளன.

1. அபரோக்ஷானுபூதி: இந்த பிரகரணத்தில் இரண்டாவது சுலோகத்தில்

अपरोक्षानुभूतिर्वै प्रोच्यते मोक्षसिद्धये ।
सद्भिरेषा प्रयत्नेन वीक्षणीया मुहुर्मुहुः ॥

என்று கூறியிருப்பதால் இதற்கு ' அபரோக்ஷானுபூதி ' என்ற பெயரை ஸ்ரீ பகவத்பாதர் அவர்களே ஏற்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. இந்த பிரகரணத்தை அனுஸந்தானம் செய்வதன் மூலம் மோக்ஷஸாதனமான அபரோக்ஷானுபவம் ஏற்படுவதால் இதற்கு 'அபரோக்ஷானுபூதி' என்ற பெயர் அமைந்துள்ளது. அத்வைத தத்வத்திற்குத்தக்கபடி 'ப்ரஹ்மானுசிந்தனத்தில்' தாம் காட்டிய ஹரிகுரு சிவயோகத்தை இங்கும் மங்கள சுலோகத்தில் காட்டுகிறார். 'श्रीहरिं परमानन्दमुपदेष्टार-मीश्वरम् ' இங்கு 'உபதேஷ்டாரம்' என்பது குருவையும், 'ஈச்வரம்' என்பது சிவனையும் குறிக்கிறது ப்ரஹ்மானுசிந்தனத்தில் போலவே இங்கும் விஷ்ணுவுக்கும் சிவனுக்கும் நடுவில் குருவைக் காட்டியிருக்கிறார்.

யோக சாஸ்திரத்தில் எட்டு அங்கங்களுடன் கூடியதாக அஷ்டாங்க யோகம் கூறப்பட்டிருக்கிறது. அந்த எட்டு அங்கங்களுடன் மேலும் ஏழு அங்கங்களைச் சேர்த்து 15 அங்கங்கள் ஞான ஸாதனமாக இங்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. இதை ராஜ யோகம் என்று கூறுகிறார். அது ஹடயோகம். ஹடயோகத்திலும் ராஜ யோகத்திலும் எட்டு அங்கங்களுக்குப் பெயர் ஒன்றாக இருந்தபோதிலும் பொருள் வெவ்வேறாகக் காட்டப்பட்டிருக்கிறது. மனத்திலுள்ள தோஷங்கள் முழுவதும் விலகியவர்களுக்கு இந்த ராஜயோகம் ஒன்றே போதுமென்றும், இல்லாவிட்டால் ராஜயோகம், ஹடயோகம்

இரண்டையும் அப்யஸிக்கவேண்டுமென்றும் கூறுகிருர். ஞானிகளுக்கு பிராரப்தம் கிடையாது என்ற கருத்தையும், பிராரப்தம் உண்டு என்ற கருத்தையும் இங்கு ஸமரஸப் படுத்துகிருர்.

2. வாக்யவிருத்தி: வேதாந்தத்தில் வாக்யம் என்பது "தத்த்வமஸி" முதலான மஹா வாக்யங்களைக் குறிக்கும். அவைகளில் முக்யமானதும், சாந்தோக்ய உபநிஷத்தில் தந்தை தனயனை சிஷ்யனுக்கு உபதேசிக்கின்றதுமான "தத்த்வமஸி" என்ற மஹா வாக்யத்தை விவரணம் செய்வதால் இதற்கு "வாக்ய விருத்தி," என்ற பெயர் அமைந்துள்ளது குரு சிஷ்யஸம்வாதரூபமாக அமைந்துள்ள இப்பிரகரணத்தில் 'த்வம்' பதத்தினுடையவும் 'தத்' பதத்தினுடையவும் அர்த்தங்களை விரிவாகக் காட்டி வாக்யார்த்தம் அபேதம் என்றும், வாச்யார்த்தத்தில் இது பொருந்தாததால் இரண்டு பதங்களிலும் லக்ஷ்யார்த்தத்தைக் கொள்ளவேண்டுமென்றும் கூறி, ஜீவப்ரஹ்மாபேதத்தையும், இதன் ஞானத்தால் வரும் பயனையும் உபதேசிக்கிருர்.

இவ்விரண்டு பிரகரணங்களுக்கும் தமிழில் பதவுரை, பொழிப்புரை, கருத்துரைகளை எழுதித்தந்து உதவியுள்ள ஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களுக்கு நம் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீ மஹா ஸந்நிதானம் அவர்களின் திவ்ய சரணரவிந்தங்களில் இம்மலர் பக்தியுடன் ஸமர்ப்பிக்கப்படுகிறது.

K. V. சுப்பரத்னம் அய்யர்
பொதுக்காரியதர்சி
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

|| श्रीः ||

# || अपरोक्षानुभूतिः ||

## அபரோக்ஷானுபூதி

---

[‘அபரோக்ஷானுபூதி’ என்ற இந்த பிரகரணம் 144 சுலோகங்கள் கொண்டது. ‘நானே ப்ரஹ்மம்’ என்ற அனுபவம் அபரோக்ஷமாக அதாவது ப்ரத்யக்ஷமாக ஏற்படுவதற்கு வேண்டிய ஸாதனங்களை இதில கூறுகிறார். ஜீவர்களையும், பிரபஞ்சத்தையும் வேறாகத் தெரிந்துகொண்டிருக்கும் வரை அத்வைத ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம ஏற்படாது அதற்காக ஸாதன சதுஷ்டயத்தை முதலில் காட்டி ப்ரஹ்மவிசாரம் செய்யும் முறையையும காட்டுகிறார். தேஹாதிகள் ஆத்மாவல்ல, ஜீவ ஸ்வரூபம் ஒன்றுதான், அது ப்ரஹ்மம்தான், பிரபஞ்சமும் உண்மையில் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறல்ல, வேற்றுமைக்குக் காரணம் அக்ஞானம்தான் என்பனவற்றைப் பல யுக்திகளாலும், உபநிஷத் ப்ரமாணங்களாலும தீர்மானிக்கிறார். ஆத்ம விசாரம் செய்து அறிந்துகொண்ட தத்வம் அனுபவத்தில் வருவதற்கு 15 அங்கங்களுடன் கூடிய ராஜயோகத்தை நிருபணம் செய்கிறார். மனோதோஷங்கள் அதிகமாக இருக்குமானால் இந்த ராஜயோகத்துடன் ஹட யோகத்தையும் அப்யஸிக்கவேண்டும். இல்லாவிட்டால் ராஜயோகம் மட்டும் போதும். இந்த ஸாதனங்களால் ஏற்படும ஞானநிஷ்டையைக்காட்டி உலகத்தோரின் பார்வையில் ஞானி தேஹமுள்ளவராகத் தோன்றியபோதிலும் ஞானிகளின பார்வையில் ப்ராரப்தமும் கிடையாது என்று தீர்மானித்து ‘பிராரப்தம் மட்டும் எஞ்சி நிற்கும்’ என்று கூறும் சுருதியின் தாத்பர்யத்தையும் விளக்குகிறார். குருதேவதா ஸ்வரூபமான ஹரியின் நமஸ்காரத்துடன் தொடங்கும் இந்நூலின் கடைசியிலும் குருவினிடமும் ஈசுவரனிடமும் பக்தி உள்ளவர்களுக்குத்தான் விரைவில் ஸுலபமாக ப்ரஹ்மஸாக்ஷாத்காரமும் முக்தி ஆனந்தமும் ஏற்படும் என்று உபதேசிக்கிறார்.]

முன்னுரை:—

श्रीहरिं परमानन्दमुपदेष्टारमीश्वरम् ।
व्यापकं सर्वलोकानां कारणं तं नमाम्यहम् ॥ १ ॥

*ஸ்ரீஹரிம் பரமாநந்தம் உபதேஷ்டாரமீச்வரம் |*
*வ்யாபகம் ஸர்வலோகாநாம் காரணம் தம் நமாம்யஹம் ||*

**परमानन्द**–உயர்ந்த ஆனந்தஸ்வரூபமாக இருப்பவரும், **उपदेष्टारं**–உபதேசம் செய்கிறவரும், **ईश्वरं**–அடக்கி ஆள்பவரும், **व्यापकं**–எங்கும் நிறைந்திருப்பவரும், **सर्वलोकानां**–எல்லா உலகங்களுக்கும், **कारणं**–காரணமாக இருப்பவருமான, **तं**–அந்த (ஸர்வோத்கிருஷ்டரான), **श्रीहरिं**–ஸ்ரீ ஹரியை, **अहं**–நான், **नमामि**–வணங்குகிறேன்.

பரமாநந்த ஸ்வரூபியான ஸ்ரீ ஹரியை நான் நமஸ்கரிக்கிறேன். அவரே குரு. அவரே ஈசுவரர். எல்லா உலகங்களையும் வியாபித்திருப்பவரும் அவைகளுக்குக் காரணமாயிருப்பவரும் அவரே. (1)

अपरोक्षानुभूतिर्वै प्रोच्यते मोक्षसिद्धये ।
सद्भिरेषा प्रयत्नेन वीक्षणीया मुहुर्मुहुः ॥ २ ॥

*அபரோக்ஷானுபூதிர் வை ப்ரோச்யதே மோக்ஷஸித்தயே |*
*ஸத்பிரேஷா ப்ரயத்நேந வீக்ஷணீயா முஹுர்முஹு: ||*

**मोक्षसिद्धये**–முக்தி கிடைப்பதற்காக, **अपरोक्षानुभूतिर्वै**–ப்ரஹ்மஸாக்ஷாத்காரானுபவத்தை விளக்கும் அபரோக்ஷானுபூதி என்ற நூல், **प्रोच्यते**–நன்கு சொல்லப்படுகிறது. **एषा**–இது, **सद्भिः**–ஸாதுக்களால், **प्रयत्नेन**–முயற்சியுடன், **मुहुर्मुहुः**–அடிக்கடி, **वीक्षणीया**–பார்க்கத்தகுந்தது. (சிந்திக்கத் தகுந்தது.)

மோக்ஷம் ஸித்திக்கவேண்டியதற்காக அபரோக்ஷானுபூதி (ப்ரஹ்மஸாக்ஷாத்கார அனுபவம்) இங்கு

தெளிவாகச் சொல்லப்படுகிறது. இதை பிரயத்தினத்தோடு ஸாதுக்கள் அடிக்கடி சிந்திக்கவேண்டியது. (2)

நான்கு ஸாதனங்கள் :—

स्ववर्णाश्रमधर्मेण तपसा हरितोषणात् ।
साधनं प्रभवेत् पुंसां वैराग्यादिचतुष्टयम् ॥ ३ ॥

ஸ்வவர்ணாச்ரமதர்மேண தபஸா ஹரிதோஷணாத்।
ஸாதனம் ப்ரபவேத் பும்ஸாம் வைராக்யாதிசதுஷ்டயம் ।

**स्ववर्णाश्रमधर्मेण**-தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் ஏற்பட்ட தர்மத்தினாலும், **तपसा**-தவத்தாலும், **हरितोषणात्**-ஈசுவரனை ஸந்தோஷப்படுத்துவதனால் (அவருடைய அனுக்ரஹத்தால்), **पुंसां**-மனிதர்களுக்கு, **वैराग्यादिचतुष्टयं**-வைராக்கியம் முதலான நான்கு, **साधनं**-ஸாதனம், **प्रभवेत्**-ஏற்படும்.

அவரவர்களுடைய வர்ணத்திற்கும் ஆசிரமத்திற்கும் ஏற்பட்ட தர்மானுஷ்டானத்தினாலும், தபஸ்ஸினாலும் பகவானை ஸந்தோஷப்படுத்துவதினால் மனுஷ்யர்களுக்கு வைராக்கியம் முதலான நான்கு ஸாதனங்கள் ஏற்படும். (3)

வைராக்கியம் :—

ब्रह्मादिस्थावरान्तेषु वैराग्यं विषयेष्वनु ।
यथैव काकविष्ठायां वैराग्यं तद्धि निर्मलम् ॥ ४ ॥

ப்ரஹ்மாதிஸ்தாவராந்தேஷு வைராக்யம் விஷயேஷ்வநு ।
யதைவ காகவிஷ்டாயாம் வைராக்யம் தத்தி நிர்மலம் ।

**यथैव काकविष्ठायां**-காகவிஷ்டையில்போல், **ब्रह्मादिस्थावरान्तेषु**-ப்ரஹ்மா (ப்ரஹ்மபதவி) முதல் ஸ்தாவரம்வரையிலுள்ள **विषयेष्वनु**-எல்லா விஷயங்களிலும் தொடர்ந்து, **वैराग्यं**-வெறுப்பானது (முதல் ஸாதனமாகும்). **तद्धि वैराग्यं**-அவ்விதமான வைராக்கியம்தான், **निर्मलं**-பரிசுத்தமானது.

பிரஹ்மா முதல் ஸ்தாவரம் வரை எல்லா விஷயங்களிலும் ஆசையின்மை வைராக்யமாகும். காக்கையின் விஷ்டையில் எவ்வளவு வெறுப்போ அவ்வளவு வெறுப்பு எல்லா விஷயங்களிலும் இருப்பதல்லவா சுத்தமான வைராக்கியம்? (4)

நித்யாநித்யவஸ்து விவேகம் :—

नित्यमात्मस्वरूपं हि दृश्यं तद्विपरीतगम् ।
एवं यो निश्चयः सम्यग्विवेको वस्तुनः स वै ॥ ५ ॥

நித்யமாத்மஸ்வரூபம் ஹி த்ருச்யம் தத் விபரீதகம் |
ஏவம் யோ நிச்சய: ஸம்யக் விவேகோ வஸ்துந: ஸ வை ||

**आत्मस्वरूपं**-ஆத்ம ஸ்வரூபம், **नित्यं**-நித்யமானது. **दृश्यं**-பார்க்கப்படுவது (அநாத்மவஸ்து). **तद्विपरीतगं हि**-அதற்கு எதிரிடையானதல்லவா (அநித்யமல்லவா). **एवं**-இவ்விதமான, **यः**-எந்த, **सम्यक्**-திடமான, **निश्चयः**-தீர்மானமோ, **स वै**-அதுதான், **वस्तुनः**-வஸ்துவின், **विवेकः**-விவேகம்.

ஆத்ம ஸ்வரூபம் தான் நித்யம். பார்க்கப்படுவதெல்லாம் அதற்கு விபரீதமான தன்மை உடையது (அநித்யம்). இவ்விதம் திடமாகத் தீர்மானமேற்படுவதே "வஸ்து விவேகம்" (பகுத்தறிவு) ஆகும். (5)

சமாதி ஷட்கம்—சமம், தமம் :—

सदैव वासनात्यागः शमोऽयमिति शब्दितः ।
निग्रहो बाह्यवृत्तीनां दम इत्यभिधीयते ॥ ६ ॥

ஸதைவ வாஸநாத்யாக: ஶமோऽயமிதி ஶப்தித: |
நிக்ரஹோ பாஹ்யவ்ருத்தீநாம் தம இத்யபிதீயதே ||

**सदैव**-எப்பொழுதுமே, **वासनात्यागः**-வாஸனையை விட்டுவிடுவது, **शमोयमिति**-இது சமம் என்று, **शब्दितः**-சொல்லப்

பட்டது. बाह्यवृत्तीनां-வெளியில் செல்லும் புலன்களின் வியாபாரங்களை, निग्रहः-அடக்குவது, दम इति-தமம் என்று अभिधीयते-சொல்லப்படுகிறது.

எப்பொழுதுமே வாஸனைகளை விட்டுவிடுதல் "சமம்" என்று சொல்லப்படும். வெளியில் போகும் விருத்திகளை நிக்ரஹம் செய்வது "தமம்" என்று சொல்லப்படுகிறது. (ஒருதடவை அனுபவித்த விஷயத்தை மறுபடியும் அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையைத் தூண்டும் ஸம்ஸ்காரம் 'வாஸனை' எனப்படும்.) (6)

உபரதி, திதிக்ஷை :—

विषयेभ्यः परावृत्तिः परमोपरतिर्हि सा ।
सहनं सर्वदुःखानां तितिक्षा सा शुभा मता ॥ ७ ॥

விஷயேப்ய : பராவ்ருத்தி : பரமோபரதிர்ஹி ஸா |
ஸஹநம் ஸர்வதுக்காநாம் திதிக்ஷா ஸா சுபா மதா ||

विषयेभ्यः-சப்தம் முதலான விஷயங்களிலிருந்து, परावृत्तिः-(இந்திரியங்களின்) திரும்புதல், परमा-சிறந்த, सा-அந்த, उपरतिर्हि-உபரதியல்லவா! सर्वदुःखानां-எல்லாத் துன்பங்களையும், सहनं-பொறுத்துக்கொள்வது, शुभा-சுபமான सा-அந்த, तितिक्षा-பொறுமையாக, मता-எண்ணப் பட்டிருக்கிறது.

விஷயங்களிலிருந்து திரும்புதல் சிலாக்யமான 'உபரதி' ஆகும். எல்லா துக்கங்களையும் பொறுத்துக்கொள்ளுதல் சுபமான "திதிக்ஷை" என்று எண்ணப்படுகிறது. (7)

ச்ரத்தை, ஸமாதானம் :—

निगमाचार्यवाक्येषु भक्तिः श्रद्धेति विश्रुता ।
चित्तैकाग्र्यं तु सल्लक्ष्ये समाधानमिति स्मृतम् ॥ ८ ॥

நிகமாசார்யவாக்யேஷு பக்தி : ச்ரத்தேதி விச்ருதா |
சித்தைகாக்ர்யம் து ஸல்லக்ஷ்யே ஸமாதானமிதி ஸ்ம்ருதம் ||

**निगमाचार्यवाक्येषु**-உபநிஷத்திலும், குருவின் வார்த்தைகளிலும், **भक्तिः**-நம்பிக்கையானது, **श्रद्धा**-சிரத்தை, **इति**-என்பது, **विश्रुता**-பிரஸித்தம். **सल्लक्ष्ये**-பிரஹ்மமென்ற லக்ஷ்யத்தில், **चित्तैकाग्र्यं तु**-மனம் ஒருமுகமாக நிலைத்திருத்தலோவெனில், **समाधानं**-ஸமாதானம், **इति**-என்று, **स्मृतं**-எண்ணப்பட்டிருக்கிறது.

வேத வாக்யங்களிலும் குருவின் வார்த்தைகளிலும் உள்ள விசுவாசம் "சிரத்தை" என்பது பிரஸித்தம். ஸத் (பிரஹ்மம்) ஆகிற குறியில் மனதை ஒரு முகமாக நிலை நிறுத்துதல் "ஸமாதானம்" என்று எண்ணப்படுகிறது.

முமுக்ஷுத்வம் :—

संसारबन्धनिर्मुक्तिः कथं स्यान्मे दयानिधे ।
इति या सुदृढा बुद्धिर्वक्तव्या सा मुमुक्षुता ॥ ९ ॥

*ஸம்ஸாரபந்தநிர்முக்தி: கதம் ஸ்யான் மே தயாநிதே ।*
*இதி யா ஸுத்ருடா புத்திர் வக்தவ்யா ஸா முமுக்ஷுதா ।*

**दयानिधे**-கருணைக்கிருப்பிடமானவரே ! **संसारबन्धनिर्मुक्तिः**-ஸம்ஸாரமென்னும் கட்டிலிருந்து விடுதலை, **मे**-எனக்கு, **कथं स्यात्**-எப்படி ஏற்படும், **इति**-என்ற, **या**-யாதொரு, **सुदृढा**-நன்கு திடமான, **बुद्धिः**-எண்ணமுண்டோ, **सा**-அது, **मुमुक्षुता**-முமுக்ஷுதையாக, **वक्तव्या**-சொல்லத்தக்கது.

ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து எனக்கு எப்படி, ஹே தயாநிதே, விடுதலை கிடைக்கும் என்று நல்ல திடமான எண்ணம் எதுவோ அதை "முமுக்ஷுதா" என்று சொல்ல வேண்டும். (9)

தத்வ விசாரம் :—

उक्तसाधनयुक्तेन विचारः पुरुषेण हि ।
कर्तव्यो ज्ञानसिद्ध्यर्थमात्मनः शुभमिच्छता ॥ १० ॥

உக்தஸாதநயுக்தேந விசார: புருஷேண ஹி |
கர்த்தவ்யோ ஞானஸித்த்யர்த்தமாத்மந: ஶுபமிச்சதா ||

**उक्तसाधनयुक्तेन**-கீழே சொல்லப்பட்ட ஸாதனங்களுடன் கூடியவனும், **आत्मनः**-தனக்கு, **शुभं**-நன்மையை, **इच्छता**-விரும்புகின்றவனுமான, **पुरुषेण**-புருஷனால், **ज्ञानसिध्यर्थं**-ஞானம் ஏற்படுவதற்காக, **विचारः**-விசாரம், **कर्तव्यो हि**-செய்யத்தகுந்ததல்லவா!

மேலே சொல்லப்பட்ட (விவேகம், வைராக்யம், சமாதி ஷட்கம், முமுக்ஷுதா) ஸாதனங்களோடுகூடின மனுஷ்யன் தனக்கு க்ஷேமத்தை வேண்டுபவனாய் ஞானம் ஸித்திப்பதற்காக விசாரம் செய்யவேண்டும். (10)

नोत्पद्यते विना ज्ञानं विचारेणान्यसाधनैः ।
यथा पदार्थभानं हि प्रकाशेन विना क्वचित् ॥ ११ ॥

நோத்பத்யதே விநா ஞாநம் விசாரேணாந்யஸாதனை: |
யதா பதார்த்தபாநம் ஹி ப்ரகாஶேந விநா க்வசித் ||

**यथा**-எப்படி, **प्रकाशेन विना**-வெளிச்சமில்லாமல், **क्वचित्**-ஒரு இடத்திலும், **पदार्थभानं**-வஸ்துக்களின் தோற்றம், **नोत्पद्यते हि**-ஏற்படுவதில்லையோ (அவ்விதமே), **विचारेण विना**-விசாரமில்லாமல், **अन्यसाधनैः**-வேறு ஸாதனங்களால், **ज्ञानं**-ஞானம், **नोत्पद्यते**-உண்டாகிறதில்லை.

எவ்விதம் வெளிச்சமில்லாமல் போனால் பதார்த்தங்கள் பிரகாசிக்காதோ, அவ்விதமே விசாரத்தைத் தவிர வேறு ஸாதனங்களினால் ஞானம் உண்டாகாது. (11)

कोऽहं कथमिदं जातं को वा कर्ताऽस्य विद्यते ।
उपादानं किमस्तीह विचारः सोऽयमीदृशः ॥ १२ ॥

கோऽஹம் கதமிதம் ஜாதம் கோ வா கர்த்தாऽஸ்ய வித்யதே |
உபாதானம் கிமஸ்தீஹ விசார: ஸோऽயமீத்ருஶ: ||

अहं-நான், कः-யார்? इदं-இந்த ஜகத், कथं जातं-எப்படி உண்டானது? अस्य-இதற்கு, कर्ता-கர்த்தாவாக (உண்டு பண்ணினவராக), को वा-யார், विद्यते-இருக்கிறார்? इह-இங்கு, उपादानं-உபாதான காரணமாக, किं अस्ति-எது இருக்கிறது, ईदृशः-இப்பேற்பட்ட, अयं-இது, सः विचारः-அந்த விசாரம்.

"நான் யார்? இது (ஜகத்) எப்படி ஏற்பட்டது? இதை உண்டுபண்ணினவராக யார் இருக்கிறார்? இது எதைக் கொண்டு செய்யப்பட்டிருக்கிறது?" இவ்விதம் ஆலோசிப்பதுதான் விசாரம் என்பது. (12)

नाहं भूतगणो देहो नाहं चाक्षगणस्तथा ।
एतद्विलक्षणः कश्चिद्विचारः सोऽयमीदृशः ॥ १३ ॥

நாஹம் பூதகணோ தேஹோ நாஹம் சாக்ஷகணஸ்ததா ।
ஏதத்விலக்ஷண: கச்சித் விசார: ஸோயமீத்ருஶ: ॥

अहं-நான், भूतगणः-ஐந்து பூதங்களின் கூட்டமான, देहः-சரீரமாக, न-இல்லை. तथा-அவ்விதமே, अहं-நான், अक्षगणश्च-இந்திரியங்களின் கூட்டமாகவும், न-இல்லை. एतद्विलक्षणः-இவைகளைக்காட்டிலும் மாறுபட்ட, कश्चित्-ஒருவன் (நான்), ईदृशः-இவ்விதமான, अयं-இது, सः विचारः-அந்த விசாரம்.

"பஞ்ச பூதங்களின் கூட்டமான இந்த சரீரம் நான் அல்ல. அப்படியே இந்திரியங்களின் கூட்டமும் நான் அல்ல. இவைகளுக்கெல்லாம் மாறுபட்ட லக்ஷணத்தோடு கூடிய ஒருவனே நான்" இவ்விதம் ஆலோசிப்பது தான் விசாரம் என்பது. (13)

अज्ञानप्रभवं सर्वं ज्ञानेन प्रविलीयते ।
संकल्पो विविधः कर्ता विचारः सोऽयमीदृशः ॥ १४ ॥

அக்ஞானப்ரபவம் ஸர்வம் ஞானேந ப்ரவிலீயதே ।
ஸங்கல்போ விவித: கர்த்தா விசார: ஸோயமீத்ருஶ: ॥

अज्ञानप्रभवं-அக்ஞானத்திலிருந்து உண்டான, सर्वं-எல்லாம், ज्ञानेन-ஞானத்தால், प्रविलीयते-மறைந்து போகிறது. विविधः-பலவிதமான, संकल्पः-ஸங்கல்பம், कर्ता-கர்த்தா. ईदृशः-இப்பேற்பட்ட, अयं-இது, सः-அந்த, विचारः-விசாரம்.

"யாவற்றும் அக்ஞானத்தினுல் ஏற்பட்டவை. ஞான மேற்பட்டவுடன் நன்ருக மறைந்துவிடும். பலவிதமான ஸங்கல்பமே எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிறது" இவ்விதம் ஆலோசிப்பது விசாரம் (14)

एतयोर्यदुपादानमेकं सूक्ष्मं सदव्ययम् ।
यथैव मृद्घटादीनां विचारः सोऽयमीदृशः ॥ १५ ॥

ஏதயோர் யதுபாதானமேகம் ஸூக்ஷ்மம் ஸதவ்யயம் |
யதைவ ம்ருத் கடாதீநாம் விசார : ஸோயமீத்ருஸ : ||

घटादीनां-குடம் முதலியவற்றிற்கு, मृत्-மண், यथैव-எப்படியோ (உபாதானமோ) அதுபோல், यत्-எது, एकं-ஒன்ருகவும், सूक्ष्मं-ஸூக்ஷ்மமாகவும், सत्-ஸத்தாகவும், अव्ययं-குறைவற்றதாகவும் உள்ளதோ அது, एतयोः-இவ் விரண்டிற்கும், उपादानं-உபாதான காரணம். ईदृशः- இப் பேர்ப்பட்ட, अयं-இது, सः-அந்த, विचारः-விசாரம்.

"இவ்விரண்டிற்கும் உபாதானமாயிருப்பது ஒன்ருக வும், ஸூக்ஷ்மமாகவும், ஸத்தாகவும், குறைவற்றதாகவும் இருக்கும். எப்படி குடம் முதலானவைகளுக்கு மண் உபா தானமோ அப்படியே" இவ்விதம் ஆலோசிப்பது விசாரம்.

अहमेकोऽपि सूक्ष्मश्च ज्ञाता साक्षी सदव्ययः ।
तदहं नात्र संदेहो विचारः सोऽयमीदृशः ॥ १६ ॥

அஹமேகோபி ஸூக்ஷ்மச்ச ஞாதா ஸாக்ஷீ ஸதவ்யய : |
ததஹம் நாத்ர ஸந்தேஹோ விசார: ஸோயமீத்ருஸ : ||

अहमपि-நானும், एकः-ஒருவனுகவும், सूक्ष्मश्च-ஸூக்ஷ்ம ஞகவும், ज्ञाता-அறிகிறவனுகவும், साक्षी-ஸாக்ஷியாகவும், सत्-ஸத்தாகவும், अव्ययः-குறைவற்றவனுகவும் இருக்கிறேன். (ஆகையால்), अहं-நான், तत्-அந்த ஜகத்காரண வஸ்துதான். अत्र-இதில், न सन्देहः-ஸந்தேஹமில்லே. ईदृशः-இவ்விதமான अयं-இது, सः-அந்த, विचारः-விசாரம்.

"நான் ஒருவனுகவும் ஸூக்ஷ்மனுகவும், அறிகிறவனுகவும் ஸாக்ஷியாகவும் குறைவற்ற ஸத்ரூபனுகவும் இருக்கிறேன். நான் மேலே சொன்ன ஜகத்தின் உபாதான காரணமான பரமாத்மாதான் இதில் ஸந்தேஹமில்லே. ஜகத்காரண வஸ்து எப்படி ஒன்ருகவும் ஸூக்ஷ்மமாகவும் அறிகிறவனுகவும், ஸாக்ஷியாகவும், ஸத்தாகவும் அவ்யயமாகவுமிருக்கிறதோ அவ்விதமாகவே நானுமிருப்பதால் நானேதான் அவர். இவ்விதம் ஆலோசிப்பது விசாரம்.

அக்ஞானஸ்வரூபம் :—

आत्मा विनिष्कलो ह्येको देहो बहुभिरावृतः ।
तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ १७ ॥

ஆத்மா விநிஷ்கலோ ஹ்யேகோ தேஹோ பஹுபிராவ்ருத: ।
தயோரைக்யம் ப்ரபச்யந்தி கிமஜ்ஞாநமத: பரம் ॥

आत्मा-ஆத்மாவானது, विनिष्कलः-எவ்விதப் பிரிவுமற்ற एको हि-ஒரே வஸ்துவல்லவா! देहः-சரீரம், बहुभिः-பல வேறுபாடுகளோடு, आवृतः-கூடியது. तयोः-அந்த ஆத்மா, தேஹம் இரண்டிற்கும், ऐक्यं-ஒன்ருக இருக்கும் தன்மையை, प्रपश्यन्ति-பார்க்கின்றனர். अतः-இதைக்காட்டிலும், परं-மேலான, अज्ञानं-அக்ஞானம், किं-என்ன இருக்கிறது?

"ஆத்மா எவ்விதப் பிரிவுமற்று ஒருவனுயிருப்பவர். தேஹமோ பலவித வேறுபாடுகளுடன் பலவாக உள்ளது" அப்படியிருந்தும் இரண்டையும் ஒருமைப்படுத்திப் பார்க்கிருர்கள், இதைவிட மேலான அக்ஞானம் உண்டா? (17)

**आत्मा नियामकश्चान्तर्देहो बाह्यो नियम्यकः ।**
**तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ १८ ॥**

ஆத்மா நியாமகச்சாந்தர் தேஹோ பாஹ்யோ நியம்யக: |
தயோரைக்யம் ப்ரபச்யந்தி கிமஞாநமத: பரம் ||

**आत्मा**-ஆத்மாவானவர், **अन्तः**-உள்ளே இருந்து, **नियामकः**-ஏவுகிறவர். **बाह्यः**-வெளிப்பட்டதான, **देहः**-தேஹம் **नियम्यकः**-ஏவப்படுகிறது. **तयोः**-அவ்விரண்டிற்கும், **ऐक्यं**-ஒருமையை, **प्रपश्यन्ति**-பார்க்கின்றனர். **अतः**-இதைவிட, **परं**-மேலான, **अज्ञानं**-அக்ஞானம், **किम्**-என்ன இருக்கிறது?

"ஆத்மா ஏவுகிறவர், உள்ளேயிருப்பவர். தேஹமோ ஏவப்படும் பதார்த்தம், வெளியில் உள்ளது" அப்படி இருந்தும் அவ்விரண்டையும் ஒன்ருகப் பார்க்கிருர்கள். இதைவிட அக்ஞானம் வேறு என்ன உண்டு? (18)

**आत्मा ज्ञानमयः पुण्यो देहो मांसमयोऽशुचिः ।**
**तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ १९ ॥**

ஆத்மா ஞாநமய: புண்யோ தேஹோ மாம்ஸமயோऽசுசி: |
தயோரைக்யம் ப்ரபச்யந்தி கிமஞானமத: பரம் ||

**आत्मा**-ஆத்மாவானது, **ज्ञानमयः**-ஞானஸ்வரூபம். **पुण्यः**-பரிசுத்தமானது, **देहः**-சரீரம், **मांसमयः**-மாம்ஸ உருக்கொண்டது. **अशुचिः**-அசுத்தமானது. **तयोः**-அவ்விரண்டிற்கும், **ऐक्यं**-ஒருமையை, **प्रपश्यन्ति**-பார்க்கின்றனர். **अतः**-இதைக்காட்டிலும், **परं**-மேலான, **अज्ञानं**-அக்ஞானம், **किं**-என்ன இருக்கிறது?

"ஆத்மா ஞானஸ்வரூபம், சுத்தமானவர். தேஹமோ மாம்ஸத்தால் செய்யப்பட்டது, அசுத்தமானது." அப்படி இருந்தும் அவ்விரண்டையும் ஒன்ருகப்பார்க்கிருர்கள். இதைவிட அக்ஞானம் வேறு என்ன உண்டு? (19)

आत्मा प्रकाशकः स्वच्छो देहस्तामस उच्यते ।
तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ २० ॥

ஆத்மா ப்ரகாஶக: ஸ்வச்சோ தேஹஸ்தாமஸ உச்யதே ||
தயோரைக்யம் ப்ரபச்யந்தி கிமஞ்ஞானமத: பரம் ||

आत्मा-ஆத்மா, प्रकाशकः-விளங்கவைப்பவர், स्वच्छः-நிர்மலர், देहः-சரீரம், तामसः-இருள் (அழுக்கு) உள்ளதாக, उच्यते-சொல்லப்படுகிறது (அப்படியிருந்தும்), तयोः-அவ்விரண்டிற்கும், ऐक्यं-ஒருமையை, प्रपश्यन्ति-பார்க்கின்றனர், अतः परं-இதைவிட மேலான, अज्ञानं-அக்ஞானம், किं-என்ன இருக்கிறது?

"ஆத்மா விளங்க வைப்பவர், நன்கு தெளிவானவர். தேஹமோ இருட்டடைந்தது எனப்படுகிறது" அப்படி இருந்தும் இரண்டையும் ஒன்ருக பார்க்கிருர்கள். இதைவிட வேறு அக்ஞானம் என்ன உண்டு? (20)

आत्मा नित्यो हि सद्रूपो देहोऽनित्यो ह्यसन्मयः ।
तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ २१ ॥

ஆத்மா நித்யோ ஹி ஸத்ருபோ தேஹோऽநித்யோ ஹ்யஸன்மய: |
தயோரைக்யம் ப்ரபச்யந்தி கிமஞ்ஞானமத: பரம் ||

आत्मा-ஆத்மா, नित्यः-அழிவற்றவர், सद्रूपो हि-ஸத்வஸ்து. देहः-தேஹம், अनित्यः-அழியக்கூடியது. असन्मयः-அஸத்வஸ்து, तयोः-அவ்விரண்டிற்கும், ऐक्यं-ஒருமையை, प्रपश्यन्ति-பார்க்கின்றனர். अतः-இதைக்காட்டிலும், परं-மேலான, अज्ञानं-அக்ஞானம், किं-என்ன இருக்கிறது?

ஆத்மாவோ நித்யர், ஸத்ஸ்வரூபர். தேஹமோ அநித்யம், அஸத் ஸ்வரூபம்" அப்படியிருந்தும் இவ்விரண்டையும் ஒன்ருகப் பார்க்கிருர்கள், இதைவிட வேறு அக்ஞானம் என்ன உண்டு? (21)

आत्मनस्तत्प्रकाशत्वं यत्पदार्थावभासनम् ।
नाग्न्यादिदीप्तिवद्दीप्तिर्भवत्यान्ध्यं यतो निशि ॥ २२ ॥

ஆத்மநஸ்தத் ப்ரகாஶத்வம் யத் பதார்த்தாவபாஸநம் |
நாக்ந்யாதிதீப்திவத் தீப்திர் பவத்யாந்த்யம் யதோநிஶி ||

**पदार्थावभासनं यत्** -பொருள்களை விளங்கும்படி செய்வது என்பது யாதொன்று உண்டோ, **तत्** -அதுதான், **आत्मनः**- ஆத்மாவின், **प्रकाशत्वं**-பிரகாசத்தன்மை. **अग्न्यादिदीप्तिवत्** - அக்னி முதலியவைகளின் வெளிச்சம்போல், **दीप्तिः**-வெளிச்சம், **न**-(ஆத்மாவின் பிரகாசம்) அல்ல. **यतः**-எதனால் (வெளிச்சம்) இல்லாவிட்டால், **निशि**-இரவில் (இருளில்), **आन्ध्यं**-குருட்டுத்தனம், **भवति**-ஏற்படுகிறதோ.

மற்றப்பதார்த்தங்களை தெரியும்படி செய்வதே ஆத்மாவின் பிரகாசத்தன்மை. ஆனால் அந்தப்பிரகாசம் அக்னி முதலானவைகளின் பிரகாசம் போலுள்ளதல்ல, (அவைகள் இல்லையானால்) ராத்திரியில் இருட்டாகிவிடுகிறதே (ஆத்மா எக்காலத்திலும் இல்லையென்று ஆகாததினால் அதன் பிரகாசம் எப்பொழுதும் குன்றாது.) (22)

देहोऽहमित्ययं मूढो मत्वा तिष्ठत्यहो जनः ।
ममायमित्यपि ज्ञात्वा घटद्रष्टेव सर्वदा ॥ २३ ॥

தேஹோऽஹமித்யயம் மூடோ மத்வா திஷ்டத்யஹோ ஜநः|
மமாயமித்யபி ஞாத்வா கடத்ரஷ்டேவ ஸர்வதா ||

**घटद्रष्टेव**-குடத்தைப்பார்ப்பவன்போல, **अयं**-இது, **मम**- என்னுடையது, **इति**-என்று, **सर्वदा**-எப்போதும், **ज्ञात्वाऽपि**- அறிந்துகொண்டிருந்தபோதிலும்கூட, **अयं**-இந்த, **मूढः**- முட்டாளான, **जनः**-மனிதன், **अहं**-நான், **देहः**-சரீரம், **इति**- என்று, **मत्वा**-எண்ணிக்கொண்டு, **तिष्ठति**-நிற்கிறானே, **अहो**- என்ன ஆச்சர்யம்!

குடத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறவன் போல 'இது என்னுடைய சரீரம்'' என்று எப்பொழுதும் தெரிந்து கொண்டிருக்கும்போதே, இந்த மூடனான மனுஷ்யன் "நான் சரீரம்'' என்று நினைத்துக்கொண்டு நிற்கிறானே, என்ன ஆச்சர்யம்! (23)

ஞானஸ்வரூபம் :—

**ब्रह्मैवाहं समः शान्तः सच्चिदानन्दलक्षणः ।**
**नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २४ ॥**

*ப்ரஹ்மைவாஹம் ஸம: ஶாந்த: ஸச்சிதானந்தலக்ஷண: ।*
*நாஹம் தேஹோ ஹ்யஸத்ரூபோ ஞானமித்யுச்யதே புதை: ॥*

**अहं**-நான், **समः**—ஸமமானதும், **शान्तः**-சாந்தமானதும், **सच्चिदानन्दलक्षणः**-ஸச்சிதானந்தஸ்வரூபமுமான, **ब्रह्मैव**—ப்ரஹ்மமே. **अहं**-நான், **असद्रूपः**—அஸத்ஸ்வரூபமான, **देहः न**—சரீரமல்ல. (இது) **ज्ञानमिति**-ஞானமென்று, **बुधैः**-அறிவாளிகளால், **उच्यते**-சொல்லப்படுகிறது

"நான் பிரஹ்மமே, ஸமமானவன், சாந்தன், ஸத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் இருக்கும் தன்மை உள்ளவன். நான் அஸத்ஸ்வரூபமாயிருக்கும் தேஹமல்ல'' என்று உணர்வதையே ஞானமென்று அறிவாளிகள் சொல்கிறார்கள். (24)

**निर्विकारो निराकारो निरवद्योऽहमव्ययः ।**
**नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २५ ॥**

*நிர்விகாரோ நிராகாரோ நிரவத்யோऽஹமவ்யய : ।*
*நாஹம் தேஹோ ஹ்யஸத்ரூபோ ஞானமித்யுச்யதே புதை: ॥*

**अहं**-நான், **निर्विकारः**-மாறுதலற்றவன். **निराकारः**-உருவமற்றவன். **निरवद्यः**-தோஷங்களற்றவன். **अव्ययः**-குறைவு அற்றவன். **असद्रूपः**—அஸத்ஸ்வரூபமான, **देहः**-சரீரம், **नाहं**-

நான் அல்ல. (இது) ज्ञानमिति-ஞானமென்று, बुधैः-அறிவாளிகளால், उच्यते-சொல்லப்படுகிறது.

"நான் மாறுதலற்றவன், உருவமற்றவன், தோஷமற்றவன், குறைவற்றவன், அஸத் ஸ்வரூபமாயுள்ள தேஹம் நான் அல்ல" என்பதே ஞானமென்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. (25)

निरामयो निराभासो निर्विकल्पोऽहमाततः ।
नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २६ ॥

நிராமயோ நிராபாஸோ நிர்விகல்போ஽ஹமாததः ।
நாஹம் தேஹோ ஹ்யஸத்ரூபோ ஞானமித்யுச்யதே புதை: ॥

अहं-நான், निरामयः-வியாதியற்றவன், निराभासः-தோற்றமற்றவன். निर्विकल्पः-விகல்பங்களற்றவன், आततः-எங்கும் பரவியிருப்பவன். अहं-நான், असद्रूपः-அஸத்ஸ்வரூபமான, देहः न-தேஹம் அல்ல (இது), ज्ञानमिति-ஞானமென்று बुधैः-வித்வான்களால், उच्यते-சொல்லப்படுகிறது.

"நான் வியாதியற்றவன், தோற்றமற்றவன், ஸந்தேஹிக்க இடமற்றவன், எங்கும் பரவியிருப்பவன். நான் அஸத் ஸ்வரூபமாயிருக்கும் தேஹம் அல்ல" இதுவே ஞானமென்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. (26)

निर्गुणो निष्क्रियो नित्यो नित्यमुक्तोऽहमच्युतः ।
नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २७ ॥

நிர்குணோ நிஷ்க்ரியோ நித்யோ நித்யமுக்தோऽஹமச்யுத: ।
நாஹம் தேஹோ ஹ்யஸத்ரூபோ ஞானமித்யுச்யதே புதை: ॥

अहं-நான், निर्गुणः-குணங்களற்றவன், निष्क्रियः-க்ரியைகள் அற்றவன், नित्यः-அழிவற்றவன். नित्यमुक्तः-எப்பொழுதும் முக்தன், अच्युतः-தன் நிலையிலிருந்து நழுவாதவன்.

**अहं**-நான், **असद्रूपः**-அஸத்ஸ்வரூபமான, **देहो न**-சரீரம் அல்ல (இது), **ज्ञानमिति**-ஞானமென்று, **बुधैः**-அறிவாளிகளால், **उच्यते**-சொல்லப்படுகிறது.

"நான் குணமற்றவன், கிரியையற்றவன், நித்யன், எப்பொழுதுமே முக்தன், நழுவாதவன். நான் அஸத்ருபமான தேஹம் அல்ல" என்பதே ஞானமென்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. (27)

निर्मलो निश्चलोऽनन्तः शुद्धोऽहमजरोऽमरः ।
नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २८ ॥

நிர்மலோ நிச்சலோऽநந்த: ஶுத்தோऽஹமஜரோऽமர: ।
நாஹம் தேஹோ ஹ்யஸத்ரூபோ ஞானமித்யுச்யதே புதை: ॥

**अहं**-நான், **निर्मलः**-அழுக்கற்றவன், **निश्चलः**-அசைவற்றவன், **अनन्तः**-முடிவற்றவன், **शुद्धः**-பரிசுத்தன், **अजरः**-மூப்பு அற்றவன், **अमरः**-சாவு அற்றவன், **अहं**-நான், **असद्रूपः**-அஸத்ஸ்வரூபமான, **देहो न**-தேஹமல்ல (இது), **बुधैः**-வித்வான்களால், **ज्ञानमिति**-ஞானமென்று, **उच्यते**-சொல்லப்படுகிறது.

"நான் அழுக்கற்றவன், அசைவற்றவன், முடிவற்றவன், சுத்தன், ஜரையற்றவன், மரணமற்றவன். நான் அஸத்ருபமான தேஹம் அல்ல" என்பதே ஞானம் என்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. (28)

தேஹம் ஆத்மாவல்ல :—

(அ) பிரதிவாதி கேட்கிறான் :—

स्वदेहं शोभनं त्यक्त्वा पुरुषाख्यं च संमतम् ।
किं मूर्ख शून्यमात्मानं देहातीतं करोषि भो ॥ २९ ॥

ஸ்வதேஹம் ஶோபநம் த்யக்த்வா புருஷாக்யம் ச ஸம்மதம் ।
கிம் மூர்க்க ஶூந்யமாத்மாநம் தேஹாதீதம் கரோஷி போ ॥

**शोभनं**-அழகானதும், **पुरुषाख्यं च**-புருஷன் என்று பெயருள்ளதும், **संमतं**- (எல்லோராலும்) ஒப்புக்கொள்ளப்பட்டதுமான, **स्वदेहं**-தனது சரீரத்தை, **त्यक्त्वा**-விட்டுவிட்டு, **भो-मूर्ख**-ஏ முட்டாளே !, **देहातीतं**-தேஹத்திற்கு அப்பால்பட்டதான, **शून्यं**-சூன்யத்தை (ஒன்றுமில்லாததை), **आत्मानं**-ஆத்மாவாக, **किं करोषि**-ஏன் செய்கிருய் ?

புருஷன் என்று அழைக்கப்படுவதாயும் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதாகவும், அழகாகவும் இருக்கிற தன் தேஹத்தை விட்டு விட்டு, ஏ அசடே, தேகத்திற்கெல்லாம் அப்பால்பட்டதாக இருக்கும் வெறும் சூன்யத்தை ஆத்மாவாகச் செய்துவிடப் பார்க்கிறீரா ? (29)

(அ) பதில் கூறுகிருர் :—

**स्वात्मानं शृणु मूर्ख त्वं श्रुत्या युक्त्या च पूरुषम् ।**
**देहातीतं सदाकारं सुदुर्दर्शं भवादृशाम् ॥ ३० ॥**

ஸ்வாத்மாநம் ச்ருணு மூர்க்க த்வம் ச்ருத்யா யுக்த்யா ச பூருஷம் ।
தேஹாதீதம் ஸதாகாரம் ஸுதுர்தர்ஶம் பவாத்ருஶாம் ॥

**मूर्ख**-முட்டாளே, **देहातीतं**-தேஹத்திற்கு அப்பால்பட்டதும், **सदाकारं**- ஸத்ஸ்வரூபமாயும், **भवादृशां**- உங்களைப் போன்றவர்களுக்கு, **सुदुर्दर्शं**- ஸுலபமாக அறியமுடியாததும், **पूरुषं**-புருஷனுமான, **स्वात्मानं**-தன் ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றி, **श्रुत्या** – வேதத்தைக் கொண்டும், **युक्त्या च**-யுக்தியைக்கொண்டும், **त्वं शृणु**-(சொல்கிறேன்) நீ கேள்.

ஏ அசடே, உன்னுடைய ஆத்மாவைப் பற்றி வேதத்தின் மூலமாயும் யுக்தியினுலும் (சொல்கிறேன்) நீ கேள். புருஷன் என்கிற அந்த ஆத்மா தேஹங்களுக்கு அப்பால்பட்டவர், ஸத்தையே ஸ்வரூபமாயுடையவர், உங்களைப் போலுள்ளவர்களால் எளிதில் அறியப்படுவதற்கு முடியாதவர். (30)

अहंशब्देन विख्यात एक एव स्थितः परः ।
स्थूलस्त्वनेकतां प्राप्तः कथं स्याद्देहकः पुमान् ॥ ३१ ॥

அஹம்ஶப்தேந விக்யாத ஏக ஏவ ஸ்தித: பர: ।
ஸ்தூலஸ்த்வநேகதாம் ப்ராப்த: கதம் ஸ்யாத் தேஹக:
புமான் ॥

**अहंशब्देन**-'நான்' என்ற சப்தத்தால், **विख्यातः**-பிரஸித்த ரான ஆத்மா, **एक एव**-ஒருவராகவே, **स्थितः**-இருக்கிறார். **परः**-(அவர்) மேலானவர். **स्थूलस्तु**-ஸ்தூலமான சரீரமோ, **अनेकतां**-பலவாக இருக்கும் தன்மையை, **प्राप्तः**-அடைந்திருக் கிறது. **पुमान्**-புருஷன், **देहकः**-வெறுக்கத்தக்க சரீரமாக, **कथं स्यात्**-எப்படி இருக்கமுடியும்?

நான் என்ற சப்தத்தினால் நன்கு பிரஸித்தரானவர், ஒருவராகவே இருப்பவர், எல்லாவற்றிலும் மேலானவர். சரீரமோ ஸ்தூலம், பலவிதத் தன்மையை அடைந்துள்ளது. புருஷன் இந்த வெறுக்கத்தக்க தேஹமாக எப்படி இருக்க முடியும்? (31)

अहं द्रष्टृतया सिद्धो देहो दृश्यतया स्थितः ।
ममायमिति निर्देशात् कथं स्याद्देहकः पुमान् ॥ ३२ ॥

அஹம் த்ரஷ்ட்ருதயா ஸித்தோ தேஹோ த்ருச்யதயா ஸ்தித:।
மமாயமிதி நிர்தேஶாத் கதம் ஸ்யாத் தேஹக: புமான் ॥

**अहं**-நான் என்ற ஆத்மா, **द्रष्टृतया**-பார்க்கும் தன்மை உள்ளவனாக, **सिद्धः**-நிச்சயமாக இருக்கிறான். **देहः**-சரீரம், **दृश्यतया**-பார்க்கப்படும் தன்மை உள்ளதாக, **स्थितः**-இருக் கிறது. (மேலும்) **अयं**-இது, **मम**-என்னுடையது, **इति**-என்று **निर्देशात्**-குறிப்பிடுகிறபடியாலும், **देहकः**-வெறுக்கத்தக்க சரீரம், **पुमान्**-ஆத்மாவாக, **कथं स्यात्**-எப்படி இருக்கும்?

நான் பார்க்கிறவனாக இருப்பவன், தேஹம் பார்க்கப் படுவதாக இருக்கிறது. தவிரவும் "இது என்னுடையது"

என்று சுட்டிக்காட்ட முடிகிறது. அப்படியிருக்க புருஷன் இந்த வெறுக்கத்தக்க தேஹமாக எப்படி இருக்க முடியும்?

**अहं विकारहीनस्तु देहो नित्यं विकारवान् ।**
**इति प्रतीयते साक्षात्कथं स्याद्देहकः पुमान् ॥ ३३ ॥**

அஹம் விகாரஹீநஸ்து தேஹோ நித்யம் விகாரவான் ।
இதி ப்ரதீயதே ஸாக்ஷாத் கதம் ஸ்யாத் தேஹக: புமான் ॥

**अहं**-நான், **विकारहीनः**-மாறுதல் அடையாதவன், **देहस्तु** சரீரமோவெனில், **नित्यं**-எப்பொழுதும், **विकारवान्**-மாறுதலுள்ளது, **इति**-என்று, **साक्षात्**-நேரிடையாக, **प्रतीयते**-அறியப்படுகிறது (ஆகையால்), **पुमान्**-புருஷன், **देहकः**-வெறுக்கத்தக்க தேஹமாக, **कथं स्यात्**-எப்படியிருக்கும்.

நான் ஒருபொழுதும் மாறுபாடு அடையாமல் ஒரே நிலையிலிருப்பவன். சரீரமோ எப்பொழுதும் மாறுதல் அடைந்துகொண்டே இருக்கிறது. இந்த விஷயம் நேரிடையாக நமக்குத்தெரிகிறது. இத்தனை வித்யாஸம் இருக்க புருஷன் எப்படி தேஹமாக இருக்கக்கூடும்? (33)

**यस्मात् परमिति श्रुत्या तया पुरुषलक्षणम् ।**
**विनिर्णीतं विशुद्धेन कथं स्याद्देहकः पुमान् ॥ ३४ ॥**

யஸ்மாத் பரமிதி ச்ருத்யா தயா புருஷலக்ஷணம் ।
விநிர்ணீதம் விசுத்தேந கதம் ஸ்யாத் தேஹக: புமான் ॥

'**यस्मात्**-எதைக்காட்டிலும், **परं**-மேலானது (இல்லை)', **इति**-என்ற, **तया श्रुत्या**-அந்த சுருதி வாக்யத்தால், **पुरुषलक्षणं**-புருஷனின் ஸ்வரூபம், **विशुद्धेन**-பரிசுத்தமானதாக, **विनिर्णीतं**-நன்கு தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (அதனால்), **पुमान्**-அந்தப் புருஷன், **कथं**-எப்படி, **देहकः**-வெறுக்கத்தக்க தேஹமாக, **स्यात्**-இருக்கக்கூடும்?

அந்த வேதத்தினால் "எதற்கு மேலாக (ஒன்றும் கிடையாதோ)" என்று புருஷனுடைய லக்ஷணம் அதி

சுத்தத் தன்மையென்று நன்கு நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அந்த புருஷன் வெறுக்கத்தக்க தேஹமாய் எப்படி இருக்க முடியும்? (34)

**सर्वं पुरुष एवेति सूक्ते पुरुषसंज्ञिते ।**
**अप्युच्यते यतः श्रुत्या कथं स्याद्देहकः पुमान् ॥ ३५ ॥**

ஸர்வம் புருஷ ஏவேதி ஸூக்தே புருஷஸம்ஜ்ஞிதே ।
அப்யுச்யதே யத: சருத்யா கதம் ஸ்யாத் தேஹக: புமான் ॥

**पुरुषसंज्ञिते**-புருஷன் என்று பெயருள்ள, **सूक्तेऽपि**-ஸூக்தத்திலும் (புருஷஸூக்தத்திலும்), **सर्वं**-எல்லாம், **पुरुष एव**-புருஷன் தான், **इति**-என்று, **श्रुत्या**-சுருதியால், **यतः**-எந்தக் காரணத்தால், **उच्यते**-சொல்லப்படுகிறதோ (அதனுல்), **पुरुषः**-புருஷன், **देहकः**-வெறுக்கத்தக்க தேஹமாக, **कथं स्यात्**-எப்படி இருக்கும்?

புருஷ ஸூக்தத்திலும் வேதத்திலுல் "இது எல்லாம் புருஷனே" (पुरुष एवेदं सर्वम्) என்று சொல்லியிருக்கிறபோது புருஷன் இந்த அல்பதேஹமாக எப்படி இருக்கமுடியும்? (35)

**असङ्गः पुरुषः प्रोक्तो बृहदारण्यकेऽपि च ।**
**अनन्तमलसंसृष्टः कथं स्याद्देहकः पुमान् ॥ ३६ ॥**

அஸங்க: புருஷ: ப்ரோக்தோ ப்ருஹதாரண்யகேபி ச ।
அநந்தமலஸம்ஸ்ருஷ்ட: கதம் ஸ்யாத் தேஹக: புமான் ॥

**बृहदारण्यकेऽपि च**-பிருஹதாரண்யக உபநிஷத்திலும், **पुरुषः**-புருஷன், **असङ्गः**-ஒன்றிலும் ஸம்பந்தமில்லாதவனுக, **प्रोक्तः**-சொல்லப்பட்டிருக்கிறுன். (அப்படியிருக்க), **अनन्तमलसंसृष्टः**-எல்லையில்லாத அழுக்குகளுடன்கூடிய, **देहकः**-வெறுக்கத்தக்க தேஹமாக, **पुमान्**-புருஷன், **कथं स्यात्**-எப்படியிருக்கும்?

பிருஹதாரண்யகோபநிஷத்திலும் "இந்த புருஷன் எவ்விதப் பற்றுதலுமற்றவன்" (असङ्गो ह्ययं पुरुषः-बृह 4-3-16)

என்று சொல்லப்பட்டிருக்கிறன். எல்லையில்லாத மலங்களால் சேர்ந்து செய்யப்பட்டிருக்கும் இந்த வெறுக்கத்தக்க தேஹமாக புருஷன் எப்படி இருக்கமுடியும்? (36)

तत्रैव च समाख्यातः स्वयंज्योतिर्हि पूरुषः ।
जडः परप्रकाश्योऽयं कथं स्याद्देहकः पुमान् ॥ ३७ ॥

தத்ரைவ ச ஸமாக்யாத: ஸ்வயம்ஜ்யோதிர் ஹி பூருஷ:
ஜட: பரப்ரகாச்யோऽயம் கதம் ஸ்யாத் தேஹக: புமான் ॥

**तत्रैव च**-அங்கேயே, **पूरुषः**-புருஷன், **स्वयंज्योतिः**-ஸ்வயம்ஜ்யோதிஸ்வரூபமாக (பிறவஸ்துவால் பிரகாசிக்கப்படாமல் தானே பிரகாசித்துக்கொண்டு மற்றதைப் பிரகாசப்படுத்துவது ஸ்வயம்ஜ்யோதி எனப்படும்), **समाख्यातो हि**-சொல்லப்பட்டிருக்கிறனல்லவா? **जडः**-ஜடமாயும் (தான் பிரகாசிக்காமலும்), **परप्रकाश्यः**-வேருென்றுல் விளக்கப்படத்தக்கதாயுமுள்ள, **अयं**-இந்த, **देहकः**-வெறுக்கத்தக்க சரீரம், **कथं**-எப்படி, **पुमान्**-புருஷனுக, **स्यात्** இருக்கும்?

அந்த பிருஹதாரண்யக உபநிஷத்திலேயே "புருஷன் ஸ்வயம் ஜ்யோதி ஸ்வரூபன்" (**अत्रायं पुरुषः स्वयंज्योतिर्भवति -बृह** 4-3-9) என்று சொல்லப்பட்டிருக்கிறன். ஜடமாயும் வேருென்றினுல் விளக்கப்படவேண்டியதாயும் இருக்கிற இந்த வெறுக்கத்தக்க தேஹமாக புருஷன் எப்படி இருக்க முடியும்? (37)

प्रोक्तोऽपि कर्मकाण्डेन ह्यात्मा देहाद्विलक्षणः ।
नित्यश्च तत्फलं भुङ्क्ते देहपातादनन्तरम् ॥ ३८ ॥

ப்ரோக்தோऽபி கர்மகாண்டேன ஹ்யாத்மா தேஹாத் விலக்ஷண:
நித்யச்ச தத்பலம் புங்க்தே தேஹபாதாதநந்தரம் ॥

**कर्मकाण्डेनापि**-வேதத்திலுள்ள கர்மகாண்டத்திலும் கூட, **देहात् विलक्षणः**-தேஹத்தைக்காட்டிலும் மாறுபட்ட

ஸ்வபாவமுள்ளவனும், नित्यश्च-அழிவற்றவனுமான, आत्मा-ஆத்மாவானவன், देहपातादनन्तरं-தேஹம் விழுந்த பிறகு, तत्फलं-அதன் (கர்மாவின்) பலனை (ஸுகதுக்கங்களை), भुङ्क्ते-அனுபவிக்கிறான் (என்று), प्रोक्तः हि-சொல்லப்பட்டிருக்கிறது அல்லவா!

வேதத்திலுள்ள கர்ம காண்டத்தில்கூட தேஹத்தை விட வேறாக ஒரு ஆத்மா இருப்பதாகவும், தேஹம் விழுந்த பிறகு அந்த ஆத்மா அழிவற்றவனாக இருந்து கர்மாவின் பலனை அனுபவிப்பதாகவும், சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் தேஹத்தைக் காட்டிலும் ஆத்மா வேறு. (38)

லிங்கசரீரம் ஆத்மாவல்ல :—

लिङ्गं चानेकसंयुक्तं चलं दृश्यं विकारि च ।
अव्यापकमसद्रूपं तत् कथं स्यात् पुमानयम् ॥ ३९ ॥

லிங்கம் சாநேக ஸம்யுக்தம் சலம் த்ருச்யம் விகாரி ச |
அவ்யாபகமஸத்ரூபம் தத் கதம் ஸ்யாத் புமாநயம் ||

लिङ्गं च-லிங்க (ஸூக்ஷ்ம) சரீரமும், अनेकसंयुक्तं-பலவற்றுடன் கூடியது, चलं-அசைவுள்ளது, दृश्यं-அறியப்படக்கூடியது, विकारि च-மாறுதலும் அடைகிறது, अव्यापकं-எங்குமில்லாதது. असद्रूपं-அஸத்ஸ்வரூபமானது. तत्-அந்த ஸூக்ஷ்ம சரீரம், अयं-இந்த, पुमान्-புருஷனாக, कथं स्यात्-எப்படி இருக்கமுடியும்?

லிங்கமென்கிற ஸூக்ஷ்ம சரீரத்தில் பல வஸ்துக்கள் சேர்ந்திருக்கின்றன. அது அசைவுள்ளது, ஞானத்திற்கு விஷயமானது, மாறுதலடையக்கூடியது, வியாபகமல்லாதது, அஸத் ஸ்வரூபம். அந்த ஸூக்ஷ்ம சரீரம் எப்படி இந்த புருஷனாக இருக்கமுடியும்? (39)

एवं देहद्वयादन्य आत्मा पुरुष ईश्वरः ।
सर्वात्मा सर्वरूपश्च सर्वातीतोऽहमव्ययः ॥ ४० ॥

ஏவம் தேஹத்வயாதந்ய ஆத்மா புருஷ ஈச்வர : |
ஸர்வாத்மா ஸர்வரூபச்ச ஸர்வாதீதோऽஹமவ்யய : ||

**एवं**-இவ்வாறு, **देहद्वयात्**-(ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்ற) இரு சரீரங்களிலிருந்தும், **अन्यः**-வேறுபட்ட வரான, **आत्मा**-ஆத்மா, **पुरुषः**-புருஷன், **ईश्वरः**-ஈசுவரன். **सर्वात्मा**-எல்லா வற்றிற்கும் ஆத்மாவாக இருப்பவர். **सर्वरूपश्च**-எல்லாமாக வும் இருப்பவர். **सर्वातीतः**-எல்லாவற்றிற்கும் அப்பால் பட்டவர். **अव्ययः**-குறைவற்றவர், **अहं**-(அவரே) நான்.

இவ்விதம் (ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்கிற) இரண்டு தேஹங்களுக்கும் வேறுபட்டவராய் இருப்பவரே ஆத்மா. அவர்தான் புருஷன், ஈசுவரன், எல்லாவற்றிற்கும் ஆத்மாவா யிருப்பவர், எல்லா ரூபத்தையும் தரிப்பவர், எல்லாவற்றிற் கும் அப்பால்பட்டவர், குறைவற்றவர். அவர்தான் நான்.

ஜகத் பிரஹ்மத்தைத்தவிர வேறல்ல:—

**इत्यात्मदेहभानेन प्रपञ्चस्यैव सत्यता ।**
**यथोक्ता तर्कशास्त्रेण ततः किं पुरुषार्थता ॥ ४१ ॥**

த்யாத்மதேஹ பானேந ப்ரபஞ்சஸ்யைவ ஸத்யதா|
யதோக்தா தர்க ஶாஸ்த்ரேண தத: கிம் புருஷார்த்ததா ||

**इति**-இவ்வாறு, **आत्मदेहभानेन**-ஆத்மாவே (அக்ஞானத் தால்) தேஹமாகத் தோன்றுவதால், **तर्कशास्त्रेण**-ந்யாய சாஸ்திரத்தினுல், **प्रपञ्चस्य**-பிரபஞ்சத்திற்கு, **सत्यता एव**-உண்மையாயிருக்கும் தன்மையே, **यथोक्ता**-எவ்வாறு சொல்லப்பட்டுள்ளதோ, **ततः**-அதனுல், **किं पुरुषार्थता**-புருஷார்த்தமான மோக்ஷம் கிடைக்குமா ?

இவ்விதம் ஆத்மா தேஹமாகத் தோன்றுவதனுல் ஜகத் ஸத்யம்தான் என்று தர்க்க சாஸ்திரத்தில் சொல்லப் படுகிறது. ஆனுல் அதனுல் புருஷார்த்தமான மோக்ஷம் ஸித்திக்குமா ? (41)

इत्यात्मदेहभेदेन देहात्मत्वं निवारितम् ।
इदानीं देहभेदस्य ह्यसत्त्वं स्फुटमुच्यते ॥ ४२ ॥

இத்யாத்மதேஹபேதேந தேஹாத்மத்வம் நிவாரிதம் ।
இதாநீம் தேஹபேதஸ்ய ஹ்யஸத்வம் ஸ்புடமுச்யதே ॥

इति-இவ்வாறு, आत्मदेहभेदेन-ஆத்மா வேறு, தேஹம் வேறு என்ற காரணத்தால், देहात्मत्वं-தேஹத்திற்கு ஆத்மத் தன்மையானது, निवारितं-மறுக்கப்பட்டது, इदानीं-இப்பொழுது, देहभेदस्य-தேஹத்திலுள்ள வேற்றுமைக்கு, असत्वं-இல்லாதிருக்கும் தன்மை, स्फुटं-தெளிவாக, उच्यते-சொல்லப்படுகிறது.

இவ்விதம் ஆத்மா வேறு தேஹம் வேறு என்ற காரணத்தால் தேஹமே ஆத்மா என்பது மறுக்கப்பட்டது. இப்பொழுது தேஹம் வேறு என்பதும் வாஸ்தவமில்லை என்று தெளிவாய் சொல்லப்படுகிறது. (42)

चैतन्यस्यैकरूपत्वाद्भेदो युक्तो न कर्हिचित् ।
जीवत्वं च मृषा ज्ञेयं रज्ज्वां सर्पग्रहो यथा ॥ ४३ ॥

சைதன்யஸ்யைகரூபத்வாத் பேதோ யுக்தோ ந கர்ஹிசித் ।
ஜீவத்வம் ச ம்ருஷா ஞேயம் ரஜ்ஜ்வாம் ஸர்ப்பக்ரஹோ யதா॥

चैतन्यस्य-சைதன்யமானது, एकरूपत्वात्-ஒரேவிதமாக இருப்பதால், कर्हिचित्-ஒருக்காலும், भेदः-வேற்றுமையானது, न युक्तः-பொருந்தியதல்ல. रज्ज्वां-கயிற்றில், सर्पग्रहो यथा-பாம்பு என்ற ஞானம் போல, जीवत्वं च-(சைதன்யத்திற்கு) ஜீவனாக இருக்கும் தன்மையும், मृषा-பொய்யானதாக, ज्ञेयं-அறியத்தக்கது.

சைதன்யம் ஒரேவிதமாக இருப்பதால் அதில் எப்பொழுதும் வேற்றுமை பொருந்தாது. ஆகையால் கயிற்றில் பாம்பு என்று எண்ணுவது எப்படி வாஸ்தவமல்லவோ

அப்படியே (சைதன்யத்தினிடத்தில்) ஜீவனாக இருக்கும் தன்மை பொய் என்று அறியவேண்டும். (43)

रज्ज्वज्ञानात् क्षणेनैव यद्वद्रज्जुर्हि सर्पिणी।
भाति तद्वच्चितिः साक्षाद्विश्वाकारेण केवला ॥ ४४ ॥

ரஜ்ஜ்வக்ஞானாத் க்ஷணேனைவ யத்வத் ரஜ்ஜுர்ஹி ஸர்ப்பிணீ |
பாதி தத்வச்சிதி: ஸாக்ஷாத் விச்வாகாரேண கேவலா ||

**रज्ज्वज्ञानात्**–கயிற்றைத் தெரிந்துகொள்ளாததால், **क्षणेनैव**–ஒரு நிமிஷத்திற்குள்ளேயே, **यद्वत्**–எவ்வாறு, **रज्जुः**–கயிறு, **सर्पिणी**–பாம்பின் தோற்றத்துடன்கூடியதாக ஆகிறதோ, **तद्वत्**–அவ்வாறே, **केवला**–தனிப்பட்டதான, **चितिः**-சைதன்யம், **विश्वाकारेण**–பிரபஞ்ச ரூபமாக, **साक्षात्**–பிரத்யக்ஷமாக, **भाति**–தோன்றுகிறது.

கயிற்றின் அறியாமை ஏற்படும்போது ஒரே க்ஷணத்தில் எப்படி அந்தக் கயிறு பாம்பு ரூபத்துடன் தோன்றுகிறதோ, அப்படியேதான் தனித்த (சுத்தமாயிருக்கிற) சைதன்யம் நேர் பிரபஞ்ச ரூபமாகவே காண்கிறது. (44)

उपादानं प्रपञ्चस्य ब्रह्मणोऽन्यन्न विद्यते।
तस्मात् सर्वप्रपञ्चोऽयं ब्रह्मैवास्ति न चेतरत् ॥ ४५ ॥

உபாதானம் ப்ரபஞ்சஸ்ய ப்ரஹ்மணோऽன்யத் ந வித்யதே |
தஸ்மாத் ஸர்வ ப்ரபஞ்சோऽயம் ப்ரஹ்மைவாஸ்தி ந சேதரத் ||

**प्रपञ्चस्य**–பிரபஞ்சத்திற்கு, **ब्रह्मणः**-பிரஹ்மத்தைக்காட்டிலும், **अन्यत्**–வேறு, **उपादानं**–உபாதான காரணம், **न विद्यते**-இல்லை. **तस्मात्**–ஆகையால், **अयं**–இந்த, **सर्वप्रपञ्चः**–எல்லா பிரபஞ்சமும், **ब्रह्मैव**–ப்ரஹ்மமாகவே, **अस्ति**–இருக்கிறது. **इतरत्**–(ப்ரஹ்மத்தைக்காட்டிலும்) வேறாக, **नच**–இல்லை.

பிரபஞ்சத்திற்கு உபாதானகாரணமாக பிரஹ்மத்தைத் தவிர வேறு எதுவும் கிடையாது. ஆகையால் இந்த எல்லாப் பிரபஞ்சமும் பிரஹ்மமேயாகும். வேறல்ல. (45)

**व्याप्यव्यापकता मिथ्या सर्वमात्मेति शासनात् ।**
**इति ज्ञाते परे तत्त्वे भेदस्यावसरः कुतः ॥ ४६ ॥**

வ்யாப்ய வ்யாபகதா மித்யா ஸர்வமாத்மேதி ஶாஸநாத் ।
ஞாதே பரே தத்வே பேதஸ்யாவஸர: குத: ॥

**सर्व**-எல்லாம், **आत्मा**-ஆத்மா, **इति**-என்று, **शासनात्**-உபதேசித்திருப்பதால், **व्याप्यव्यापकता**-வ்யாப்யம், வியாபகம் என்ற தன்மை, **मिथ्या**-பொய். **इति**-இவ்வாறு, **परे**-மேலான **तत्त्वे**-ப்ரஹ்மதத்வம், **ज्ञाते**-அறியப்பட்ட பிறகு, **भेदस्य**-வேற்றுமைக்கு, **अवसरः**-இடம், **कुतः**-எது?

எல்லாமே ஆத்மா என்று (வேதத்தில்) சொல்லப்பட்டிருக்கிறபடியால் வியாபிக்கப்படுவது ஒன்று, வியாபித்திருப்பது ஒன்று என்ற வேற்றுமை வாஸ்தவமல்ல. இவ்விதம் மேலான தத்வத்தை அறிந்துவிட்டால் வேற்றுமைக்கு இடம் எங்கிருந்து கிடைக்கும்? **इदं सर्वं यदयमात्मा** (பிரு. 4-5-7) (46)

**श्रुत्या निवारितं नूनं नानात्वं स्वमुखेन हि ।**
**कथं भासो भवेदन्यः स्थिते चाद्वयकारणे ॥ ४७ ॥**

ச்ருத்யா நிவாரிதம் நூநம் நாநாத்வம் ஸ்வமுகேந ஹி ।
கதம் பாஸோ பவேதந்ய: ஸ்திதே சாத்வய காரணே ॥

**श्रुत्या**-வேதத்தால், **स्वमुखेन**-தன் முகமாக (நேரிடையாக), **नानात्वं**-வேற்றுமை, **नूनं**-நிச்சயமாக, **निवारितं हि**-மறுக்கப்பட்டிருக்கிறதல்லவா. **अद्वयकारणे च**-அத்வைதமான காரணம், **स्थिते**-இருக்கும்பொழுது, **अन्यः**-வேறான, **भासः**-தோற்றம், **कथं भवेत्**-எப்படி ஏற்படும்?

வேதம் தன்வாயினாலேயே வேற்றுமையை நிச்சயமாய் மறுத்திருக்கிறது. இரண்டற்றதான காரணவஸ்து இருக்கும்போது அதில் தோன்றும் தோற்றம் வேறாக எப்படி இருக்கமுடியும்? नेह नानाऽस्ति किंचन (பிரு. 4-4-19) (47)

**दोषोऽपि विहितः श्रुत्या मृत्योर्मृत्युं स गच्छति ।**
**इह पश्यति नानात्वं मायया वञ्चितो नरः ॥ ४८ ॥**

தோஷோऽபி விஹித: ச்ருத்யா ம்ருத்யோர் ம்ருத்யும் ஸ கச்சதி ।
பச்யதி நாநாத்வம் மாயயா வஞ்சிதோ நர: ॥

**मायया**-மாயையால், **वञ्चितः**-ஏமாற்றப்பட்ட, **नरः**-(எந்த) மனிதன், **इह**-இங்கு, **नानात्वं**-வேற்றுமையை, **पश्यति**-பார்க்கிறானோ, **सः**-அவன், **मृत्योः**-மரணத்திலிருந்து, **मृत्युं**-மரணத்தை, **गच्छति**-அடைகிறான் (என்று), **दोषोपि**-தோஷமும், **श्रुत्या**-உபநிஷத்தால், **विहितः**-விதிக்கப்பட்டிருக்கிறது.

மாயையினால் ஏமாற்றமடைந்த மனுஷியன் இங்கே (பிரஹ்மத்தினிடத்தில்) வேற்றுமையைப் பார்த்தால் அவன் மரணத்திலிருந்து மரணத்தையே அடைகிறான் என்று வேதத்தினால் தோஷமும்கூட சொல்லப்பட்டிருக்கிறது. 'मृत्योः स मृत्युं गच्छति य इह नानेव पश्यति' (कठ 4-11)

**ब्रह्मणः सर्वभूतानि जायन्ते परमात्मनः ।**
**तस्मादेतानि ब्रह्मैव भवन्तीत्यवधारयेत् ॥ ४९ ॥**

ப்ரஹ்மண: ஸர்வ பூதானி ஜாயந்தே பரமாத்மந: ।
தஸ்மாதேதாநி ப்ரஹ்மைவ பவந்தீத்யவதாரயேத் ॥

**परमात्मनः**-பரமாத்மாவான, **ब्रह्मणः**-ப்ரஹ்மத்திலிருந்து, **सर्वभूतानि**-எல்லா பூதங்களும், **जायन्ते**-உண்டாகின்றன. **तस्मात्**-ஆகையால், **एतानि**-இவைகள், **ब्रह्मैव**-ப்ரஹ்மமாகவே **भवन्ति**-இருக்கின்றன, **इति**-என்று, **अवधारयेत्**-தீர்மானித்துக்கொள்ளவேண்டும்.

உண்டாவதெல்லாம் பரமாத்மாவான பிரஹ்மத்தி லிருந்து தான் உண்டாகின்றன ஆகையால் இவையாவும் பிரஹ்மமேதான் என்று தீர்மானித்துக்கொள்ளவேண்டும்.

**ब्रह्मैव सर्वनामानि रूपाणि विविधानि च ।**
**कर्माण्यपि समग्राणि बिभर्तीति श्रुतिर्जगौ ॥ ५० ॥**

*ப்ரஹ்மைவ ஸர்வ நாமாநி ரூபாணி விவிதாநி ச ।*
*கர்மாண்யபி ஸமக்ராணி பிபர்தீதி ச்ருதிர் ஜகௌ ॥*

**ब्रह्मैव**-ப்ரஹ்மம்தான், **सर्वनामानि**-எல்லாப்பெயர்களையும் **विविधानि**-பலவிதமான, **रूपाणि च**-உருவங்களையும், **समग्राणि कर्माणि अपि**-எல்லாச் செய்கைகளையும், **बिभर्ति**-தாங்கியிருக் கிறது, **इति**-என்று, **श्रुतिः**-வேதம், **जगौ**-கூறியுள்ளது.

எல்லாப் பெயர்களையும் பலவிதமான ரூபங்களையும் எல்லாச் செயல்களையும் தாங்குவது பிரஹ்மம்தான் என்று வேதம் முறையிடுகிறது 'सर्वाणि नामानि बिभर्ति सर्वाणि रूपाणि बिभर्ति' (பிரு 1-6) (50)

**सुवर्णाज्जायमानस्य सुवर्णत्वं च शाश्वतम् ।**
**ब्रह्मणो जायमानस्य ब्रह्मत्वं च तथा भवेत् ॥ ५१ ॥**

*ஸுவர்ணாத் ஜாயமாநஸ்ய ஸுவர்ணத்வம் ச சாச்வதம் ।*
*ப்ரஹ்மணோ ஜாயமாநஸ்ய ப்ரஹ்மத்வம் ச ததா பவேத் ॥*

**सुवर्णात्**-தங்கத்திலிருந்து, **जायमानस्य**-உண்டாகும் பொருளுக்கு, **सुवर्णत्वं च**-தங்கமாக இருக்கும் தன்மை, **शाश्वतं**-எப்பொழுதும் உள்ளது. **तथा**-அப்படியே, **ब्रह्मणः**- பிரஹ்மத்திலிருந்து, **जायमानस्य**-உண்டாகும் பிரபஞ்சத் திற்கு, **ब्रह्मत्वं च**-பிரஹ்மமாக இருக்கும் தன்மையும், **भवेत्**- (எப்பொழுதும்) இருக்கும்.

தங்கத்தினால் ஏற்பட்டது எப்படி எப்பொழுதும் தங்கமேதானோ, அப்படியே பிரஹ்மத்தினிடத்திலிருந்து உண்டானது எப்பொழுதும் பிரஹ்மமாகவேதான் இருக்கும்,

ஜீவனும் பிரஹ்மத்தைத்தவிர வேறல்ல :—

स्वल्पमप्यन्तरं कृत्वा जीवात्मपरमात्मनोः ।
योऽवतिष्ठति मूढात्मा भयं तस्याभिभाषितम् ॥ ५२ ॥

ஸ்வல்பமப்யந்தரம் க்ருத்வா ஜீவாத்மபரமாத்மநோ : |
யோ$வதிஷ்டதி மூடாத்மா பயம் தஸ்யாபிபாஷிதம் ||

**जीवात्मपरमात्मनोः**-ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும், **स्वल्पमपि**-கொஞ்சமாவது, **अन्तरं**-வேற்றுமையை, **कृत्वा**-செய்துகொண்டு, **यः**-எந்த, **मूढात्मा**-முட்டாள், **अवतिष्ठति**-இருக்கிறானோ, **तस्य**-அவனுக்கு, **भयं**-பயமானது, **अभिभाषितं**-(சுருதியில்) சொல்லப்பட்டுள்ளது.

ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் வேற்றுமையைக் கொஞ்சமேனும் ஒரு மூடன் செய்துகொண்டிருப்பானே யாகில் அவனுக்கு பயம்தான் என்று (வேதத்தில்) சொல்லப் பட்டிருக்கிறது. (**उदरमन्तरं कुरुते अथ तस्य भयं भवति**-தைத்திரீயம்) (52)

यत्राज्ञानाद्भवेद्द्वैतमितरस्तत्र पश्यति ।
आत्मत्वेन यदा सर्वं नेतरस्तत्र चाण्वपि ॥ ५३ ॥

யத்ராஞானாத் பவேத் த்வைதமிதரஸ்தத்ர பச்யதி |
ஆத்மத்வேன யதா ஸர்வம் நேதரஸ்தத்ர சாண்வபி ||

**यत्र**-எப்பொழுது, **अज्ञानात्**-அக்ஞானத்தினால், **द्वैतं**-வேற்றுமை, **भवेत्**-இருக்குமோ, **तत्र**-அப்பொழுது, **इतरः**-வேறாக நின்று, **पश्यति**-(வேறொன்றை) பார்க்கிறான். **यदा**-எப்பொழுது, **सर्वं**-எல்லாவற்றையும், **आत्मत्वेन**-ஆத்ம ஸ்வரூபமாகப் (பார்க்கிறானோ), **तत्र**-அப்பொழுது, **इतरः**-வேறான பொருள், **अणु चापि**-கொஞ்சமும், **न**-இல்லை.

எப்பொழுது அறியாமையினால் இரண்டென்று ஏற்படு கிறதோ அப்பொழுது ஒன்று மற்றொன்றைப் பார்க்கும்,

எப்பொழுது தானுகவே எல்லாம் தெரிகிறதோ அப்பொழுது மற்றென்று என்று சிறிதளவும் கிடையாது. **यत्र हि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति ... यत्र त्वस्य सर्वमात्मैवाभूत्तत्केन कं पश्येत्** (பிரு. 4-5-15) (53)

**यस्मिन्सर्वाणि भूतानि ह्यात्मत्वेन विजानतः ।**
**न वै तस्य भवेन्मोहो न च शोकोऽद्वितीयतः ॥ ५४ ॥**

யஸ்மின் ஸர்வாணி பூதாநி ஹ்யாத்மத்வேன விஜாநத: ।
ந வை தஸ்ய பவேன் மோஹோ நச ஶோகோऽத்விதீயத: ॥

**यस्मिन्**–எப்பொழுது, **सर्वाणि भूतानि**–எல்லா பூதங்களை யும், **आत्मत्वेन**–ஆத்மஸ்வரூபமாக, **विजानतः**–பார்க்கிற, **तस्य**–அவனுக்கு (அப்பொழுது), **अद्वितीयतः**–இரண்டாவதற்ற வனுக இருப்பதால், **मोहः**–மோஹம், **न वै भवेत्**–இருக்காது, **शोकश्च**–சோகமும், **न च**–இருக்காது.

எப்பொழுது ஒருவன் எல்லாப்பொருள்களையும் தான் என்பதாகவே நன்கு அறிகிருனே அப்பொழுது இரண்டாவ தற்றவன் என்ற காரணத்தால் அவனுக்கு மோஹம் இராது, சோகமும் இராது. **यस्मिन् सर्वाणि भूतानि आत्मैवाभूद्विजानतः । तत्र को मोहः कः शोकः एकत्वमनुपश्यतः ॥** (ஈசாவாஸ்யம்) (54)

**अयमात्मा हि ब्रह्मैव सर्वात्मकतया स्थितः ।**
**इति निर्धारितं श्रुत्या बृहदारण्यसंस्थया ॥ ५५ ॥**

அயமாத்மா ஹி ப்ரஹ்மைவ ஸர்வாத்மகதயா ஸ்தித: ।
இதி நிர்தாரிதம் ச்ருத்யா ப்ருஹதாரண்ய ஸம்ஸ்தயா ॥

**सर्वात्मकतया**–எல்லா ஸ்வரூபமாகவும், **स्थितः**–இருக்கிற, **अयं आत्मा**-இந்த ஆத்மா, **ब्रह्मैव**-ப்ரஹ்மம் தான், **इति**–என்று, **बृहदारण्यसंस्थया**-பிருஹதாரண்யக உபநிஷத்திலுள்ள, **श्रुत्या**-ச்ருதியினுல், **निर्धारितं**–தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஆத்மா பிரஹ்மமேதான், எல்லா ஸ்வரூபமாயு மிருக்கிறவர் என்று பிருஹதாரண்ய உபநிஷத்திலுள்ள வேத வாக்கியம் தீர்மானமாய்ச் சொல்கிறது. (55)

अनुभूतोऽप्ययं लोको व्यवहारक्षमोऽपि सन् ।
असद्रूपो यथा स्वप्न उत्तरक्षणबाधतः ॥ ५६ ॥

அநுபூதோ²ப்யயம் லோகோ வ்யவஹாரக்ஷமோ²பி ஸன் |
அஸத்ரூபோ யதா ஸ்வப்ன உத்தரக்ஷணபாதத: ||

**अयं लोकः**–இந்த பிரபஞ்சம், **अनुभूतोऽपि**–அனுபவிக்கப் பட்டபோதிலும், **व्यवहारक्षमः सन्नपि**–வியவஹாரம் செய் வதற்கு சக்தியுள்ளதாக இருக்கிறபோதிலும், **उत्तरक्षण-बाधतः**–அடுத்தநிமிஷத்தில் அடியோடு மறைந்துபோவதால், **स्वप्नो यथा**–ஸ்வப்னம்போல், **असद्रूपः**–அஸத்ஸ்வரூபமானது.

இந்த பிரபஞ்சம் அனுபவிக்கப்பட்டபோதிலும், வியவ ஹாரம் செய்ய முடிந்தபோதிலும், ஸ்வப்னம்போல் அஸத் ஸ்வரூபமேயாகும், அடுத்த க்ஷணத்திலேயே பாதிக்கப்படு கிறபடியால். (56)

स्वप्नो जागरणेऽलीकः स्वप्नेऽपि न हि जागरः ।
द्वयमेव लये नास्ति लयोऽपि ह्युभयोर्न च ॥ ५७ ॥

ஸ்வப்னோ ஜாகரணேऽலீக: ஸ்வப்னேऽபி ந ஹி ஜாகர: |
த்வயமேவ லயே நாஸ்தி லயோऽபி ஹ்யுபயோர் ந ச ||

**जागरणे**–ஜாக்ரத் நிலையில், **स्वप्नः**–ஸ்வப்னம், **अलीकः**–பொய். **स्वप्नेऽपि**–கனவு நிலையிலும், **जागरः**-ஜாக்ரத் பொருள் **नहि**–இல்லை. **लये**–ஸுஷுப்தியில் (நல்ல தூக்கத்தில்) **द्वयमेव**–(ஜாக்ரத், ஸ்வப்னம்) இரண்டுமே, **नास्ति**-இல்லை. **उभयोः**–ஜாகரம், ஸ்வப்னம் என்ற இரண்டு நிலைகளிலும், **लयोपि**-ஸுஷுப்தியும், **न च हि**-இல்லையல்லவா.

ஜாக்ரத்காலத்தில் ஸ்வப்னம் பொய். ஸ்வப்னகாலத்தில் ஜாக்ரத் பிரபஞ்சம் இல்லை. இரண்டுமே நல்ல தூக்கத்தில் (ஸுஷுப்தியில்) இல்லை. தூக்கமும் (ஸுஷுப்தியும்) மற்ற இரண்டு ஸமயங்களில் இல்லை. (57)

**त्रयमेवं भवेन्मिथ्या गुणत्रयविनिर्मितम् ।**
**अस्य द्रष्टा गुणातीतो नित्यो ह्येकश्चिदात्मकः ॥ ५८ ॥**

த்ரயமேவ பவேன் மித்யா குணத்ரயவிநிர்மிதம் ।
அஸ்ய த்ரஷ்டா குணாதீதோ நித்யோ ஹ்யேகச்சிதாத்மக: ॥

**एवं**-இவ்வாறு, **गुणत्रयविनिर्मितं**-ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களால் ஏற்பட்ட, **त्रयं**-ஜாகரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்றும், **मिथ्या**-பொய்யாக, **भवेत्**-ஆகும். **अस्य**-இம்மூன்றையும், **द्रष्टा**-பார்க்கிறவன், **गुणातीतः**-முக்குணங்களுக்கு அப்பால்பட்டவன், **नित्यः**-அழிவற்றவன், **एकः**-ஒருவனாக இருப்பவன், **चिदात्मकः**-சைதன்யஸ்வரூபமாக இருப்பவன்.

இவ்விதம் (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற) முக்குணங்களால் ஏற்பட்ட (ஜாக்ரத், ஸ்வப்னம் ஸுஷுப்தி என்கிற) இம்மூன்றும் பொய்யேயாகும். இம்மூன்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறவர் குணங்களுக்கு மேல்பட்டவர், நித்தியர் ஒருவராயுள்ளவர், சைதன்ய ஸ்வரூபர். (58)

**यद्वन्मृदि घटभ्रान्ति शुक्तौ वा रजतस्थितिम् ।**
**तद्वद्ब्रह्मणि जीवत्वं भ्रान्त्या पश्यति न स्वतः ॥ ५९ ॥**

யத்வன் ம்ருதி கடப்ராந்திம் ஶுக்தௌ வா ரஜதஸ்திதிம் ।
தத்வத் ப்ரஹ்மணி ஜீவத்வம் ப்ராந்த்யா பச்யதி ந ஸ்வத: ॥

**यद्वत्**-எவ்வாறு, **मृदि**-மண்ணில், **घटभ्रान्ति**-குடம் என்ற ப்ரமத்தையும், **वा**-அல்லது, **शुक्तौ**-கிளிஞ்சலில், **रजतस्थितिं**-வெள்ளி இருப்பதாகவும் (பார்க்கிறானோ), **तद्वत्**-அதுபோல, **भ्रान्त्या**-ப்ரமத்தால், **ब्रह्मणि**-ப்ரஹ்மத்தில், **जीवत्वं**-ஜீவனாக

இருப்பதை, **पश्यति**-பார்க்கிறான். **स्वतः**-தானாக (ப்ரம மில்லாமல்), **न**-பார்க்கிறதில்லை.

எப்படி மண்ணில் குடம் என்ற மயக்கத்தையும் கிளிஞ் சலில் வெள்ளியிருப்பதாகவும் பார்க்கிறானோ, அதேமாதிரித் தான் பிராந்தியினால் பிரஹ்மத்தில் ஜீவத்தன்மையை காண் கிறான். தானாகப்பார்ப்பதில்லை (59)

**यथा मृदि घटो नाम कनके कुण्डलाभिधा ।**
**शुक्तौ हि रजतख्यातिर्जीवशब्दस्तथा परे ॥ ६० ॥**

யதா ம்ருதி கடோ நாம கநகே குண்டலாபிதா ।
ஶுக்தௌ ஹி ரஜதக்யாதிர் ஜீவ ஶப்தஸ் ததா பரே ॥

**यथा**-எவ்வாறு, **मृदि**-மண்ணில், **घटो नाम**-குடம் என்ற பெயரோ, (எவ்வாறு) **कनके**-தங்கத்தில், **कुण्डलाभिधा**-குண்டலம் என்ற பெயரோ, (எவ்வாறு) **शुक्तौ**-கிளிஞ்சலில், **रजतख्यातिः**-வெள்ளி என்ற பெயரோ, **तथा**-அவ்வாறே, **परे**-பரப்ரஹ்மத்தில், **जीवशब्दः**-ஜீவன் என்ற பெயர்.

எவ்விதம் மண்ணுயிருப்பதில் குடம் என்ற பெயரோ, தங்கத்தில் குண்டலம் என்ற பெயரோ, கிளிஞ்சலில் வெள்ளி யின் தோற்றமோ, அவ்விதம்தான் பரவஸ்துவில் ஜீவன் என்கிற பெயர். (60)

பிரபஞ்சம் தோற்றமே :—

**यथैव व्योम्नि नीलत्वं यथा नीरं मरुस्थले ।**
**पुरुषत्वं यथा स्थाणौ तद्वद्विश्वं चिदात्मनि ॥ ६१ ॥**

யதைவ வ்யோம்னி நீலத்வம் யதா நீரம் மருஸ்தலே ।
புருஷத்வம் யதா ஸ்தாணௌ தத்வத் விச்வம் சிதாத்மனி ॥

**यथैव**-எப்படி, **व्योम्नि**-ஆகாயத்தில், **नीलत्वं**-நீலநிற முள்ளதாக இருக்கும் தன்மையோ, **यथा**-எப்படி, **मरुस्थले**-கானல் பிரதேசத்தில், **नीरं**-தண்ணீரோ, **यथा**-எப்படி,

स्थाणौ-மரக்கட்டையில், पुरुषत्वं-புருஷனுக இருக்கும் தன்மையோ, तद्वत्-அதுபோலவே, चिदात्मनि-சைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவில், विश्वं-பிரபஞ்சம் (ப்ரமத்தால் தோன்றுகிறது).

எப்படி ஆகாசத்தில் நீலவர்ணமும், கானல் வெளியில் எப்படி ஜலமும், எப்படி பட்டமரத்தில் மனுஷ்யனும் தோன்றுகிறதுகளோ அப்படியேதான் சைதன்யஸ்வரூபரான ஆத்மாவில் பிரபஞ்சம் தோன்றுகிறது. (61)

यथैव शून्ये वेतालो गन्धर्वाणां पुरं यथा ।
यथाऽऽकाशे द्विचन्द्रत्वं तद्वत्सत्ये जगत्स्थितिः ॥ ६२ ॥

யதைவ ஶூந்யே வேதாளோ கந்தர்வாணும் புரம் யதா ।
யதாகாஶே த்விசந்த்ரத்வம் தத்வத் ஸத்யே ஜகத்ஸ்திதி: ॥

यथैव-எப்படி, शून्ये-ஒன்றுமில்லாத இடத்தில், वेतालः-வேதாளம் என்ற பிசாசோ, यथा-எப்படி, गन्धर्वाणां पुरं-கந்தர்வ நகரமோ, यथा-எப்படி, आकाशे-ஆகாசத்தில், द्विचन्द्रत्वं-இருசந்திரர்களுள்ளதாக இருக்கும் தன்மையோ, तद्वत्-அதுபோலவே, सत्ये-உண்மையான ப்ரஹ்மத்தில், जगत्स्थितिः-பிரபஞ்சத்தின் இருப்பு.

ஒன்றுமில்லாத இடத்தில் வேதாளம் தோன்றுவது போலும், அப்படியே கந்தர்வ நகரம் தோன்றுவதுபோலும், ஆகாசத்தில் இரண்டு சந்திரன்களிருப்பதாகத்தோன்றுவது போலுமேதான் ஸத்ய (மான பிரஹ்ம)த்தில் பிரபஞ்சத்தின் இருப்பு. (62)

यथा तरङ्गकल्लोलैर्जलमेव स्फुरत्यलम् ।
पात्ररूपेण ताम्रं हि ब्रह्माण्डौघैस्तथात्मता ॥ ६३ ॥

யதா தரங்ககல்லோலைர் ஜலமேவ ஸ்புரத்யலம் ।
பாத்ரரூபேண தாம்ரம் ஹி ப்ரஹ்மாண்டௌகைஸ்
ததாத்மதா ॥

**यथा**–எவ்வாறு, **जलमेव**–தண்ணீரே, **तरङ्गकल्लोलैः**–சிறிய அலைகளாகவும், பெரிய அலைகளாகவும், **अलं**–நன்கு, **स्फुरति**–தோன்றுகிறதோ, (எப்படி) **ताम्रं हि**–செம்புலோகம், **पात्ररूपेण**–பாத்திர உருவமாகத்(தோன்றுகிறதோ), **तथा**–அவ்வாறு, **ब्रह्माण्डौघैः**–அநேக ப்ரஹ்மாண்டங்களாகத் தோன்றுவது, **आत्मता**–ஆத்மஸ்வரூபம்தான்.

எப்படி ஜலமே சிறிய அலைகளாகவும் பெரிய அலைகளாகவும் நன்கு தோன்றுகிறதோ, எப்படி தாம்ரம்தான் செப்புப்பாத்திரமாகத் தோன்றுகிறதோ, அப்படியேதான் பிரஹ்மாண்டக் கூட்டங்களாகத் தோன்றுவதும் ஆத்ம தத்வம்தான். (63)

**घटनाम्ना यथा पृथ्वी पटनाम्ना हि तन्तवः ।**
**जगन्नाम्ना चिदाभाति ज्ञेयं तत्तदभावतः ॥ ६४ ॥**

கடநாம்நா யதா ப்ருத்வீ படநாம்நா ஹி தந்தவ: |
ஜகந்நாம்நா சிதாபாதி ஜ்ஞேயம் தத்ததபாவத: ||

**यथा**–எவ்வாறு, **पृथ्वी**–மண், **घटनाम्ना**–குடம் என்ற பெயருடனும், **तन्तवः**–நூல்கள், **पटनाम्ना**–வஸ்திரம் என்ற பெயருடனும் (தோன்றுகிறதோ அவ்வாறு), **चित्**–சைதன்யம், **जगन्नाम्ना**–பிரபஞ்சம் என்ற பெயருடன், **आभाति**–தோன்றுகிறது. **तत्तदभावतः**–அதது இல்லாததைக்கொண்டு, **ज्ञेयं**–அறியத்தக்கது.

மண்தான் குடம் என்ற பெயருடன் தோன்றுகிறது, நூல்கள்தான் வஸ்திரம் என்ற பெயருடன் தோன்றுகின்றன. அப்படியே சைதன்யம்தான் ஜகத் என்ற பெயருடன் தோன்றுகிறது. இவ்விஷயம் அதது இல்லாத காரணத்தினுல் அறியக்கூடியது [மண் இல்லையானுல் குடமில்லை, நூல் இல்லையானுல் வஸ்திரம் இல்லை, அப்படியே சைதன்யமில்லையானுல் ஜகத் இல்லை.] (64)

सर्वोऽपि व्यवहारस्तु ब्रह्मणा क्रियते जनैः ।
अज्ञानान्न विजानन्ति मृदेव हि घटादिकम् ॥ ६५ ॥

ஸர்வோ ऽபி வ்யவஹாரஸ்து ப்ரஹ்மணா க்ரியதே ஜனை: ।
அக்ஞாநாத் ந விஜாநந்தி ம்ருதேவ ஹி கடாதிகம் ॥

जनैः-ஜனங்களால், सर्वोपि व्यवहारस्तु-எல்லா வியவஹாரமும், ब्रह्मणा-பிரஹ்மஸ்வரூபத்தைக்கொண்டுதான், क्रियते-செய்யப்படுகிறது. अज्ञानात्-அக்ஞானத்தால், न विजानन्ति-(இதை) அறிந்துகொள்கிறதில்லை. मृदेव हि-மண்தானே, घटादिकं-குடம் முதலியதாக (தோன்றுகிறது.)

ஜனங்களால் செய்யப்படும் எல்லா வியவஹாரமும் பிரஹ்மத்துடன்தான் செய்யப்படுகிறது. ஆனால் அறியாமையினால் இதை அவர்கள் உணர்வதில்லை. குடம் முதலான யாவற்றும் மண்தானே அல்லவா? (65)

कार्यकारणता नित्यमास्ते घटमृदोर्यथा ।
तथैव श्रुतियुक्तिभ्यां प्रपञ्चब्रह्मणोरिह ॥ ६६ ॥

கார்ய காரணதா நித்யமாஸ்தே கடம்ருதோர் யதா ।
ததைவ ச்ருதி யுக்திப்யாம் ப்ரபஞ்ச ப்ரஹ்மணோரிஹ ॥

यथा-எவ்வாறு, घटमृदोः-குடத்திற்கும் மண்ணிற்கும், कार्यकारणता-கார்யகாரணபாவம், नित्यं-எப்பொழுதும், आस्ते-இருக்கிறதோ, तथैव-அவ்வாறே, इह-இங்கு, श्रुतियुक्तिभ्यां-ச்ருதி, யுக்தி இவைகளால், प्रपञ्चब्रह्मणोः-பிரபஞ்சத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் (கார்யகாரணபாவம் இருப்பது தீர்மானிக்கப்படுகிறது.)

எவ்விதம் குடம் கார்யம், மண் காரணம் என்ற ஸ்... தவறாமல் இருக்கிறதோ, அப்படியே பிரபஞ்சத்திற்கும் பிரஹ்மத்திற்கும் ஸம்பந்தமென்பது வேதத்திலும் யுக்தியிலும் ஸித்திக்கிறது. (66)

गृह्यमाणे घटे यद्वन्मृत्तिका भाति वै बलात् ।
वीक्ष्यमाणे प्रपञ्चेऽपि ब्रह्मैवाभाति भासुरम् ॥ ६७ ॥

க்ருஹ்யமாணே கடே யத்வன் ம்ருத்திகா பாதி வை பலாத் ।
வீக்ஷ்யமாணே ப்ரபஞ்சேऽபி ப்ரஹ்மைவாபாதி பாஸுரம் ॥

**घटे**-குடமானது, **गृह्यमाणे**-அறியப்படும்பொழுது, **यद्वत्**-எவ்வாறு, **मृत्तिका**-மண், **बलात्**-கட்டாயமாக, **भाति वै**-தோன்றுகிறதோ, (அவ்வாறே) **प्रपञ्चे**-பிரபஞ்சம், **वीक्ष्यमाणेऽपि**-பார்க்கப்படும்பொழுதும், **ब्रह्मैव**-பிரஹ்மம்தான், **भासुरं**-பிரகாசமாக, **आभाति**-தோன்றுகிறது.

குடத்தை அறியும்போது எப்படி மண்ணும் கட்டாயமாகப் பிரகாசிக்கிறதோ, அப்படியே ஜகத் பார்க்கப்படும்போது பிரஹ்மம்தான் விளக்கமாகத்தெரிகிறது. (67)

सदैवात्मा विशुद्धोऽपि ह्यशुद्धो भाति वै सदा ।
यथैव द्विविधा रज्जुर्ज्ञानिनोऽज्ञानिनो निशि ॥ ६८ ॥

ஸதைவாத்மா விசுத்தோऽபி ஹ்யசுத்தோ பாதி வை ஸதா ।
யதைவ த்விவிதா ரஜ்ஜுர் ஞானினோऽஞானினோ நிசி ॥

**यथैव**-எவ்வாறு, **निशि**-இரவில் (இருளில்), **ज्ञानिनः**-(கயிறு என்று) அறிந்தவனுக்கும், **अज्ञानिनः**-அறியாதவனுக்கும், **रज्जुः**-கயிறு, **द्विविधा**-இரண்டு விதமாக (கயிருகவும், பாம்பாகவும்), **भाति**-தோன்றுகிறதோ (அவ்வாறே), **सदैव**-எப்பொழுதும், **आत्मा**-ஆத்மாவானது, **विशुद्धोपि**-பரிசுத்தமாக உள்ளபோதிலும், **अशुद्धः**-அசுத்தமாக, **सदा**-எப்பொழுதும், **भाति**-தோன்றுகிறது.

(ஒரேவிதமாய் இருக்கும்) கயிறு அறிந்தவனுக்கு ஒரு விதமாயும் அறியாதவனுக்கு வேறு விதமாயும், ஆக இரு விதமாய் இரவில் தோன்றுவது போலவே எப்பொழுதும் சுத்தமாயிருக்கிற ஆத்மா எப்பொழுதும் அசுத்தம்போல் காண்கிறது. (68)

**ஆத்மா தேஹமாகத் தோன்றுவது மோஹத்தால்:—**

यथैव मृन्मयः कुम्भस्तद्वद्देहोऽपि चिन्मयः ।
आत्मानात्मविभागोऽयं मुधैव क्रियते बुधैः ॥ ६९ ॥

யதைவ ம்ருன்மய: கும்ப: தத்வத் தேஹோऽபி சின்மய: ।
ஆத்மாநாத்மவிபாகோऽயம் முதைவ க்ரியதே புதை: ॥

**यथैव**–எப்படி, **कुम्भः**–குடம், **मृन्मयः**–மண் ஸ்வரூபமோ, **तद्वत्**–அதுபோல, **देहोऽपि**–சரீரமும், **चिन्मयः**–சைதன்ய ஸ்வரூபம்தான். **बुधैः**–வித்வான்களால், **अयं**–இந்த, **आत्मानात्मविभागः**–ஆத்மா, அநாத்மா என்ற பிரிவானது, **मुधैव**–வீணாக, **क्रियते**–செய்யப்படுகிறது.

எப்படி குடம் மண்மயமோ அப்படியே தேஹமும் சின்மயம். இவ்விதமிருக்கையில் ஆத்மா வேறு அநாத்மா வேறு என்று வித்வான்கள் இப்படி வீணாக வகுக்கிறார்கள்.

सर्पत्वेन यथा रज्जू रजतत्वेन शुक्तिका ।
विनिर्णीता विमूढेन देहत्वेन तथाऽऽत्मता ॥ ७० ॥

ஸர்பத்வேன யதா ரஜ்ஜு ரஜதத்வேன ஶுக்திகா ।
விநிர்ணீதா விமூடேன தேஹத்வேந ததாத்மதா ॥

**यथा**–எப்படி, **विमूढेन**–மூடனால், **रज्जुः**–கயிறு, **सर्पत्वेन**–பாம்பாகவும், **शुक्तिका**–கிளிஞ்சல், **रजतत्वेन**–வெள்ளியாகவும், (தீர்மானிக்கப்பட்டிருக்கிறதோ), **तथा**–அப்படியே, **आत्मता**–ஆத்மஸ்வரூபம், **देहत्वेन**–சரீரமாக, **विनिर्णीता**–தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

நன்கு மோஹமடைந்தவன் எப்படி கயிற்றைப் பாம்பு என்றும், கிளிஞ்சலை வெள்ளியென்றும், தீர்மானப்படுத்தி விடுகிறானோ, அப்படித்தான் ஆத்மாவை தேஹமென்று மூடன் தீர்மானிக்கிறான். (70)

घटत्वेन यथा पृथ्वी पटत्वेनैव तन्तवः ।
विनिर्णीता विमूढेन देहत्वेन तथाऽऽत्मता ॥ ७१ ॥

கடத்வேந யதா ப்ருத்வீ படத்வேநைவ தந்தவ: ।
விநிர்ணீதா விமூடேன தேஹத்வேந ததாத்மதா ॥

यथा-எவ்வாறு, पृथ्वी-மண், घटत्वेन-குடமாகவும், तन्तवः-நூல்கள், पटत्वेनैव-வஸ்திரமாகவுமே, विमूढेन-மூடனால், (தீர்மானிக்கப்பட்டுள்ளனவோ), तथा-அவ்வாறு, आत्मता-ஆத்மஸ்வரூபம், देहत्वेन-சரீரமாக, विनिर्णीता-தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

எப்படி மண்ணே குடமாகவும், நூல்களே வஸ்திர மாகவும் மூடனால் தீர்மானிக்கப்படுகிறதோ அப்படியேதான் மூடனால் ஆத்மா தேஹமாக தீர்மானிக்கப்படுகிறது. (71)

कनकं कुण्डलत्वेन तरङ्गत्वेन वै जलम् ।
विनिर्णीता विमूढेन देहत्वेन तथाऽऽत्मता ॥ ७२ ॥

கநகம் குண்டலத்வேன தரங்கத்வேன வை ஜலம் ।
விநிர்ணீதா விமூடேன தேஹத்வேன ததாத்மதா ॥

(எவ்வாறு) कनकं-தங்கம், कुण्डलत्वेन-குண்டலமாகவும், जलं-தண்ணீர், तरङ्गत्वेन वै-அலையாகவும், विमूढेन-மூடனால், (தீர்மானிக்கப்பட்டிருக்கிறதோ), तथा-அவ்வாறு, आत्मता-ஆத்மஸ்வரூபம், देहत्वेन-தேஹமாக, विनिर्णीता-தீர்மானிக் கப்பட்டிருக்கிறது.

தங்கத்தையே குண்டலமாகவும், ஜலத்தையே அலை களாகவும் மூடன் தீர்மானிக்கிறான். அப்படியேதான் ஆத்மாவை தேஹமென்று மூடன் தீர்மானிக்கிறான். (72)

पुरुषत्वेन वै स्थाणुर्जलत्वेन मरीचिका ।
विनिर्णीता विमूढेन देहत्वेन तथाऽऽत्मता ॥ ७३ ॥

புருஷத்வேன வை ஸ்தாணுர் ஜலத்வேன மரீசிகா ।
விநிர்ணீதா விமூடேன தேஹத்வேந ததாத்மதா ॥

**स्थाणुः**-மரக்கட்டை, **पुरुषत्वेन**-புருஷனாகவும், **मरीचिका**-கானல், **जलत्वेन**-தண்ணீராகவும், **विमूढेन**-மூடனால் (எவ்வாறு தீர்மானிக்கப்பட்டிருக்கிறதோ), **तथा**-அவ்வாறே **आत्मता**-ஆத்மஸ்வரூபம், **देहत्वेन**-சரீரமாக, **विनिर्णीता**-தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

கட்டையையே மனுஷ்யனாகவும் கானலையே ஜலமாகவும் மூடன் தீர்மானிக்கிறான். அப்படியேதான் மூடன் ஆத்மாவை தேஹமென்று தீர்மானிக்கிறான். (73)

गृहत्वेनैव काष्ठानि खड्गत्वेनैव लोहता ।
विनिर्णीता विमूढेन देहत्वेन तथाऽऽत्मता ॥ ७४ ॥

க்ருஹத்வேனைவ காஷ்டானி கட்கத்வேனைவ லோஹதா ।
விநிர்ணீதா விமூடேன தேஹத்வேந ததாத்மதா ॥

**काष्ठानि**-மரக்கட்டைகள், **गृहत्वेनैव**-வீடாகவும், **लोहता**-இரும்பு, **खड्गत्वेनैव**-கத்தியாகவும் (எப்படி தீர்மானிக்கப்பட்டிருக்கிறதோ), **तथा**-அப்படி, **आत्मता**-ஆத்மஸ்வரூபம், **देहत्वेन**-தேஹமாக, **विमूढेन**-மூடனால், **विनिर्णीता**-தீர்மானிக்கப்பட்டுள்ளது.

மரக்கட்டைகளையே வீடு என்றும், இரும்பைக் கத்தி என்றும் மூடன் தீர்மானிக்கிறான். அப்படியே மூடன் ஆத்மாவை தேஹமென்று தீர்மானிக்கிறான். (74)

அஜ்ஞானம்தான் மோஹத்திற்குக் காரணம் :—

यथा वृक्षविपर्यासो जलाद्भवति कस्यचित् ।
तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ७५ ॥

யதா வ்ருக்ஷவிபர்யாஸோ ஜலாத் பவதி கஸ்யசித் ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யஜ்ஞான யோகத: ॥

**यथा**-எப்படி, **कस्यचित्**-ஒருவனுக்கு, **जलात्**-தண்ணீரால், **वृक्षविपर्यासः**-மரத்தின் மாறுதல், அதாவது தலைகீழாக இருப்பதாகத் தோன்றுவது, **भवति**-ஏற்படுகிறதோ, **तद्वत्**-அதுபோலவே, **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின் சேர்க்கையால், **आत्मनि**-ஆத்மாவில், **देहत्वं**-தேஹஸ்வருபத்தை, **पश्यति**-பார்க்கிறான்.

ஒருவனுக்கு ஜலத்தினால் மரங்கள் தலைகீழாக இருப்பதாகத் தோன்றுவது போலவே, அறியாமையின் சேர்க்கையினால் ஆத்மாவிடத்தில் தேஹத்தைப்பார்க்கிறான். (75)

पोतेन गच्छतः पुंसः सर्वं भातीव चञ्चलम् ।
तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ७६ ॥

போதேந கச்சத: பும்ஸ: ஸர்வம் பாதீவ சஞ்சலம் ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யஞான யோகத: ॥

**पोतेन**-ஓடத்தில், **गच्छतः**-செல்கிற, **पुंसः** மனிதனுக்கு, **सर्वं**-எல்லாம், **चञ्चलमिव**-அசைவுள்ளதுபோல, **भाति**-தோன்றுகிறது. **तद्वत्**-அதுபோல், **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின் சேர்க்கையால், **आत्मनि**-ஆத்மாவில், **देहत्वं**-தேஹஸ்வருபத்தை, **पश्यति**-பார்க்கிறான்.

ஓடத்தில் போகிற மனிதனுக்கு எல்லாமே சலிப்பது போல் தோன்றும், அப்படியேதான் அக்ஞானத்தின் சேர்க்கையினால் ஆத்மாவிடத்தில் தேஹத்தன்மை தோன்றுகிறது. (76)

पीतत्वं हि यथा शुभ्रे दोषाद्भवति कस्यचित् ।
तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ७७ ॥

பீதத்வம் ஹி யதா ஶுப்ரே தோஷாத் பவதி கஸ்யசித் ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யஞான யோகத: ॥

**यथा**-எப்படி, **शुभ्रे**-வெளுப்பான சங்கம் முதலியவற்றில் **कस्यचित्**-ஒருவனுக்கு, **दोषात्**-காமாலை முதலிய நேத்ர

தோஷத்தால், **पीतत्वं**-மஞ்சளாகத் தோன்றுவது, **भवति हि**-ஏற்படுகிறதோ, **तद्वत्**-அதுபோல, **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின் சேர்க்கையால், **आत्मनि**-ஆத்மாவில், **देहत्वं**-தேஹஸ்வரூபத்தை, **पश्यति**-பார்க்கிறான்.

ஒருவனுக்கு (கண்ணில்) தோஷமிருந்தால் வெளுப்பாயிருக்கும் பொருளில் மஞ்சள் நிறம் தோன்றுகிறது. அதுபோல அக்ஞானத்தின் சேர்க்கையினால் ஆத்மாவிடத்தில் தேஹத்தன்மையைப் பார்க்கிறான். (77)

**चक्षुर्भ्यां भ्रमशीलाभ्यां सर्वं भाति भ्रमात्मकम् ।**
**तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ७८ ॥**

சக்ஷுர்ப்யாம் ப்ரமஶீலாப்யாம் ஸர்வம் பாதி ப்ரமாத்மகம் ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யக்ஞான யோகத: ॥

**भ्रमशीलाभ्यां**-சுழலும் ஸ்வபாவமுள்ள, **चक्षुर्भ्यां**-கண்களால், **सर्वं**-எல்லாம், **भ्रमात्मकं**-சுழலுவதாக, **भाति**-தோன்றுகிறது. **तद्वत्**-அதுபோல், **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின் சேர்க்கையால், **आत्मनि**-ஆத்மாவில், **देहत्वं**-தேஹஸ்வரூபத்தை, **पश्यति**-பார்க்கிறான்.

சுழலும் கண்களால் பார்க்கும் எல்லாமே சுழல்வதாகத் தோன்றும். அப்படியே அக்ஞானத்தின் சேர்க்கையினால் ஆத்மாவிடத்தில் தேஹத்தன்மையைப்பார்க்கிறான். (78)

**अलातं भ्रमणेनैव वर्तुलं भाति सूर्यवत् ।**
**तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ७९ ॥**

அலாதம் ப்ரமணேனைவ வர்துலம் பாதி ஸூர்யவத் ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யஞான யோகத: ॥

**अलातं**-கொள்ளிக்கட்டை, **भ्रमणेनैव**-சுற்றுவதனாலேயே, **सूर्यवत्**-ஸூர்யன்போல், **वर्तुलं**-வட்டமாக, **भाति**-தோன்றுகிறது. **तद्वत्**-அதுபோல, **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின்

சேர்க்கையால், आत्मनि-ஆத்மாவில், देहत्वं-தேஹத்தை, पश्यति-பார்க்கிறான்.

கொள்ளிக்கட்டை சுற்றுவதனாலேயே ஸூர்யன்போல் வட்டமாகத் தோன்றுகிறது. அப்படியே அக்ஞானத்தின் சேர்க்கையினால் ஆத்மாவிடத்தில் தேஹத்தன்மையைப் பார்க்கிறான். (79)

**महत्त्वे सर्ववस्तूनामणुत्वं ह्यतिदूरतः ।**
**तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ८० ॥**

மஹத்வே ஸர்வ வஸ்தூநாமணுத்வம் ஹ்யதிதூரத: ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யக்ஞான யோகத: ॥

**सर्ववस्तूनां**-எல்லா வஸ்துக்களும், **महत्त्वे**-பெரியனவாக இருந்தபோதிலும், **अतिदूरतः**-வெகுதூரத்தினால், **अणुत्वं हि**-சிறியனவாக இருக்கும் தன்மை தோன்றுகிறதல்லவா! **तद्वत्**-அதுபோல், **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின் சேர்க்கையால், **आत्मनि**-ஆத்மாவில், **देहत्वं**-தேஹஸ்வரூபத்தை, **पश्यति**-பார்க்கிறான்.

எல்லா வஸ்துக்களும் பெரியதாயிருந்தபோதிலும் வெகுதூரத்தினால் சிறியதாகத் தோன்றும். அப்படியே அக்ஞானத்தின் சேர்க்கையினால் ஆத்மாவிடத்தில் தேஹத் தன்மையைப் பார்க்கிறான். (80)

**सूक्ष्मत्वे सर्ववस्तूनां स्थूलत्वं चोपनेत्रतः ।**
**तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ८१ ॥**

ஸூக்ஷ்மத்வே ஸர்வ வஸ்தூநாம் ஸ்தூலத்வம்
சோபநேத்ரத: ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யக்ஞான யோகத: ॥

**सर्ववस्तूनां**-எல்லா வஸ்துக்களும், **सूक्ष्मत्वे**-சிறியதாக இருந்தபோதிலும், **उपनेत्रतः**-மூக்குக் கண்ணாடியால், **स्थूलत्वं च**-பெரியனவாக இருக்கும் தன்மை (தோன்று

கிறது), तद्वत्-அதுபோல், अज्ञानयोगतः-அக்ஞானத்தின் சேர்க்கையால், आत्मनि-ஆத்மாவில், देहत्वं-தேஹ ஸ்வரூபத்தை, पश्यति-பார்க்கிறான்.

எல்லா வஸ்துக்களும் ஸூக்ஷ்மமாயிருந்தபோதிலும் மூக்குக்கண்ணாடி காரணமாகப் பெரியதாகத்தெரியும். அப்படியே அக்ஞானத்தின் சேர்க்கையால் ஆத்மாவிடத்தில் தேஹத்தன்மையைப் பார்க்கிறான். (81)

काचभूमौ जलत्वं वा जलभूमौ हि काचता ।
तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ८२ ॥

காச பூமௌ ஜலத்வம் வா ஜல பூமௌ ஹி காசதா ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யக்ஞான யோகத: ॥

काचभूमौ-கண்ணாடித் தரையில், जलत्वं-ஜலத்தன்மையும், जलभूमौ-தண்ணீர் பிரதேசத்தில், काचता-கண்ணாடித் தன்மையும் (தோன்றுகிறது), तद्वत्-அதுபோல, अज्ञानयोगतः-அக்ஞானத்தின் சேர்க்கையால், आत्मनि-ஆத்மாவில், देहत्वं-தேஹஸ்வரூபத்தை, पश्यति-பார்க்கிறான்.

கண்ணாடித்தரையில் ஜலத்தன்மையும், ஜலமுள்ள இடத்தில் கண்ணாடித்தன்மையும் தோன்றும். அப்படியே அக்ஞானத்தின் சேர்க்கையால் ஆத்மாவிடத்தில் தேஹத் தன்மையைப்பார்க்கிறான். (82)

यद्वदग्नौ मणित्वं हि मणौ वा वह्निता पुमान् ।
तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ८३ ॥

யத்வதக்நௌ மணித்வம் ஹி மணௌ வா
வஹ்நிதா புமான் ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யக்ஞான யோகத: ॥

यद्वत्-எப்படி, अग्नौ-நெருப்புத்தணலில், मणित्वं-ரத்னத் தன்மையும், मणौ वा-ரத்னத்தில், वह्निता-நெருப்புத்தன்மை

யும் (தோன்றுகிறதோ) **तद्वत्**-அதுபோல, **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின் சேர்க்கையினுல், **पुमान्**-மனிதன், **आत्मनि**-ஆத்மாவில், **देहत्वं**-தேஹஸ்வரூபத்தை, **पश्यति**-பார்க்கிறுன்.

எப்படி ஒரு மனிதன் தணலில் ரத்னத்தன்மையையும் ரத்னத்தில் தணல் தன்மையையும் பார்க்கிறுனே அப்படியே அக்ஞானத்தின் சேர்க்கையால் ஆத்மாவிடத்தில் தேஹத் தன்மையைப் பார்க்கிறுன். (83)

**अभ्रेषु सत्सु धावत्सु धावन्निव यथा शशी ।**
**तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ८४ ॥**

அப்ரேஷு ஸத்ஸு தாவத்ஸு தாவந்நிவ யதா ஶஶீ ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யக்ஞான யோகத: ॥

**अभ्रेषु**-மேகங்கள், **धावत्सु सत्सु**-ஓடும்பொழுது, **यथा**-எப்படி **शशी**-சந்திரன், **धावन्निव**-ஓடுகிறவன் போல் (தோன்றுகிறுனே), **तद्वत्**-அதுபோல், **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின் சேர்க்கையால், **आत्मनि**-ஆத்மாவில், **देहत्वं**-தேஹஸ்வரூபத்தை, **पश्यति**-பார்க்கிறுன்.

வாஸ்தவமாக மேகங்கள் ஓடுகையில் சந்திரன் ஓடுவதாகத் தோன்றுவதுபோல், அக்ஞானத்தின் சேர்க்கையினுல் ஆத்மாவிடத்தில் தேஹத்தன்மையைப் பார்க்கிறுன்.

**यथैव दिग्विपर्यासो मोहाद्भवति कस्यचित् ।**
**तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ८५ ॥**

யதைவ திக்விபர்யாஸோ மோஹாத் பவதி கஸ்யசித் ।
தத்வதாத்மநி தேஹத்வம் பச்யத்யஞாந யோகத: ॥

**यथैव**-எப்படி, **कस्यचित्**-ஒருவனுக்கு, **मोहात्**-ப்ரமத்தால், **दिग्विपर्यासः**-திசைகளின் மாறுபாடு, **भवति**-ஏற்படுகிறதோ (தோன்றுகிறதோ), **तद्वत्**-அதுபோல, **अज्ञानयोगतः**-அக்ஞானத்தின் சேர்க்கையால், **आत्मनि**-ஆத்மாவில், **देहत्वं**-தேஹஸ்வரூபத்தை, **पश्यति**-பார்க்கிறுன்.

எவ்விதம் ஒருவனுக்கு மோஹத்தினல் திசைகள் மாறித் தோன்றுமோ, அப்படியே அக்ஞானத்தின் சேர்க்கையால் ஆத்மாவிடத்தில் தேஹத்தன்மையைப்பார்க்கிருன். (85)

यथा शशी जले भाति चञ्चलत्वेन कस्यचित् ।
तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥ ८६ ॥

யதா ஶஶீ ஜலே பாதி சஞ்சலத்வேந கஸ்யசித் ।
தத்வதாத்மனி தேஹத்வம் பச்யத்யஞான யோகத: ॥

यथा-எப்படி, कस्यचित्-ஒருவனுக்கு, जले-தண்ணீரில், शशी-சந்திரன், चञ्चलत्वेन-அசைவுள்ளவனுக, भाति-தோன்றுகிருனே, तद्वत्-அதுபோல், अज्ञानयोगतः-அக்ஞானத்தின் சேர்க்கையால், आत्मनि-ஆத்மாவில், देहत्वं-தேஹஸ்வரூபத்தை, पश्यति-பார்க்கிருன்.

ஜலம் அசையும்போது ஜலத்தில் சந்திரன் அசைவது போல எப்படி ஒருவனுக்குத்தோன்றுமோ, அதேபோல அக்ஞானத்தின் சேர்க்கையால் ஆத்மாவிடத்தில் தேஹத் தன்மையைப் பார்க்கிருன். (86)

एवमात्मन्यविद्यातो देहाध्यासो हि जायते ।
स एवात्मपरिज्ञानाल्लीयते च परात्मनि ॥ ८७ ॥

ஏவமாத்மந்யவித்யாதோ தேஹாத்யாஸோ ஹி ஜாயதே ।
ஸ ஏவாத்ம பரிஞாநாத் லீயதே ச பராத்மநி ॥

एवं-இவ்வாறு, अविद्यातः-அக்ஞானத்தால், आत्मनि-ஆத்மஸ்வருபத்தில், देहाध्यासः-தேஹத்தின் அத்யாஸம் (நான் சரீரம் என்ற தோற்றம்), जायते हि-ஏற்படுகிறதல்லவா! स एव-அந்த தேஹாத்யாஸமே, आत्मपरिज्ञानात्-ஆத்மஸ்வருபத்தை நன்கு தெரிந்துகொள்வதனுல், परमात्मनि-பரமாத்மாவில், लीयते-மறைந்து விடுகிறது.

இவ்விதமாக அவித்யையினுல் ஆத்மாவிடத்தில் நான் தேஹமென்ற அத்யாஸம் ஏற்படுகிறது. அந்த அத்யாஸம்

ஆத்மஸ்வருபத்தை நன்கு அறிந்தவுடனேயே பரமாத்மா விடம் மறைந்துவிடுகிறது. (87)

सर्वमात्मतया ज्ञातं जगत्स्थावरजङ्गमम् ।
अभावात्सर्वभावानां देहानां चात्मता कुतः ॥ ८८ ॥

ஸர்வமாத்மதயா ஞாதம் ஜகத் ஸ்தாவர ஜங்கமம் ।
அபாவாத் ஸர்வபாவாநாம் தேஹதா சாத்மந: குத: ॥

**स्थावरजङ्गमं**-அசையாததும் அசைகின்றதுமான, **सर्वं जगत्**-பிரபஞ்சம் முழுவதும், **आत्मतया**-ஆத்மஸ்வருபமாக, **ज्ञातं**-அறிந்துகொள்ளப்பட்டுவிட்டது (அப்பொழுது), **सर्वभावानां**-எல்லா வஸ்துக்களும், **अभावात्**-(வேறுக) இல்லாததால், **आत्मनः**-ஆத்மாவிற்கு, **देहता**-தேஹத்தன்மை, **कुतः**-எப்படி இருக்கும்?

ஸ்தாவர ஜங்கமங்களடங்கிய எல்லா ஜகத்தும் ஆத்மாவாகவே அறியப்பட்டுவிட்டது. (அப்பொழுது) எல்லா வஸ்துக்களும் (தனித்து) இருப்புள்ளவைகளில்லாததால் ஆத்மாவிற்கு தேஹத்தன்மை எப்படி வரும்? (88)

आत्मानं सततं जानन्कालं नय महामते ।
प्रारब्धमखिलं भुञ्जन्नोद्वेगं कर्तुमर्हसि ॥ ८९ ॥

ஆத்மாநம் ஸததம் ஜாநன் காலம் நய மஹாமதே ।
ப்ராரப்தமகிலம் புஞ்ஜன் நோத்வேகம் கர்துமர்ஹஸி ॥

**महामते**-மிகுந்த புத்தியுள்ளவனே! **सततं**-எப்பொழுதும் **आत्मानं**-ஆத்மஸ்வருபத்தை, **जानन्**-தெரிந்துகொண்டு, **प्रारब्धमखिलं**-பிராரப்தம் முழுவதையும், **भुञ्जन्**-அநுபவித்துக்கொண்டு, **कालं**-காலத்தை, **नय**-கழித்துவா. **उद्वेगं**-பரபரப்பை, **कर्तुं**-செய்வதற்கு, **नार्हसि**-தகுந்தவனில்லை.

ஏ நல்ல புத்திசாலியே, இடைவிடாமல் ஆத்மாவை அறிந்துகொண்டு பிராரப்தகர்மாவினுல் ஏற்படுவதை

யெல்லாம் அனுபவித்துக்கொண்டு காலத்தைக்கழி. எவ்விதப்பரபரப்பும் வேண்டாம். (89)

ஞானிக்கு பிராரப்தமும் கிடையாது :—

उत्पन्नेऽप्यात्मविज्ञाने प्रारब्धं नैव मुञ्चति ।
इति यच्छ्रूयते शास्त्रात्तन्निराक्रियतेऽधुना ॥ ९० ॥

உத்பந்நேऽப்யாத்ம விஜ்ஞாநே ப்ராரப்தம் நைவமுஞ்சதி ।
இதி யத் ச்ருயதே ஶாஸ்த்ராத் தந்நிராக்ரியதேऽதுநா ॥

आत्मविज्ञाने-ஆத்மஞானம், उत्पन्नेऽपि-ஏற்பட்ட பிறகும், प्रारब्धं-பிராரப்த கர்மா, नैव मुञ्चति-விடவே விடாது. इति यत्-என்ற யாதொரு விஷயம், श्रूयते-கேட்கப்படுகிறதோ, तत्-அது, अधुना-இப்போது, शास्त्रात्-சாஸ்திர பிரமாணத்தால், निराक्रियते-மறுக்கப்படுகிறது.

ஆத்மக்ஞானம் ஏற்பட்டபோதிலும் பிராரப்தம் விடுவதில்லை என்று சொல்லப்படுவது சாஸ்திர பிரமாணத்தைக் கொண்டு இப்பொழுது நிராகரிக்கப்படுகிறது. (90)

तत्त्वज्ञानोदयादूर्ध्वं प्रारब्धं नैव विद्यते ।
देहादीनामसत्यत्वाद्यथा स्वप्नः प्रबोधतः ॥ ९१ ॥

தத்வ ஞானோதயாதூர்த்வம் ப்ராரப்தம் நைவ வித்யதே ।
தேஹாதீநாமஸத்யத்வாத் யதா ஸ்வப்ந: ப்ரபோதத: ॥

प्रबोधतः-விழித்துக்கொண்ட பிறகு, यथा स्वप्नः-ஸ்வப்னம் போல, तत्त्वज्ञानोदयादूर्ध्वं-ஆத்மதத்வ ஞானம் ஏற்பட்டபிறகு, देहादीनां-சரீரம் முதலியவைகள், असत्यत्वात्-பொய்யாயிருப்பதனால், प्रारब्धं-பிராரப்தம், नैव विद्यते-(ஞானிக்கு) கிடையாது.

ஆத்ம தத்வஞானமேற்பட்ட பிறகு பிராரப்தம் கிடையவே கிடையாது. ஏனென்றால் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டபிறகு ஸ்வப்னம் எப்படி அஸத்யமோ அப்படியே (ஞானதசையில்) தேஹம் முதலானவைகள் யாவும் அஸத்யமே. (91)

कर्म जन्मान्तरकृतं प्रारब्धमिति कीर्तितम् ।
तत्तु जन्मान्तराभावात्पुंसो नैवास्ति कर्हिचित् ॥ ९२ ॥

கர்ம ஜன்மாந்தர க்ருதம் ப்ராரப்தமிதி கீர்த்திதம் ।
தத்து ஜன்மாந்தராபாவாத் பும்ஸோ நைவாஸ்தி கர்ஹிசித் ॥

**जन्मान्तरकृतं**-வேறு பிறவியில் செய்யப்பட்ட, **कर्म**-கர்மாவானது, **प्रारब्धमिति**-பிராரப்தம் என்று, **कीर्तितं**-சொல்லப்பட்டுள்ளது. **पुंसः**-(ஞானியான) புருஷனுக்கு, **जन्मान्तराभावात्**-வேறு பிறவியில்லாததால், **कर्हिचित्**-ஒருக்காலும், **तत्तु**-அந்த பிராரப்தம், **नैवास्ति**-கிடையாது.

முன்னொரு பிறவியில் செய்யப்பட்ட கர்மாவே பிராரப்தம் என்று சொல்லப்படுகிறது. ஆனால் ஞானியான புருஷனுக்கு முன்னொரு ஜன்மாவென்பது கிடையாததினால் அவனுக்கு பிராரப்தமும் எப்படியும் இராது. (92)

स्वप्नदेहो यथाध्यस्तस्तथैवायं हि देहकः ।
अध्यस्तस्य कुतो जन्म जन्माभावे स्थितिः कुतः ॥ ९३ ॥

ஸ்வப்ந தேஹோ யதாऽத்யஸ்தஸ் ததைவாயம் ஹி தேஹக: ।
அத்யஸ்தஸ்ய குதோ ஜன்ம ஜன்மாபாவே ஸ்திதி: குத: ॥

**स्वप्नदेहः**-ஸ்வப்னத்தில் காணப்படும் சரீரம், **यथा**-எப்படி, **अध्यस्तः**-கல்பிதமோ, **तथैव**-அவ்விதமே, **अयं देहकः**-இந்த ஜாக்ரத்தேஹமும் (கல்பிதம்), **अध्यस्तस्य**-கல்பித வஸ்துவிற்கு, **जन्म**-பிறவி, **कुतः**-எப்படி வரும்? **जन्माभावे**-பிறவியில்லாவிட்டால், **स्थितिः**-இருப்பு, **कुतः**-எங்கிருந்து வரும்?

எப்படி ஸ்வப்னத்தில் காணப்படும் தேஹம் கல்பிதமோ அப்படியேதான் இந்த அல்பமான (ஜாக்ரத்) தேஹமும். கல்பித வஸ்துவிற்கு ஜன்மம் எப்படி வரும்? ஜன்மமேயில்லாமலிருக்கையில் இருப்பு என்பது எங்கிருந்து வரும்? (93)

उपादानं प्रपञ्चस्य मृद्भाण्डस्येव कथ्यते ।
अज्ञानं चैव वेदान्तैस्तस्मिन्नष्टे क्व विश्वता ॥ ९४ ॥

உபாதானம் ப்ரபஞ்சஸ்ய ம்ருத் பாண்டஸ்யேவ கத்யதே |
அக்ஞாநம் சைவ வேதாந்தை ஸ் தஸ்மின் நஷ்டே க்வ
விச்வதா ||

भाण्डस्य-பானைக்கு, मृदिव-மண்போல, प्रपञ्चस्य-உலகிற்கு अज्ञानं चैव-அக்ஞானம்தான், उपादानं-உபாதானகாரணமாக, वेदान्तैः-உபநிஷத்துக்களால், कथ्यते-சொல்லப்படுகிறது. तस्मिन्-அந்த அக்ஞானம், नष्टे-அழிந்த பிறகு, विश्वता-பிரபஞ்சம், क्व-எங்கு இருக்கமுடியும்?

குடத்திற்கு எப்படி மண் உபாதான காரணமோ அப்படியே பிரபஞ்சத்திற்கு உபாதானகாரணம் அக்ஞானம் என்று வேதாந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த (உபாதான காரணமான) அக்ஞானம் நாசமடைந்தபிறகு பிரபஞ்சம் எங்கே இருக்கமுடியும்? (94)

यथा रज्जुं परित्यज्य सर्पं गृह्णाति वै भ्रमात् ।
तद्वत्सत्यमविज्ञाय जगत्पश्यति मूढधीः ॥ ९५ ॥

யதா ரஜ்ஜும் பரித்யஜ்ய ஸர்ப்பம் க்ருஹ்ணாதி வை ப்ரமாத் |
தத்வத் ஸத்யமவிஞாய ஜகத் பச்யதி மூடதீ: ||

यथा-எப்படி, रज्जुं-கயிற்றை, परित्यज्य-விட்டுவிட்டு, भ्रमात्-ப்ராந்தியால், सर्पं-பாம்பை, गृह्णाति-அறிந்துகொள்கிறுனே, तद्वत्-அதுபோல, मूढधीः-புத்தி மோஹம் கொண்டவன், सत्यं-உண்மையான ப்ரஹ்மத்தை, अविज्ञाय-அறிந்துகொள்ளாமல், जगत्-பிரபஞ்சத்தை, पश्यति-பார்க்கிறுன்.

கயிற்றை விட்டுவிட்டு பிரமத்தினுல் எவ்விதம் பாம்பை பார்க்கிறுனே, அதேமாதிரி ஸத்யமாயுள்ள பிரஹ்மத்தை அறிந்துகொள்ளாமல் மோஹத்தையடைந்த புத்தியோடு கூடினவன் ஜகத்தைப்பார்க்கிறுன். (95)

रज्जुरूपे परिज्ञाते सर्पभ्रान्तिर्न तिष्ठति ।
अधिष्ठाने तथा ज्ञाते प्रपञ्चः शून्यतां व्रजेत् ॥ ९६ ॥

ரஜ்ஜு ரூபே பரிஞாதே ஸர்ப்ப ப்ராந்திர் ந திஷ்டதி ।
அதிஷ்டானே ததா ஞாதே ப்ரபஞ்ச: ஶூன்யதாம் வ்ரஜேத் ॥

रज्जुरूपे-கயிற்றின் ஸ்வரூபம், परिज्ञाते-நன்கு அறியப் பட்டபின், सर्पभ्रान्तिः-பாம்பு என்ற ப்ரமம், न तिष्ठति-நிற்காது तथा-அவ்வாறு, अधिष्ठाने அதிஷ்டானமான ப்ரஹ்மம், ज्ञाते-அறியப்பட்டபின், प्रपञ्चः-உலகம், शून्यतां-இல்லாத் தன்மையை, व्रजेत्-அடைந்துவிடும்.

கயிற்றின் ரூபம் அறியப்பட்டுவிட்டால் பாம்பு என்கிற பிரமம் நிற்காது. அப்படியே ஜகத்திற்கு அதிஷ்டானமாயுள்ள பிரஹ்மம் அறியப்பட்டுவிட்டால் ஜகத் ஒன்றுமில்லாமல் ஆகிவிடும். (96)

देहस्यापि प्रपञ्चत्वात्प्रारब्धावस्थितिः कुतः ।
अज्ञानिजनबोधार्थं प्रारब्धं वक्ति वै श्रुतिः ॥ ९७ ॥

தேஹஸ்யாபி ப்ரபஞ்சத்வாத் ப்ராரப்தாவஸ்திதி: குத: ।
அக்ஞானி ஜன போதார்த்தம் ப்ராரப்தம் வக்தி வை ச்ருதி: ॥

देहस्यापि-சரீரமும், प्रपञ्चत्वात्-பிரபஞ்சத்தில் அடங்கியுள்ளபடியால், प्रारब्धावस्थितिः-பிராரப்தத்தின் இருப்பு, कुतः-எவ்வாறு? अज्ञानिजनबोधार्थं-ஞானமில்லாத ஜனங்கள் அறிந்துகொள்வதற்காக, श्रुतिः-வேதம், प्रारब्धं-ப்ராரப்தத்தைப்பற்றி, वक्ति-சொல்கிறது.

தேஹமும் பிரபஞ்சமேயானபடியால் பிராரப்தம் எப்படி நிலைக்கும்? ஆத்ம ஞானமில்லாத ஜனங்களுக்கு தெரிவிப்பதற்காகத்தான் வேதம் பிராரப்தம் (உண்டுபோல்) சொல்கிறது. (97)

क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ।
बहुत्वं तन्निषेधार्थं श्रुत्या गीतं च वै स्फुटम् ॥ ९८ ॥

க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே |
பஹுத்வம் தந்நிஷேதார்த்தம் ச்ருத்யா கீதம் ச வை ஸ்புடம்||

"परावरे-மேலானதும் கீழானதுமான (காரணமாயும் காரியமாயும் உள்ள) எல்லா பிரபஞ்சமாகவும் இருக்கும், तस्मिन्-அந்த பிரஹ்மம், दृष्टे-பிரத்யக்ஷமாக அறிந்து கொள்ளப்பட்டபின், अस्य-இவனுடைய, कर्माणि-கர்மாக்கள், क्षीयन्ते-அழிந்துபோகின்றன", श्रुत्या-இந்த சுருதியால், तन्निषेधार्थं-அந்த பிராரப்தமும் இல்லை என்று சொல்வதற்காக, बहुत्वं-பன்மை, स्फुटं-வியக்தமாக, गीतं-சொல்லப் பட்டிருக்கிறது.

"மேலானதும் கீழானதுமான (காரணமாயும் காரியமாகவும் உள்ள) எல்லாப்பொருளாகவுமிருக்கும் அந்த பிரஹ்மத்தை ஸாக்ஷாத்காரம் செய்துவிட்டால் அவனுடைய கர்மாக்கள் நசித்துவிடும்" என்று வேதம் தெளிவாய் சொல்லியிருக்கிறது. (இவ்வாக்யத்தில் கர்மாக்கள் என்று உபயோகித்திருக்கும்) பன்மை அதை (பிராரப்த கர்மாவை) மறுப்பதற்காகத்தான். [ஸம்ஸ்கிருதத்தில் ஏகவசனம், த்விவசனம், பகுவசனம் என்று மூன்று வசனங்கள் இருப்பதனால் பஹுவசனத்தினால் சொல்லப்படும் பதார்த்தம் குறைந்தது மூன்றாவது இருக்கவேண்டும். கர்மாக்கள் என்ற பகுவசன சப்தத்தால் ஸஞ்சிதம் ஆகாமி, பிராரப்தம் என்கிற மூன்றையுமே கிரஹிக்கவேண்டும். இல்லையானால் பகுவசனத்திற்கு அர்த்தமில்லை என்று ஏற்பட்டுவிடும் என்பது தாத்பர்யம்] (98)

उच्यतेऽज्ञैर्बलाच्चेत्तत्तदानर्थद्वयागमः ।
वेदान्तमतहानं च यतो ज्ञानमिति श्रुतिः ॥ ९९ ॥

உச்யதேऽஜ்ஞைர் பலாச்சேத் தத் ததாऽநர்த்த த்வயாகம: |
வேதாந்தமத ஹானம் ச யதோ ஞானமிதி ச்ருதி: ||

अज्ञैः-அறிவில்லாதவர்களால், बलात्-கட்டாயமாக, तत्-அது (பிராரப்தம் மிஞ்சி நிற்கிறது என்பது), उच्यते

चेत्-சொல்லப்படுமேயானால், तदा-அப்பொழுது, अनर्थद्वयागमः-இரு அனர்த்தங்கள் வரும். वेदान्तमतहानं च-உபநிஷத் ஸித்தாந்தம் போய்விடும், यतः-ஏனெனில், ज्ञानमिति-ஞானம் என்று, श्रुतिः-ச்ருதி (கூறுகிறது.)

அறியாதவர்கள் பிடிவாதமாக அது (பிராரப்தம்) உண்டு என்று சொல்வார்களேயானால் அப்பொழுது இரண்டுவித அனர்த்தம் வந்து சேரும். வேதாந்த ஸித்தாந்தத்தைக் கைவிட்டதாக ஆகும். அப்படியே "யதோ ஞானம்" என்கிற வேதவாக்கியமும் (கைவிடப் பட்டதாக ஆகும்). (99)

பதினைந்து ஞானங்கங்கள் :—

त्रिपञ्चाङ्गान्यथो वक्ष्ये पूर्वोक्तस्यैव सिद्धये ।
तैश्च सर्वैः सदा कार्यं निदिध्यासनमेव तु ॥ १०० ॥

த்ரிபஞ்சாங்காந்யதோ வக்ஷ்யே பூர்வோக்தஸ்யைவ ஸித்தயே ।
தைச்ச ஸர்வை: ஸதா கார்யம் நிதித்யாஸனமேவ து ॥

पूर्वोक्तस्य-முன்கூறப்பட்ட தத்வஸாக்ஷாத்காரம், सिद्धये एव-ஸித்திப்பதற்காகவே, अथो-பிறகு, त्रिपञ्चाङ्गानि-மூன்று ஐந்து (பதினைந்து) அங்கங்களை, वक्ष्ये-சொல்லப்போகிறேன். तैश्च सर्वैरेव-அவைகள் எல்லாவற்றோடும்தான், सदा-எப்பொழுதும், निदिध्यासनं-த்யானம், कार्यं-செய்யத்தக்கது.

முன் சொல்லப்பட்ட (தத்வஸாக்ஷாத்காரம்) ஸித்திப் பதற்காகவே பதினைந்து அங்கங்களைப் பற்றி இனிமேல் சொல்கிறேன். அவை யெல்லாவற்றையும் சேர்த்துக் கொண்டு தான் எப்பொழுதும் நிதித்யாஸனம் செய்ய வேண்டும். (100)

नित्याभ्यासादृते प्राप्तिर्न भवेत्सच्चिदात्मनः ।
तस्माद्ब्रह्म निदिध्यासेज्जिज्ञासुः श्रेयसे चिरम् ॥ १०१ ॥

நித்யாப்யாஸாத் ருதே ப்ராப்திர் ந பவேத் ஸச்சிதாத்மந: |
தஸ்மாத் ப்ரஹ்ம நிதித்யாஸேத் ஜிஞாஸு: ச்ரேயஸே சிரம் ||

**नित्याभ्यासादृते** - எப்பொழுதும் அப்யாஸம் செய்யா விட்டால், **सच्चिदात्मनः**-ஸத்தாகவும் சித்தாகவுமுள்ள ஆத்மாவின், **प्राप्तिः**-ப்ராப்தி, **न भवेत्**-ஏற்படாது. **तस्मात्**-ஆகையால், **जिज्ञासुः**-ஞானம் அடைய விரும்புபவன், **श्रेयसे**-முக்தி கிடைப்பதற்காக, **चिरं** - வெகுகாலம், **ब्रह्म** - ப்ரஹ்மஸ்வரூபத்தை **निदिध्यासेत्**-த்யானம் செய்ய வேண்டும்.

எப்பொழுதும் அப்யாஸம் செய்தாலொழிய ஸத்தாயும் சித்தாயுமுள்ள ஆத்மா கிட்டாது. ஆகையால் அறிய வேண்டுமென்று நினைக்கிறவன் சிரேயஸ்ஸை யுத்தேசித்து வெகுகாலம் பிரஹ்மத்தை அனுஸந்தானம் செய்ய வேண்டும். *(101)*

यमो हि नियमस्त्यागो मौनं देशश्च कालतः ।
आसनं मूलबन्धश्च देहसाम्यं च दृक्स्थितिः ॥ १०२ ॥

प्राणसंयमनं चैव प्रत्याहारश्च धारणा ।
आत्मध्यानं समाधिश्च प्रोक्तान्यङ्गानि वै क्रमात् ॥ १०३ ॥

யமோ ஹி நியமஸ் த்யாகோ மௌனம் தேசஶ்ச காலத: |
ஆஸநம் மூலபந்தச்ச தேஹ ஸாம்யம் ச த்ருக் ஸ்திதி : ||

ப்ராண ஸம்யமனம் சைவ ப்ரத்யாஹாரச்ச தாரணு |
ஆத்ம த்யாநம் ஸமாதிச்ச ப்ரோக்தாங்யங்கானி வை
க்ரமாத் ||

**यमः**-யமம், **नियमः**-நியமம், **त्यागः**-த்யாகம், **मौनं**-மௌனம், **देशश्च**-தேசம், **कालतः**-காலம், **आसनं**-ஆஸனம், **मूलबन्धश्च**-மூலபந்தம், **देहसाम्यं**-தேஹஸாம்யம், **दृक्स्थितिः** த்ருக்ஸ்திதி, **प्राणसंयमनं**-பிராண ஸம்யமனம், **प्रत्याहारश्च**-ப்ரத்யாஹாரம், **धारणा**-தாரணை, **आत्मध्यानं**-ஆத்மத்யானம் **समाधिश्च**-ஸமாதி. (இவ்விதம்) **क्रमात्**-வரிசையாக, **अङ्गानि**-அங்கங்கள் **प्रोक्तानि**-சொல்லப்பட்டுள்ளன,

(அந்த பதினைந்து) அங்கங்கள் வரிசையாக சொல்லப் பட்டிருக்கின்றன. 1. யமம், 2. நியமம், 3. த்யாகம், 4. மௌனம், 5. தேசம், 6. காலம், 7. ஆஸனம், 8. மூலபந்தம், 9. தேஹஸாம்யம், 10. திருக்ஸ்திதி, 11. பிராணஸம்யமனம், 12. பிரத்யாஹாரம், 13. தாரணை, 14. ஆத்மத்யானம், 15. ஸமாதி. (102–103)

1. யமம் :—

सर्वं ब्रह्मेति विज्ञानादिन्द्रियग्रामसंयमः ।
यमोऽयमिति संप्रोक्तोऽभ्यसनीयो मुहुर्मुहुः ॥ १०४ ॥

*ஸர்வம் ப்ரஹ்மேதி விஜ்ஞாநாதிந்த்ரிய க்ராம ஸம்யம: |*
*யமோऽயமிதி ஸம்ப்ரோக்தோऽப்யஸநீயோ முஹுர் முஹு: ||*

**सर्वं ब्रह्म**–எல்லாம் பிரஹ்மமே, **इति**-என்ற, **विज्ञानात्**–ஞானத்தால், **इन्द्रियग्रामसंयमः**–இந்திரியக் கூட்டத்தை அடக்குதல், **यम इति**-யமம் என்று, **संप्रोक्तः**-சொல்லப்பட்டது. **अयं**-இது, **मुहुर्मुहुः**-அடிக்கடி, **अभ्यसनीयः**-அப்யாஸம் செய்யத் தக்கது.

எல்லாம் பிரஹ்மமே என்ற அறிவினால் இந்திரிய ஸமூகத்தை அடக்குதல் **யமம்** என்று சொல்லப்படுகிறது. இதை அடிக்கடி அப்யாஸம் செய்யவேண்டும். (104)

2. நியமம் :—

सजातीयप्रवाहश्च विजातीयतिरस्कृतिः ।
नियमो हि परानन्दो नियमात्क्रियते बुधैः ॥ १०५ ॥

*ஸஜாதீய ப்ரவாஹச்ச விஜாதீய திரஸ்க்ருதி : |*
*நியமோ ஹி பராநந்தோ நியமாத் க்ரியதே புதை : ||*

**सजातीयप्रवाहः**–ஒரேமாதிரியான (ப்ரஹ்மாகார) விருத்தியின் பிரவாஹமும், **विजातीयतिरस्कृतिः**–வேறு விருத்திகள் நடுவில் வராமல் விலக்குவதும், **नियमो हि**-நியமமாகும். **नियमात्**–(இந்த) நியமத்திலிருந்து, **बुधैः**–வித்துவான்களால், **परानन्दः**–பேரானந்தம், **क्रियते**–அடையப்படுகிறது.

ஒரேமாதிரியான (பிரஹ்மாகார) விருத்தியைத் தொடர்ந்து பிரவாஹம்போல் செய்வதும், அதற்கு விரோதமான விருத்திகளை தூரத்தள்ளுவதும் **நியமம்** ஆகும். இந்த நியமத்தால், அறிவாளிகளால் மேலான ஆனந்தம் அடையப்படுகிறது. (105)

3. த்யாகம் :—

त्यागः प्रपञ्चरूपस्य चिदात्मत्वावलोकनात् ।
त्यागो हि महतां पूज्यः सद्यो मोक्षमयो यतः ॥ १०६ ॥

*த்யாக : ப்ரபஞ்ச ரூபஸ்ய சிதாத்மத்வாவலோகநாத் |*
*த்யாகோ ஹி மஹதாம் பூஜ்ய: ஸத்யோ மோக்ஷமயோ யத: ||*

**चिदात्मत्वावलोकनात्**–சைதன்ய ஸ்வரூபமாகப் பார்ப்பதால், **प्रपञ्चरूपस्य**-பிரபஞ்சவடிவத்தை, **त्यागः**-விட்டுவிடுவது (தோன்றுமல் செய்வது), **त्यागो हि**-த்யாகமாகும். (இது) **यतः**–எந்தக் காரணத்தால், **सद्यः**-உடனே, **मोक्षमयः**–மோக்ஷத்தையடைவிக்குமோ (அதனுல்), **महतां**-பெரியோர்களால், **पूज्यः**–கொண்டாடத்தக்கது.

பிரபஞ்சத்தின் வடிவம் சைதன்ய ஸ்வரூபமே என்று பார்ப்பதனுல் பிரபஞ்சத்தின் வடிவத்தை விட்டு விடுவது **த்யாகம்** ஆகும். இதிலிருந்தே உடனே அநேகமாய் மோக்ஷம் ஏற்படுவதால் மஹான்கள் இதை மிகவும் புகழ்கிருர்கள். (106)

4. மௌனம் :—

यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह ।
यन्मौनं योगिभिर्गम्यं तद्भजेत्सर्वदा बुधः ॥ १०७ ॥

*யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ |*
*யன் மௌனம் யோகிபிர் கம்யம் தத் பஜேத் ஸர்வதா புத: ||*

**वाचः**-சப்தங்கள், **मनसा सह**-மனத்துடன்கூட, **यतः**-எந்த ஸ்வரூபத்திலிருந்து, **अप्राप्य**-அடையமுடியாமல்,

निवर्तन्ते-திரும்பிவிடுகின்றனவோ (அது ப்ரஹ்மம், ஆகவே) यत् मौनं-எந்த மௌனம், योगिभिः-யோகிகளால், गम्यं-அடையத்தக்கதோ, तत्-அந்த மௌனத்தை, बुधः-வித்வான், सर्वदा-எப்பொழுதும், भजेत्-ஸேவிக்கவேண்டும்.

"வாக்குக்கள் மனஸோடு சேர்ந்து எதனிடம் போய் அடையமுடியாமல் திரும்புகின்றனவோ (அது பிரஹ்மம்)" என்றிருப்பதனுல் யோகிகளால் மாத்திரம் அறியத்தக்க நிலை மௌனம் எனப்படும். அதை அறிவாளி எப்பொழுதும் ஸேவிக்கவேண்டும். (107)

वाचो यस्मान्निवर्तन्ते तद्वक्तुं केन शक्यते ।
प्रपञ्चो यदि वक्तव्यः सोऽपि शब्दविवर्जितः ॥ १०८ ॥

வாசோ யஸ்மாத் நிவர்த்தந்தே தத் வக்தும் கேந ஶக்யதே ।
ப்ரபஞ்சோ யதி வக்தவ்ய : ஸோऽபி ஶப்த விவர்ஜித : ।

यस्मात्-எதிலிருந்து, वाचः-சப்தங்கள், निवर्तन्ते-திரும்பி விடுகின்றனவோ, तत्-அதை, वक्तुं-சொல்வதற்கு, केन-யாரால், शक्यते-முடியும்? प्रपञ्चः-பிரபஞ்சத்தைப் பற்றி यदि वक्तव्यः-சொல்லவேண்டுமேயானுல், सोऽपि-அதுவும், शब्दविवर्जितः-வார்த்தைகளற்றது.

எதிலிருந்து வாக்குக்கள் எல்லாம் திரும்பிவிடுகின்றனவோ அந்த பிரஹ்மத்தைப்பற்றி யாரால் சொல்ல முடியும்? ஜகத்தைப்பற்றி சொல்லலாமே யென்ருல் அதுவும் இவ்விதமென்று எடுத்துச்சொல்லமுடியாமல் அநிர்வசனீய மாயிருப்பதால் சொல்வதற்கு வார்த்தையற்றது. (108)

इति वा तद्भवेन्मौनं सतां सहजसंज्ञितम् ।
गिरां मौनं तु बालानां प्रयुक्तं ब्रह्मवादिभिः ॥ १०९ ॥

இதி வா தத் பவேத் மௌநம் ஸதாம் ஸஹஜஸம்ஜ்ஞிதம் ।
கிராம் மௌநம் து பாலாநாம் ப்ரயுக்தம் ப்ரஹ்மவாதிபி: ॥

इति वा-என்பதும் सतां-ஸாதுக்களுடைய, सहजसंज्ञितं-ஸஹஜம் (கூடப்பிறந்தது) என்ற பெயருள்ள, तत्-அந்த मौनं-மௌனமாக, भवेत्-ஆகும். गिरां मौनं तु-சப்தங்களின் மௌனம் அதாவது பேசாதிருத்தலோவெனில், बालानां-ஞானப்யாஸத்தின் ஆரம்பநிலையில் இருப்பவர்களுக்காக, ब्रह्मवादिभिः-ப்ரஹ்மவித்துக்களால், प्रयुक्तं-ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.

இவ்விதமாகவும் ஸத்புருஷர்களுக்கு ஸஹஜம் (கூடப் பிறந்தது) என்று சொல்லப்படும் அந்த மௌனம் ஏற்படும். பாலர்களுக்காக (ஞானிகளாகாமல் அப்யாஸதசையின் ஆரம்பத்தில் இருப்பவர்களுக்காக) பேச்சை அடக்குவது மௌனம் என்று பிரஹ்மத்தைப்பற்றிச் சொல்வோர்கள் விதித்திருக்கிறார்கள். (109)

5. தேசம்:—

आदावन्ते च मध्ये च जनो यस्मिन्न विद्यते ।
येनेदं सततं व्याप्तं स देशो विजनः स्मृतः ॥ ११० ॥

ஆதாவந்தே ச மத்யே ச ஜநோ யஸ்மின் ந வித்யதே ।
யேநேதம் ஸததம் வ்யாப்தம் ஸ தேஶோ விஜநः ஸ்ம்ருத: ॥

आदौ-முதலிலும், अन्ते च-கடைசியிலும், मध्ये च-நடுவிலும், यस्मिन्-எதில், जनः-ஜனம், न विद्यते-இல்லையோ, येन-எதனால், इदं-இந்த பிரபஞ்சம், सततं-இடையில்லாமல் முழுவதும், व्याप्तं-வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, सः-அந்தபிரஹ்மம், विजनः-ஜனங்களற்ற, देशः-தேசமாக, स्मृतः-கருதப் பட்டுள்ளது.

முன்னும் பின்னும் மத்தியிலும் எங்கே ஜனங்கள் கிடையாதோ, எதனால் இது எல்லாம் இடையில்லாமல் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அதுவே ஜனமற்ற தேசம் என்று கருதப்படுகிறது. (110)

6. காலம் :—

कलनात्सर्वभूतानां ब्रह्मादीनां निमेषतः ।
कालशब्देन निर्दिष्टो ह्यखण्डानन्द अद्वयः ॥ १११ ॥

கலநாத் ஸர்வ பூதாநாம் ப்ரஹ்மாதீநாம் நிமேஷத: ।
கால ஶப்தேன நிர்திஷ்டோ ஹ்யகண்டாநந்த அத்வய: ॥

**निमेषतः**-இமை கொட்டுவதற்குள், **ब्रह्मादीनां**-பிரஹ்மா முதலான, **सर्वभूतानां**-எல்லாப் பிராணிகளையும், **कलनात्**-ஸிருஷ்டி செய்வதனால், **अखण्डानन्दः**- பிரிவற்ற ஆநந்தஸ்வரூபமானதும், **अद्वयः**-இரண்டு அற்றதுமான பிரஹ்மம் **कालशब्देन**-காலம் என்ற வார்த்தையினால், **निर्दिष्टः**-குறிக்கப் பட்டுள்ளது.

பிரஹ்மா முதலான ஸகல பிராணிகளையும் ஒரு கண் சிமிட்டினால் உண்டுபண்ணுவதனால் அகண்டமான ஆனந்தஸ்வரூபியாய் இரண்டற்றதாயுள்ள பிரஹ்மமே காலம் என்ற சப்தத்தினால் குறிப்பிடப்படுகிறது. (111)

7. ஆஸனம் :—

सुखेनैव भवेद्यस्मिन्नजस्रं ब्रह्मचिन्तनम् ।
आसनं तद्विजानीयान्नेतरत्सुखनाशनम् ॥ ११२ ॥

ஸுகேனைவ பவேத் யஸ்மின்னஜஸ்ரம் ப்ரஹ்ம சிந்தனம் ।
ஆஸநம் தத் விஜாநீயாத் நேதரத் ஸுக நாஶநம் ॥

**यस्मिन्**-எதில், **ब्रह्मचिन्तनं**-ப்ரஹ்மத்யானம், **अजस्रं**-இடைவிடாமல், **सुखेनैव**-ஸுகமாகவே, **भवेत्**-ஏற்படுமோ **तत्**-அது, **आसनं**-ஆஸனமாக, **विजानीयात्**-அறியத்தக்கது. **सुखनाशनं**-ஸுகத்தைக் கெடுக்கிற, **इतरत्**-வேறு ஒன்றும், **न**-ஆஸனமாகாது.

எப்படியிருந்தால் பிரஹ்மத்தைச் சிந்திப்பது ஸுகமாகவே இடைவிடாமல் ஏற்படுமோ, அதையே ஆஸனம் என்று அறியவும். ஸுகத்தைக்கெடுக்கக்கூடிய வேறு எதுவும் ஆஸனமாகாது. (112)

सिद्धं यत्सर्वभूतादि विश्वाधिष्ठानमव्ययम् ।
यस्मिन्सिद्धाः समाविष्टास्तद्वै सिद्धासनं विदुः ॥ ११३ ॥

ஸித்தம் யத் ஸர்வபூதாதி விச்வாதிஷ்டாநமவ்யயம் ।
யஸ்மின் ஸித்தா; ஸமாவிஷ்டாஸ் தத்வை ஸித்தாஸநம்
விதுः ॥

यत्-எது, सिद्धं-(எப்பொழுதும்) ஸித்தமாக உள்ளதோ सर्वभूतादि-எல்லா பூதங்களுக்கும் காரணமோ, विश्वाधिष्ठानं-பிரபஞ்சம் தோன்றுவதற்கு அதிஷ்டானமோ, अव्ययं-குறை வில்லாததோ, यस्मिन्-எதில், सिद्धाः-ஸித்த புருஷர்கள் (ஞானிகள்) समाविष्टाः-நன்கு நிலைத்து அமர்ந்திருக் கின்றனரோ, तत्-அதை, सिद्धासनं-ஸித்தாஸனமாக, विदुः அறிவார்கள்.

எது எப்பொழுதும் ஸித்தமாக இருந்துகொண்டு உண்டாகிறவைகளுக்கெல்லாம் காரணமாயும் ஜகத்திற்கு அதிஷ்டானமாயும், குறைவன்னியிலும் இருக்கிறதோ, எதிலேயே ஸித்தபுருஷர்கள் நன்கு நிலைத்திருக்கிறார்களோ, அதையேதான் ஸித்தாஸனம் என்று அறிவார்கள். (113)

8. மூலபந்தம்:—

यन्मूलं सर्वभूतानां यन्मूलं चित्तबन्धनम् ।
मूलबन्धः सदा सेव्यो योग्योऽसौ राजयोगिनाम् ॥ ११४ ॥

யன் மூலம் ஸர்வ பூதாநாம் யன் மூலம் சித்த பந்தனம் ।
மூல பந்தः ஸதா ஸேவ்யோ யோக்யோऽஸௌ ராஜ
யோகிநாம் ॥

सर्वभूतानां-எல்லா பூதங்களுக்கும், यत्-எது, मूलं-ஆதி காரணமோ, यन्मूलं-எதன் காரணமாக, चित्तबन्धनं-மனதைக் கட்டுப்படுத்துவது ஏற்படுகிறதோ, राजयोगिनां-ராஜயோகி களுக்கு, योग्यः-தக்கதான, असौ-அந்த, मूलबन्धः-மூலபந்தம் सदा-எப்பொழுதும், सेव्यः-ஸேவிக்கத்தக்கது.

எது உண்டாகும் வஸ்துக்களுக்கெல்லாம் வேறோ, எதை ஆதாரமாக வைத்துக்கொண்டு மனதைக் கட்டுப் படுத்தவேண்டுமோ, அந்த மூலபந்தம் தான் எப்பொழுதும் ஸேவிக்கத்தகுந்தது. அதுவே ராஜயோகம் அப்யஸிப்ப வர்களுக்கு மிகவும் உரித்தானது. *(114)*

9. தேஹஸாம்யம் :—

अङ्गानां समतां विद्यात्समे ब्रह्मणि लीयते ।
नो चेन्नैव समानत्वमृजुत्वं शुष्कवृक्षवत् ॥ ११५ ॥

அங்காநாம் ஸமதாம் வித்யாத் ஸமே ப்ரஹ்மணி லீயதே |
நோ சேத் நைவ ஸமானத்வம் ருஜுத்வம் ஶுஷ்க வ்ருக்ஷவத்||

**समे**-ஸமமான, **ब्रह्मणि**-ப்ரஹ்மத்தில், **लीयते**-(மனம்) லயமடைகிறது (என்பதை), **अङ्गानां समतां**-அங்கங்களின் ஸாம்யமாக (தேஹஸாம்யமாக), **विद्यात्**-அறியத்தக்கது. **नोचेत्**-ப்ரஹ்மத்தில் லயமேற்படாவிட்டால், **शुष्कवृक्षवत्**- காய்ந்த மரம்போல், **ऋजुत्वं**-உடலின் அவயவங்கள் நேரா யிருப்பது மட்டும், **समानत्वं**-தேஹஸாம்யமாக, **नैव**-ஆகாது.

ஸமமானப்ரஹ்மத்தில் லயம் ஏற்படுமேயானால் அதை அங்கங்களின் ஸாம்யம் அதாவது தேஹஸாம்யம் என்று அறியத்தக்கது. அப்படி ப்ரஹ்மத்தில் லயம் ஏற்படாமல் காய்ந்த மரம்போல் உடல் நேராக இருப்பதுமட்டும் தேஹ ஸாம்யமாகாது. *(115)*

10. திருஷ்டி :—

दृष्टिं ज्ञानमयीं कृत्वा पश्येद्ब्रह्ममयं जगत् ।
सा दृष्टिः परमोदारा न नासाग्रावलोकिनी ॥ ११६ ॥

த்ருஷ்டிம் ஞாநமயீம் க்ருத்வா பச்யேத் ப்ரஹ்மமயம் ஜகத் |
ஸா த்ருஷ்டி: பரமோதாரா ந நாஸாக்ராவலோகினீ ||

**दृष्टिं**-பார்வையை, **ज्ञानमयीं**-ஞானமயமாக, **कृत्वा**-செய்து **जगत्**-பிரபஞ்சத்தை, **ब्रह्ममयं**-ப்ரஹ்மஸ்வரூபமாக, **पश्येत्**-

பார்க்கவேண்டும். सा-அது, परमा-மேலானதும், उदारा-சிறந்ததுமான, दृष्टिः-பார்வை. नासाग्रावलोकिनी-மூக்கு நுனியைப் பார்ப்பதுமட்டும், न-த்ருஷ்டியாகாது.

ஞானமயமான திருஷ்டியை ஏற்படுத்திக்கொண்டு அதனால் ஜகத்தை பிரஹ்மமயமாகப் பார்ப்பதே உத்தமமான சிலாக்கியமான திருஷ்டி. மூக்கு நுனியைப் பார்த்துக் கொண்டிருப்பது அல்ல. *(116)*

**द्रष्टृदर्शनदृश्यानां विरामो यत्र वा भवेत् ।**
**दृष्टिस्तत्रैव कर्तव्या न नासाग्रावलोकिनी ॥ ११७ ॥**

*த்ரஷ்ட்ரு தர்ஶந த்ருச்யாநாம் விராமோ யத்ர வா பவேத் ।*
*த்ருஷ்டிஸ் தத்ரைவ கர்தவ்யா ந நாஸாக்ராவலோகினீ ॥*

यत्र-எதில், द्रष्टृदर्शनदृश्यानां-பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படும் வஸ்து இம்மூன்றிற்கும், विरामः-முடிவு, भवेत्-ஏற்படுமோ, तत्रैव-அதிலேயே, दृष्टिः-பார்வை, कर्तव्या-செலுத்தத்தக்கது. नासाग्रावलोकिनी-மூக்கு நுனியைப் பார்ப்பது மட்டும், न-த்ருஷ்டியாகாது.

பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படும் வஸ்து (என்ற மூன்றும்) எந்த நிலையில் இல்லாமல் போய்விடுமோ, அதிலேயேதான் திருஷ்டியைச் செலுத்தவேண்டும். மூக்கின் நுனியைப் பார்ப்பது அல்ல. *(117)*

11. பிராணாயாமம்:—

**चित्तादिसर्वभावेषु ब्रह्मत्वेनैव भावनात् ।**
**निरोधः सर्ववृत्तीनां प्राणायामः स उच्यते ॥ ११८ ॥**

*சித்தாதி ஸர்வ பாவேஷு ப்ரஹ்மத்வேனைவ பாவநாத் ।*
*நிரோதః ஸர்வ வ்ருத்தீநாம் ப்ராணாயாம: ஸ உச்யதே ॥*

चित्तादिसर्वभावेषु-சித்தம் முதலான எல்லா வஸ்துக்களிலும், ब्रह्मत्वेनैव-ப்ரஹ்மமாகவே, भावनात्-பாவனை

செய்வதால், **सर्ववृत्तीनां**-எல்லா விருத்திகளையும், **निरोधः**-அடக்குவது, **सः**-அந்த, **प्राणायामः**-பிராணயாமமாக, **उच्यते**-சொல்லப்படுகிறது.

சித்தம் முதலான எல்லா பதார்த்தங்களும் பிரஹ்மமே என்று பாவிப்பதனுல் ஸகல விருத்திகளையும் அடக்குவது பிராணயாமம் என்று சொல்லப்படுகிறது. (118)

**निषेधनं प्रपञ्चस्य रेचकाख्यः समीरणः ।**
**ब्रह्मैवास्मीति या वृत्तिः पूरको वायुरीरितः ॥ ११९ ॥**

நிஷேதநம் ப்ரபஞ்சஸ்ய ரேசகாக்ய: ஸமீரண: ।
ப்ரஹ்மைவாஸ்மீதி யா வ்ருத்தி: பூரகோ வாயுரீரித: ॥

**प्रपञ्चस्य**-பிரபஞ்சத்தை, **निषेधनं**-இல்லையென்று தள்ளுவது, **रेचकाख्यः**-ரேசகம் என்ற பெயருள்ள, **समीरणः**-வாயு. **ब्रह्मैव**-ப்ரஹ்மமாகவே, **अस्मि**-இருக்கிறேன், **इति**-என்ற, **या**-யாதொரு, **वृत्तिः**-வ்ருத்தியோ(அது), **पूरको वायुः**-பூரகவாயுவாக, **ईरितः**-சொல்லப்பட்டுள்ளது.

பிரபஞ்சத்தை இல்லையென்று தள்ளுவது ரேசகம் என்ற வாயு ஆகும். நான் பிரஹ்மம்தான் என்ற விருத்தி பூரகம் என்ற வாயு என்று சொல்லப்பட்டிருக்கிறது. (119)

**ततस्तद्वृत्तिनैश्चल्यं कुम्भकः प्राणसंयमः ।**
**अयं चापि प्रबुद्धानामज्ञानां प्राणपीडनम् ॥ १२० ॥**

ததஸ்தத்வ்ருத்தி நைச்சல்யம் கும்பக: ப்ராண ஸம்யம: ।
அயம் சாபி ப்ரபுத்தாநாமஜ்ஞாநாம் ப்ராண பீடநம் ॥

**ततः**-பிறகு, **तद्वृत्तिनैश्चल्यं**-அந்த ப்ரஹ்மாகார வ்ருத்தி அசையாமல் (மாருமல்) இருப்பது, **कुम्भकः**-கும்பகம் என்ற, **प्राणसंयमः**-பிராணயாமமாகும். **अयं चापि**-இதுவும், **प्रबुद्धानां**-ஞானிகளுக்கு (ஏற்பட்டது). **अज्ञानां**-அக்ஞானிகளுக்கு, **प्राणपीडनं**-பிராண ஸஞ்சாரத்தைத் தடுப்பதுதான் (பிராணயாமமாகும்.)

அதன்பிறகு (ரேசக பூரகங்களுக்குப் பின்) அந்த விருத்திகளை அசையாமல் செய்வது கும்பகம் என்ற பிராணாயாமம் ஆகும். (இப்பொழுது சொல்லிக்கொண்டு வந்த) இந்த விதம் ஞானிகளுக்குத்தான். அக்ஞானிகளுக்கு பிராண ஸஞ்சாரத்தை நிரோதம் செய்வதுதான் (பிராணாயாமம் ஆகும்) (120)

12. பிரத்யாஹாரம் :—

विषयेष्वात्मतां दृष्ट्वा मनसश्चिति मज्जनम् ।
प्रत्याहारः स विज्ञेयोऽभ्यसनीयो मुमुक्षुभिः ॥ १२१ ॥

விஷயேஷ்வாத்மதாம் த்ருஷ்ட்வா மநஸச்சிதி மஜ்ஜனம் ।
ப்ரத்யாஹார: ஸ விஜ்ஞேயோ ऽப்யஸநீயோ முமுக்ஷுபி:॥

**विषयेषु**-விஷயங்களில், **आत्मतां**-ஆத்மஸ்வரூபத்தை, **दृष्ट्वा**-பார்த்து, **मनसः**-மனத்தை, **चिति**-சைதன்யஸ்வரூபத்தில், **मज्जनं**-மூழ்கும்படி செய்வது, **मुमुक्षुभिः**-மோக்ஷமடைய விரும்புபவர்களால், **अभ्यसनीयः**-அப்யாஸம் செய்யத்தக்க, **सः**-அந்த, **प्रत्याहारः**-பிரத்யாஹாரமாக, **विज्ञेयः**-அறியத்தக்கது.

விஷயங்களும் ஆத்மாவே என்று உணர்ந்து மனதை சைதன்யத்தில் மூழ்கும்படி செய்வது பிரத்யாஹாரம் என்று அறியவேண்டியது. இதை மோக்ஷத்தில் ஆசையுள்ளவர்கள் அப்யாஸம் செய்யவேண்டியது. (121)

13. தாரணை :—

यत्र यत्र मनो याति ब्रह्मणस्तत्र दर्शनात् ।
मनसो धारणं चैव धारणा सा परा मता ॥ १२२ ॥

யத்ர யத்ர மநோ யாதி ப்ரஹ்மணஸ் தத்ர தர்ஶநாத் ।
மநஸோ தாரணம் சைவ தாரணா ஸா பரா மதா ॥

**यत्र यत्र**-எங்கெங்கு, **मनः**-மனம், **याति**-போகிறதோ, **तत्र**-அங்கங்கு, **ब्रह्मणः**-பிரஹ்மத்தை, **दर्शनात्**-பார்ப்பதால்,

**मनसः**-மனதை, **धारणं चैव**-நிலைநிறுத்துவதுதான், **सा**-அந்த **परा**-சிறந்த, **धारणा**-தாரணையாக, **मता**-கருதப்பட்டுள்ளது.

எங்கே எங்கேயெல்லாம் மனம் போகிறதோ அங்கே அங்கேயெல்லாம் பிரஹ்மமே காணப்படுவதால் மனதை நிலைக்கச்செய்தலே உத்தமமான தாரணை என்று கருதப் பட்டிருக்கிறது. (122)

14. த்யானம் :—

ब्रह्मैवास्मीति सद्वृत्त्या निरालम्बतया स्थितिः ।
ध्यानशब्देन विख्याता परमानन्ददायिनी ॥ १२३ ॥

ப்ரஹ்மைவாஸ்மீதி ஸத்வ்ருத்த்யா நிராலம்பதயா ஸ்திதி: ।
த்யான ஶப்தேன விக்யாதா பரமானந்த தாயினீ ॥

**ब्रह्मैव अस्मीति**-ப்ரஹ்மமாகவே இருக்கிறேன் என்ற, **सद्वृत्त्या**-ஸத்யமான விருத்தியுடன், **निरालम्बतया**-வேறு பிடிமானமொன்றுமில்லாமல், **स्थितिः**-இருப்பது, **ध्यानशब्देन**-த்யானம் என்ற சப்தத்தால், **विख्याता**-பிரஸித்திபெற்றது. (இது) **परमानन्ददायिनी**-பேரானந்தத்தைக் கொடுக்கக் கூடியது.

நான் பிரஹ்மம்தான் என்ற ஸத்யமான விருத்தியுடன் வேறொன்றையும் அவலம்பமாக வைத்துக்கொள்ளாமல் இருந்துவிடுவது **த்யானம்** என்று பிரஸித்தி பெற்றது. இதுவே உத்தமமான ஆனந்தத்தைக் கொடுக்கும். (123)

15. ஸமாதி :—

निर्विकारतया वृत्त्या ब्रह्माकारतया पुनः ।
वृत्तिविस्मरणं सम्यक्समाधिर्ज्ञानसंज्ञकः ॥ १२४ ॥

நிர்விகாரதயா வ்ருத்த்யா ப்ரஹ்மாகாரதயா புந: ।
வ்ருத்தி விஸ்மரணம் ஸம்யக் ஸமாதிர் ஞான ஸஞ்ஜ்ஞக: ॥

**निर्विकारतया**-மாறுதலொன்றுமில்லாததும், **ब्रह्माकारतया** ப்ரஹ்மாகாரமானதுமான, **वृत्त्या**-விருத்தியுடன் இருந்து, **पुनः**-மறுபடியும், **वृत्तिविस्मरणं**-எல்லாவிருத்திகளையும் மறந்து இருப்பது, **ज्ञानसंज्ञकः**-ஞானமென்ற பெயருள்ள, **सम्यक्**-நல்ல, **समाधिः**-ஸமாதியாகும்.

ஒருவித மாறுதலுமன்னியில் பிரஹ்மாகாரமாகவே விருத்தியைச் செய்து, மேலால் அந்த விருத்தியையும் நன்கு மறந்து நிற்பது ஸமாதியாகும். இதுவே ஞானம் என்ற பெயருள்ளது. (124)

**एवं चाकृत्रिमानन्दं तावत्साधु समभ्यसेत् ।**
**वश्यो यावत्क्षणात्पुंसः प्रयुक्तः स भवेत्स्वयम् ॥ १२५ ॥**

ஏவம் சாக்ருத்ரிமாநந்தம் தாவத் ஸாது ஸமப்யஸேத் ।
வச்யோ யாவத் க்ஷணாத் பும்ஸः ப்ரயுக்த: ஸ பவேத் ஸ்வயம் ॥

**यावत्**-எப்பொழுது, **पुंसः**-மனிதனுக்கு, **प्रयुक्तः**-நடத்தப் பட்ட, **सः**-அந்த ஸமாதி, **क्षणात्**-ஒரு நிமிஷத்தில், **स्वयं**-தானாகவே, **वश्यः**-ஸ்வாதீனமாக, **भवेत्**-ஆகுமோ, **तावत्**-அதுவரை, **एवं**-இவ்வாறு, **अकृत्रिमानन्दं**-நிஜமான ஆனந்தத் தைத்தரும் ஸமாதியை, **साधु**-நன்கு, **समभ्यसेत्**-அப்யஸிக்க வேண்டும்.

இவ்விதமாக மனிதனுக்கு ஏவினவுடன் ஒரு க்ஷணத்தி லேயே தானாகவே இந்த ஸமாதி நிலை ஸ்வாதீனமாக ஏற் படும் வரை இந்த செய்யப்படாத (ஸ்வபாவஸித்தமான) ஆனந்தத்தைத் தரும் ஸமாதியை நன்கு அப்யஸிக்க வேண்டும். (125)

ஞானநிஷ்டை:—

**ततः साधननिर्मुक्तः सिद्धो भवति योगिराट् ।**
**तत्स्वरूपं न चैकस्य विषयो मनसो गिराम् ॥ १२६ ॥**

*தத: ஸாதன நிர்முக்த: ஸித்தோ பவதி யோகிராட் |*
*தத்ஸ்வரூபம் ந சைகஸ்ய விஷயோ மநஸோ கிராம் ||*

**ततः**-பிறகு, **साधननिर्मुक्तः**-ஸாதனுப்யாஸ நிலையிலிருந்து விடுபட்ட, **योगिराट्**-சிறந்த யோகி, **सिद्धः**-ஸித்த புருஷனுக, **भवति**-ஆகிருர். **तत्स्वरूपं**-அந்த ஸ்வரூபம், **एकस्य**-ஒருவனுடைய, **मनसः**-மனத்திற்கும், **गिरां च**-வார்த்தைகளுக்கும், **न विषयः**-எட்டாதது.

பிற்பாடு ஸாதனங்களை அநுஷ்டிக்கவேண்டிய அவசியத்திலிருந்து விடுபட்டவனுக அந்த யோகி சிரேஷ்டர் ஸித்தராகிவிடுகிருர். அவருடைய ஸ்வரூபம் யாருடைய மனஸிற்கும் வாக்குக்களுக்கும் எட்டக்கூடிய விஷயமாகாது. *(126)*

**समाधौ क्रियमाणे तु विघ्ना आयान्ति वै बलात् ।**
**अनुसंधानराहित्यमालस्यं भोगलालसम् ॥ १२७ ॥**

**लयस्तमश्च विक्षेपो रसास्वादश्च शून्यता ।**
**एवं यद्विघ्नबाहुल्यं त्याज्यं ब्रह्मविदा शनैः ॥ १२८ ॥**

*ஸமாதௌ க்ரியமாணே து விக்நா ஆயாந்தி வை பலாத் |*
*அனுஸந்தான ராஹித்ய மாலஸ்யம் போகலாலஸம் ||*

*லயஸ் தமச்ச விக்ஷேபோ ரஸாஸ்வாதச்ச ஶூந்யதா |*
*ஏவம் யத் விக்ன பாஹுள்யம் த்யாஜ்யம் ப்ரஹ்மவிதா ஶனை: ||*

**समाधौ**-ஸமாதியானது, **क्रियमाणे**-அப்யஸிக்கப்படும் பொழுது, **बलात्**-பலாத்காரமாக, **विघ्नाः**-இடையூறுகள், **आयान्ति**-வருகின்றன. **अनुसंधानराहित्यं**-தியானத்தில் தொடர்ச்சியில்லாமை, **आलस्यं**-சோம்பல், **भोगलालसं**-விஷய இன்பத்தை அநுபவிப்பதில் ஆசை, **लयः**-தூக்கம், **तमः**-அக்ஞானம், **विक्षेपः**-வெளிவிஷயங்களில் இழுக்கப்படுதல், **रसास्वादः**-ருசியை அனுபவித்தல், **शून्यता**-ஒன்றும் இல்லாமல்

இருப்பது एवं-இவ்விதமான, यत्-எந்த, विघ्नबाहुल्यं-பலவித இடையூறுகளுண்டோ (அவை), ब्रह्मविदा-ப்ரஹ்ம ஞானியால், शनैः-மெள்ள மெள்ள, त्याज्यं-விலக்கத்தக்கது.

ஆனால் ஸமாதி செய்து வருவதில் பலாத்காரமாக சில இடையூறுகள் வரும். அவையாவன — தொடர்ச்சியாய் இராமை, சோம்பல், விஷய ஸுகானுபவத்தில் ஆசை, தூக்கம், அக்ஞானம், வெளியில் இழுபடல், ருசியை அனுபவித்தல், சூன்யமாக இருந்துவிடல். இவ்விதமுள்ள பலவித விக்னங்களை பிரஹ்ம ஞானி மெள்ள மெள்ள விலக்கவேண்டும். (127-128)

भाववृत्त्या हि भावत्वं शून्यवृत्त्या हि शून्यता ।
ब्रह्मवृत्त्या हि पूर्णत्वं तथा पूर्णत्वमभ्यसेत् ॥ १२९ ॥

பாவ வ்ருத்த்யா ஹி பாவத்வம் ஶூந்ய வ்ருத்த்யா ஹி
ஶூந்யதா ।
ப்ரஹ்ம வ்ருத்த்யா ஹி பூர்ணத்வம் ததா பூர்ணத்வ
மப்யஸேத் ॥

भाववृत्त्या-விஷயங்களின் விருத்தியால், भावत्वं-விஷயத் தன்மையும், शून्यवृत्त्या-சூன்ய விருத்தியால், शून्यता-சூன்யத் தன்மையும், तथा-அவ்வாறு, ब्रह्मवृत्त्या-ப்ரஹ்ம விருத்தியால், पूर्णत्वं-பூரணத்தன்மையும் ஏற்படுகிறது (ஆகையால்), पूर्णत्वं-பூரணத்தன்மையை, अभ्यसेत्-அப்யஸிக்கவேண்டும்.

இருக்கும் பதார்த்தங்களில் விருத்தியைச் செலுத்தினால் அப்படியிருக்கும் தன்மை ஏற்படும். சூன்யமாக விருத்தியை வைத்துக்கொண்டால் சூன்யத்தன்மை ஏற்படும். அப்படியே பிரஹ்மாகாரமாக விருத்தியை வைத்துக்கொண்டால் பரிபூர்ணத்தன்மை ஏற்படும். ஆகையால் இந்த பரிபூர்ணத் தன்மையை அப்யாஸம் செய்யவேண்டியது. (129)

ये हि वृत्तिं जहत्येनां ब्रह्माख्यां पावनीं पराम् ।
वृथैव ते तु जीवन्ति पशुभिश्च समा नराः ॥ १३० ॥

யே ஹி வ்ருத்திம் ஜஹத்யேநாம் ப்ரஹ்மாக்யாம் பாவநீம் பராம் |
வ்ருதைவ தே து ஜீவந்தி பஶுபிச்ச ஸமா நரா: ||

ये-எவர்கள், पावनीं-பரிசுத்தமானதும், परां-சிறந்தது மான, एनां-இந்த, ब्रह्माख्यां वृत्तिं-ப்ரஹ்மமென்று பெயருள்ள (ப்ரஹ்மாகாரமான) விருத்தியை, जहति-(அப்யாஸம் செய் யாமல்) விட்டுவிடுகிறார்களோ, पशुभिः-பசுக்களுடன், समाः-ஸமானமான, ते नराः-அந்த மனிதர்கள், वृथैव-வீணாகவே (பிரயோஜனமில்லாமலே), जीवन्ति-வாழ்கிறார்கள்.

எவர்கள் இந்த பரிசுத்தமான உத்கிருஷ்டமான பிரஹ்மாகாரமென்ற விருத்தியை விட்டுவிடுகிறார்களோ அவர்கள் வீணாகவே ஜீவித்திருக்கிறார்கள். அந்த மனுஷ்யர்கள் பசுக்களுக்கு ஸமானமே. (130)

ये हि वृत्तिं विजानन्ति ये ज्ञात्वा वर्धयन्त्यपि ।
ते वै सत्पुरुषा धन्या वन्द्यास्ते भुवनत्रये ॥ १३१ ॥

யே ஹி வ்ருத்திம் விஜாநந்தி யே ஞாத்வா வர்த்தயந்த்யபி|
தே வை ஸத்புருஷா தன்யா வந்த்யாஸ்தே புவனத்ரயே ||

ये-எவர்கள், वृत्तिं-ப்ரஹ்மாகார விருத்தியை, विजानन्ति-(அப்யாஸம் செய்ய) தெரிந்தவர்களோ, ये-எவர்கள், ज्ञात्वा-அறிந்து, वर्धयन्ति अपि-அபிவிருத்தியடையவும் செய்கிறார் களோ, ते वै-அவர்கள்தான், सत्पुरुषाः-ஸத்புருஷர்கள், धन्याः-பாக்யசாலிகள், भुवनत्रये-மூவுலகிலும், ते-அவர்கள், वन्द्याः-வணங்கத் தகுந்தவர்கள்.

எவர்கள் இந்த விருத்தியை (அப்யஸிக்க) நன்கு தெரிந்தவர்களோ, எவர்கள் தெரிந்து மேலும் விருத்தியை அபிவிருத்தி செய்கிறார்களோ, அவர்களே ஸத்புருஷர்கள், தன்யர்கள், மூவுலகத்திலும் அவர்கள் நமஸ்கரிக்கத்தகுந்த வர்கள். (131)

येषां वृत्तिः समावृद्धा परिपक्वा च सा पुनः ।
ते वै सद्ब्रह्मतां प्राप्ता नेतरे शब्दवादिनः ॥ १३२ ॥

யேஷாம் வ்ருத்தி: ஸமாவ்ருத்தா பரிபக்வா ச ஸா புந: ।
தே வை ஸத்ப்ரஹ்மதாம் ப்ராப்தா நேதரே ஶப்தவாதிந: ॥

येषां–எவர்களுடைய, सा–அந்த, वृत्तिः–விருத்தியானது समावृद्धा–நன்கு வளர்ச்சியடைந்து, पुनः–மேலும், परिपक्वाच–பரிபாகமும் அடைந்துள்ளதோ, ते वै–அவர்கள் தான், सद्ब्रह्मतां–ஸத்ரூபமான ப்ரஹ்மத்தன்மையை, प्राप्ताः–அடைந்தவர்கள். शब्दवादिनः–சப்தத்தை மட்டும் சொல்லிக்கொண்டிருக்கிற, इतरे–மற்றவர்கள், न–அவ்விதமல்ல.

எவர்களுடைய (பிரஹ்மாகார) விருத்தி நன்கு எல்லா விதத்திலும் விருத்தியடைந்து பரிபாகமடைந்திருக்கிறதோ, அவர்கள்தான் ஸத்தான பிரஹ்மத்தன்மையை அடைந்தவர்கள். சப்தத்தை மாத்திரம் சொல்லிக்கொண்டிருக்கிற மற்றவர்கள் அவ்விதம் ஆகமாட்டார்கள். (132)

कुशला ब्रह्मवार्तायां वृत्तिहीनाः सुरागिणः ।
तेऽप्यज्ञानितया नूनं पुनरायान्ति यान्ति च ॥ १३३ ॥

குஶலா ப்ரஹ்மவார்தாயாம் வ்ருத்திஹீநா: ஸுராகிண: ।
தேऽப்யக்ஞாநிதயா நூநம் புநராயாந்தி யாந்தி ச ॥

(எவர்கள்) ब्रह्मवार्तायां-ப்ரஹ்மத்தைப்பற்றிப்பேசுவதில், कुशलाः–கெட்டிக்காரர்களாகவும், वृत्तिहीनाः–ப்ரஹ்மாகார வ்ருத்தி இல்லாதவர்க்ளாகவும், सुरागिणः–(விஷயங்களில்) நன்கு ஆசையுள்ளவர்களாகவும் இருக்கின்றனரோ, तेऽपि–அவர்களும், अज्ञानितया–அக்ஞானத்துடன் கூடியிருப்பதால், नूनं–நிச்சயமாக, पुनः आयान्ति यान्ति च-(இந்த ஸம்ஸாரத்தில்) திரும்பத்திரும்ப வருகின்றனர், போகின்றனர்.

பிரஹ்மத்தைப்பற்றிப் பேசுவதில் கெட்டிக்காரர்களாக மாத்திரம் இருந்துகொண்டு (பிரஹ்மாகார) விருத்தியில்லாத

வர்களாய் நன்கு (விஷயங்களில்) ஆசையுள்ளவர்களாக இருப்பவர்களோ அக்ஞானிகளாயிருப்பதால் அவசியம் (இந்த ஸம்ஸாரத்தில்) திரும்பி வருவார்கள், மறுபடியும் போவார்கள். (133)

**निमेषार्धं न तिष्ठन्ति वृत्तिं ब्रह्ममयीं विना ।**
**यथा तिष्ठन्ति ब्रह्माद्याः सनकाद्याः शुकादयः ॥ १३४ ॥**

*நிமேஷார்த்தம் ந திஷ்டந்தி வ்ருத்திம் ப்ரஹ்மமயீம் விநா ।*
*யதா திஷ்டந்தி ப்ரஹ்மாத்யா: ஸநகாத்யா: ஶுகாதய: ॥*

(ஞானிகள்) **ब्रह्ममयीं**-ப்ரஹ்மாகாரமான, **वृत्तिं विना**-விருத்தி இல்லாமல், **निमेषार्धं**-அரைநிமிஷம்கூட, **न तिष्ठन्ति**-இருக்கமாட்டார்கள். **ब्रह्माद्याः**-ப்ரஹ்மா முதலானவர்கள், **सनकाद्याः**-ஸநகர் முதலானவர்கள், **शुकादयः यथा**-சுகர் முதலானவர்கள் இவர்கள்போல், **तिष्ठन्ति**-(ஞானிகள்) இருப்பார்கள்.

(ஞானிகள்) அரை நிமிஷம்கூட பிரஹ்மாகார விருத்தியில்லாமல் இருக்கமாட்டார்கள். பிரஹ்மா முதலானவர்களும், ஸநகர் முதலானவர்களும், சுகர் முதலானவர்களும் எப்படி இருந்து வருகிறார்களோ (அப்படி இருந்து வருவார்கள்) (134)

**कार्ये कारणताऽऽयाता कारणे न हि कार्यता ।**
**कारणत्वं स्वतो गच्छेत्कार्याभावे विचारतः ॥ १३५ ॥**

*கார்யே காரணதாऽऽயாதா காரணே நஹி கார்யதா ।*
*காரணத்வம் ஸ்வதோ கச்சேத் கார்யாபாவே விசாரத: ॥*

**कार्ये**-காரியத்தில், **कारणता**-காரணத்தன்மை, **आयाता**-வந்துவிடுகிறது, **कारणे**-காரணத்தில், **कार्यता**-கார்யத்தன்மை, **नहि**-வருவதில்லை. **विचारतः**-விசாரம் செய்வதால், **कार्याभावे**-காரியம் இல்லை என்று ஆகிவிட்டால், **कारणत्वं**-காரணத்தன்மை, **स्वतो गच्छेत्**-தானாகவே போய்விடும்,

கார்யத்தில் காரணத்தன்மை வரும், காரணத்தில் கார்யத்தன்மை வராது. விசாரித்துப் பார்த்தால் கார்யமில்லாதபோது காரணத்தன்மையும் தானாகவே விலகிவிடும். [திருஷ்டாந்தம் — குடத்தில் மண்ணாயிருக்கும் தன்மை இருக்கும், மண்ணில் குடமாயிருக்கும் தன்மை கிடையாது. குடம் இல்லாத விஷயத்தில் மண்ணுக்குக் காரணம் என்ற பெயரே ஸித்திக்காது] (135)

अथ शुद्धं भवेद्वस्तु यद्वै वाचामगोचरम् ।
द्रष्टव्यं मृद्घटेनैव दृष्टान्तेन पुनः पुनः ॥ १३६ ॥

அத ஶுத்தம் பவேத் வஸ்து யத் வை வாசாமகோசரம் |
த்ரஷ்டவ்யம் ம்ருத்கடேனைவ த்ருஷ்டாந்தேன புந: புந: ||

अथ-பிறகு, वाचां-வாக்குகளுக்கு, अगोचरं-எட்டாத, यत्-எந்த, वस्तु-வஸ்து, शुद्धं-பரிசுத்தமாக, भवेत्-இருக்குமோ (அது), पुनः पुनः-அடிக்கடி, मृद्घटेन दृष्टान्तेनैव-மண் குடம் என்ற திருஷ்டாந்தத்தைக்கொண்டே, द्रष्टव्यं-ஆராய்ந்து பார்க்கத்தக்கது.

இவ்விதம் காரணத்தன்மை கார்யத்தன்மை இரண்டு மற்று சுத்தமாயிருக்கும் வஸ்து வாக்குக்களுக்கு எட்டாது. இதை மண்குட திருஷ்டாந்தத்தினால் அடிக்கடி பார்த்து உணரவேண்டும். [குடம் முதலான கார்யத்தன்மையை அடையாமலும் குடம் முதலான கார்யத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மையையும் அடையாமலும் இருக்கும் சுத்தமான மண் நாமரூபமற்றதால் வியவஹார யோக்யமல்ல]

अनेनैव प्रकारेण वृत्तिर्ब्रह्मात्मिका भवेत् ।
उदेति शुद्धचित्तानां वृत्तिज्ञानं ततः परम् ॥ १३७ ॥

அநேனைவ ப்ரகாரேண வ்ருத்திர் ப்ரஹ்மாத்மிகா பவேத் |
உதேதி ஶுத்த சித்தானாம் வ்ருத்தி ஞானம் தத: பரம் ||

अनेनैव प्रकारेण-இந்தவிதமாகவே, वृत्तिः-விருத்தியானது, ब्रह्मात्मिका-ப்ரஹ்மாகாரமாக, भवेत्-ஆகும். ततः

परं-அதன் பிறகு, शुद्धचित्तानां-பரிசுத்தமான மனம் உள்ளவர்களுக்கு, वृत्तिज्ञानं-விருத்தி ஞானம், उदेति-உண்டாகும்.

இதே பிரகாரமாகத்தான் விருத்தி பிரஹ்ம விஷயமாக ஏற்படும். அதன் பிறகு சுத்தமான சித்தத்தோடு கூடினவர்களுக்கு பிரஹ்மாகார விருத்திஞானமேற்படும். (137)

कारणं व्यतिरेकेण पुमानादौ विलोकयेत् ।
अन्वयेन पुनस्तद्धि कार्ये नित्यं प्रपश्यति ॥ १३८ ॥

காரணம் வ்யதிரேகேண புமாநாதௌ விலோகயேத் ।
அன்வயேன புநஸ்தத்தி கார்யே நித்யம் ப்ரபச்யதி ॥

आदौ-முதலில், पुमान्-மனிதன், कारणं-காரண வஸ்துவை, व्यतिरेकेण-காரியங்களிலிருந்து வேருக, विलोकयेत्-பார்க்கவேண்டும். पुनः-பிறகு, तत्-அதே காரணத்தை, कार्ये-கார்யமெல்லாவற்றிலும், नित्यं-எப்பொழுதும், अन्वयेन-தொடர்ந்து இருப்பதாக, प्रपश्यति-பார்க்கவேண்டும்.

முதலில் (கார்யங்களிலிருந்து) வேறுபடுத்தி மனிதன் காரண பதார்த்தத்தைக் காணவேண்டும். பிறகு அதே காரணம் கார்யத்தில் எப்பொழுதும் தொடர்ந்து இருப்பதாகப் பார்ப்பான். [திருஷ்டாந்தம்—குடம், சட்டி, சராவம் முதலானதுகளுக்கு தனித்தனியாக ஏற்பட்ட லக்ஷணங்களை விலக்கிப் பொதுவாயுள்ளதைத் தெரிந்துகொண்டால் தான் இவனுக்கு காரணமான மண்ணின் தன்மை தெரியும். காரணமான மண்ணின் தன்மை தெரிந்தபிறகு அது தன் தன்மையை விடாமலேயே குடம் முதலிய கார்யங்களில் ஊடுருவி இருந்து வருவதைப் பார்க்கலாம்] (138)

कार्ये हि कारणं पश्येत्पश्चात्कार्यं विसर्जयेत् ।
कारणत्वं स्वतो नश्येदवशिष्टं भवेन्मुनिः ॥ १३९ ॥

கார்யே ஹி காரணம் பச்யேத் பச்சாத் கார்யம் விஸர்ஜயேத் ।
காரணத்வம் ஸ்வதோ நச்யேதவசிஷ்டம் பவேன் முனிః ॥

**कार्ये**-கார்யத்தில், **कारणं**-காரணத்தை, **पश्येत्**-பார்க்க வேண்டும். **पश्चात्**-பின்னுல், **कार्यं**-காரியத்தை, **विसर्जयेत्**-விட்டுவிடவேண்டும். **कारणत्वं**-காரணத்தன்மை, **स्वतः**-தாஞகவே, **नश्येत्**-போய்விடும். **अवशिष्टं**-மீதியுள்ள ஸ்வரூபமாக, **मुनिः**-மனனம் செய்பவன், **भवेत्**-ஆவான்.

கார்யத்தில் காரணத்தைப் பார்க்கவேண்டும். பிறகு (கார்யத்திற்குக் காரணத்தைத் தவிர தனித்து இருப்புக் கிடையாதென்று தெரிந்த பிற்பாடு) கார்யத்தை விட்டு விடவேண்டும். (கார்யமென்பது போனவுடன்) காரணம் என்கிற வியவஹாரம் தானே நாசமடைந்துவிடும். பிறகு மிஞ்சின ஸ்வரூபமாக மனனம் செய்பவன் ஆய் விடுவான்.

भावितं तीव्रवेगेण वस्तु यन्निश्चयात्मना ।
पुमांस्तद्धि भवेच्छीघ्रं ज्ञेयं भ्रमरकीटवत् ॥ १४० ॥

*பாவிதம் தீவ்ரவேகேண வஸ்து யந்நிச்சயாத்மநா ।*
*புமாம்ஸ்தத்தி பவேத் சீக்ரம் ஜ்ஞேயம் ப்ரமரகீடவத் ॥*

**तीव्रवेगेण**-மிகுந்த வேகத்துடன், **निश्चयात्मना**-நிச்சய ஸ்வரூபமாக, **यत् वस्तु**-எந்த வஸ்து, **भावितं**-தியானிக்கப் பட்டதோ, **ज्ञेयं**-அறியத்தக்க, **तत्**-அந்த வஸ்துவாக, **भ्रमरकीटवत्**-புழு குளவியாக ஆவதுபோல, **पुमान्**-மனிதன் **शीघ्रं**-விரைவில், **भवेत्**-ஆய்விடுவான்.

ஒரு மனிதன் தீவிரமான வேகத்துடன் நிச்சய புத்தியுடன் ஒருவஸ்துவை பாவனை செய்துவருவாஞகில், புழு எப்படி வண்டாக ஆகிவிடுகிறதோ அப்படியே, இவனும் அறியவேண்டிய அந்த வஸ்துவாகவே சீக்கிரம் ஆகிவிடுவான். (140)

अदृश्यं भावरूपं च सर्वमेतच्चिदात्मकम् ।
सावधानतया नित्यं स्वात्मानं भावयेद्बुधः ॥ १४१ ॥

*அத்ருச்யம் பாவரூபம் ச ஸர்வமேதத் சிதாத்மகம் ।*
*ஸாவதானதயா நித்யம் ஸ்வாத்மாநம் பாவயேத் புத: ॥*

**एतत् सर्वं**-இந்த பிரபஞ்சமெல்லாம், **अदृश्यं**-புலன்களால் அறியமுடியாததும், **भावरूपं च**-ஸத்ரூபமுமான, **चिदात्मकं**-சைதன்யஸ்வரூபமே. (என்று) **बुधः**-வித்வான், **सावधानतया**-மிகுந்த ஜாக்ரதையுடன், **नित्यं**-எப்பொழுதும், **स्वात्मानं**-தனது ஸ்வருபத்தை, **भावयेत्**-(இந்த சைதன்யஸ்வருபமாக) பாவனை செய்யவேண்டும்.

இது எல்லாம் கண் முதலானவைகளுக்கு விஷயமாகாததும், ஸத்ரூபமுமான சித்ஸ்வரூபமேயாகும், என்று அறிவாளியானவன் எப்பொழுதும் ஜாக்கிரதையுடன் தன் ஆத்ம ஸ்வருபத்தை அநுஸந்தானம் செய்யவேண்டும்.

दृश्यं ह्यदृश्यतां नीत्वा ब्रह्माकारेण चिन्तयेत् ।
विद्वान्नित्यसुखे तिष्ठेद्धिया चिद्रसपूर्णया ॥ १४२ ॥

*த்ருச்யம் ஹ்யத்ருச்யதாம் நீத்வா ப்ரஹ்மாகாரேண*
*சிந்தயேத் ।*
*வித்வான் நித்யஸுகே திஷ்டேத் தியா சித்ரஸபூர்ணயா ॥*

**दृश्यं**-அறியப்படும் கார்ய வஸ்துக்களையெல்லாம், **अदृश्यतां नीत्वा**-அறியப்படாத காரணரூபமாகச் செய்து, **ब्रह्माकारेण**-ப்ரஹ்மரூபமாக, **चिन्तयेत्** தியானிக்க வேண்டும். **विद्वान्**-அறிவுள்ளவன், **चिद्रसपूर्णया**-சைதன்ய ரஸம் நிரம்பிய **धिया**-புத்தியுடன், **नित्यसुखे**-அழிவற்ற ஆனந்தஸ்வரூபமான ப்ரஹ்மத்தில், **तिष्ठेत्**-நிற்கவேண்டும்.

(கண் முதலானவைகளால்) பார்க்கப்படுவதையெல்லாம் பார்க்கமுடியாத (காரண ரூபமான) தாகச்செய்து பிரஹ்மாகாரமாகவே அனுஸந்தானம் செய்யவேண்டும். வித்வானாயிருப்பவன் சைதன்ய ரஸம் நிரம்பிய புத்தியுடன் நித்யமாய் ஸுகஸ்வரூபமாயுள்ள பிரஹ்மத்திலேயே நிலைத்து நிற்கவேண்டும். (142)

एभिरङ्गैः समायुक्तो राजयोग उदाहृतः ।
किंचित्पक्वकषायाणां हठयोगेन संयुतः ॥ १४३ ॥

ஏபிரங்கை: ஸமாயுக்தோ ராஜயோக உதாஹ்ருத: |
கிஞ்சித் பக்வகஷாயாணாம் ஹடயோகேன ஸம்யுத. ||

**एभिः**-இந்த, **अङ्गैः**-அங்கங்களுடன், **समायुक्तः**-கூடியது **राजयोगः**-ராஜயோகமாக, **उदाहृतः**-சொல்லப்பட்டது. **किंचित्पक्वकषायाणां**-சிறிதளவே மனோதோஷங்கள் நீங்கியவர்களுக்கு, **हठयोगेन**-ஹடயோகத்துடன், **संयुतः**-கூடியதாக (ராஜயோகம்) இருக்கவேண்டும்.

இந்த (பதினைந்து) அங்கங்களுடன் நன்கு கூடினது ராஜயோகம் எனப்படும். தோஷங்கள் கொஞ்சமாகவே பக்குவமானவர்களுக்கு ஹடயோகத்தோடு கூடியிருக்க வேண்டும். (143)

परिपक्वं मनो येषां केवलोऽयं च सिद्धिदः ।
गुरुदैवतभक्तानां सर्वेषां सुलभो जवात् ॥ १४४ ॥

பரிபக்வம் மனோ யேஷாம் கேவலோऽயம் ச ஸித்தித: |
குருதைவத பக்தானாம் ஸர்வேஷாம் ஸுலபோ ஜவாத் ||

**येषां**-எவர்களுடைய, **मनः**-மனம், **परिपक्वं**-தோஷங்கள் எல்லாம் முழுவதும் விலகி நன்கு பரிபாகம் அடைந்துள்ளதோ (அவர்களுக்கு), **केवलः**-ஹடயோகத்துடன் கலக்காமல் தனிப்பட்டதான, **अयं**-இந்த ராஜயோகம், **सिद्धिदः**-பலனைக் கொடுக்கக்கூடியது. **गुरुदैवतभक्तानां**-ஆசார்யனிடமும் தேவதையினிடமும் பக்தி உள்ள, **सर्वेषां**-எல்லோருக்கும், **जवात्**-விரைவில், **सुलभः**-எளிதில் கிடைக்கக் கூடியது.

எவர்களுடைய மனஸ் நன்கு பரிபாகமடைந்திருக்கிறதோ அவர்களுக்கு இந்த ராஜயோகம் தனித்தே ஸித்தியைக்கொடுக்கும். குருவினிடத்திலும் பகவானிடத்திலும் பக்தியுள்ள யாவருக்கும் அதிசீக்கிரமாகவே ஸுலபமாய் அடையத்தக்கது. (144)

அபரோக்ஷானுபூதி முற்றும்.

|| श्रीः ||

# || वाक्यवृत्तिः ||

## வாக்கிய விருத்தி

[நான்கு மஹா வாக்கியங்களில் உபதேச வாக்கியமாயுள்ள "தத் த்வம் அஸி" என்ற மஹா வாக்கியத்திற்கு வியாக்யானமாக இச்சிறு பிரகரணம் ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யாரால் அனுக்ரஹிக்கப்பட்டிருக்கிறது. குரு சிஷ்ய ஸம்வாத ரூபமாய் அமைக்கப்பட்டிருக்கிறது.]

सर्गस्थितिप्रलयहेतुमचिन्त्यशक्तिं
विश्वेश्वरं विदितविश्वमनन्तमूर्तिम् ।
निर्मुक्तबन्धनमपारसुखाम्बुराशिं
श्रीवल्लभं विमलबोधघनं नमामि ॥ १ ॥

ஸர்க ஸ்திதி ப்ரளய ஹேதுமசிந்த்ய ஶக்திம்
விச்வேச்வரம் விதித விச்வமநந்த மூர்த்திம் ।
நிர்முக்த பந்தனமபாரஸுகாம்பு ராஶிம்
ஸ்ரீ வல்லபம் விமல போதகநம் நமாமி ॥

सर्गस्थितिप्रलयहेतुं-ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, பிரளயம், இவைகளுக்கெல்லாம் காரணமாயும், अचिन्त्यशक्तिं-மனஸினால் சிந்திக்க முடியாத சக்திவாய்ந்தவராயும், विश्वेश्वरं-ஸகல பிரபஞ்சத்திற்கும் ஈசுவரனாயும், विदितविश्वं-ஜகத் முழுவதையும் அறிந்தவராயும், अनन्तमूर्तिं-எல்லையில்லாத ஸ்வரூபமுள்ளவராயும், निर्मुक्तबन्धनं-எவ்விதக் கட்டுகளும் இல்லாதவராயும், अपारसुखाम्बुराशिं-கரையற்ற ஆனந்தக்கடலாயும், श्रीवल्लभं-ஸகலவித ஸம்பத்தோடு கூடினவராயும், विमलबोधघनं-நிர்மலமான ஞானஸ்வரூபராயுமுள்ளவரை, नमामि-நமஸ்கரிக்கிறேன்,

ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி பிரளயம் இவைகளுக்கெல்லாம் காரணமாயும், மனதினுல் சிந்திக்கமுடியாத சக்தி வாய்ந்தவராயும், ஸகல பிரபஞ்சத்திற்கும் ஈசுவரனுயும், ஜகத் முழுவதையும் அறிந்தவராயும், எல்லையில்லாத ஸ்வரூபமுள்ளவராயும், எவ்விதக் கட்டுகளும் இல்லாதவராயும், கரையற்ற ஆனந்தக் கடலாயும், ஸகலவித ஸம்பத்தோடு கூடினவராயும், நிர்மலமான ஞானஸ்வரூபராயுமுள்ளவரை நமஸ்கரிக்கிறேன்.

[எந்த கிரந்தம் இயற்றினுலும் ஆரம்பத்தில் மங்களாசரணம் செய்யவேண்டுமென்ற ஸம்பிரதாயத்தை அனுஸரித்து ஸ்ரீமத் ஆசார்யாரும் முதல் சுலோகத்தில் இஷ்டதேவதையையும், இரண்டாவது சுலோகத்தில் குருவையும் வணங்கிவிட்டு மேல்சுலோகங்களில் உத்தேசித்த விஷயத்தை நிர்வசனம் செய்கிருர். ஸ்ரீமத் ஆசார்யாருக்கு இஷ்டதேவதை சுத்த சைதன்யமேயாகும். பரமசிவனேயே ஸாதாரணமாகக் குறிக்கும் "விசுவேசுவரர்" என்ற பதத்தையும், மஹாவிஷ்ணுவையே ஸாதாரணமாகக் குறிக்கும் 'ஸ்ரீ வல்லபர்' என்ற பதத்தையும், விசேஷணமாகக் கொடுத்திருப்பதனுல் சிவ விஷ்ணு பேதத்திற்கு அதீதமான பரம்பொருள்தான் இங்கு வணங்கப்படுகிறதென்பது தெளிவாகத் தெரியவருகிறது. அந்தப் பரம்பொருளுக்கு ஸ்வரூப லக்ஷணமான ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தமென்பதையும், தடஸ்த லக்ஷணமான ஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரகர்த்தா என்பதையும் இந்த சுலோகத்தில் எடுத்துக் காட்டுகிருர்.] (1)

यस्य प्रसादादहमेव विष्णुर्मय्येव सर्वं परिकल्पितं च ।
इत्थं विजानामि सदात्मरूपं तस्यांघ्रिपद्मं प्रणतोऽस्मि नित्यम् ॥

யஸ்ய ப்ரஸாதாதஹமேவ விஷ்ணு:
மய்யேவ ஸர்வம் பரிகல்பிதம் ச |
இத்தம் விஜாநாமி ஸதாத்மரூபம்
தஸ்யாங்க்ரி பத்மம் ப்ரணதோ(அ)ஸ்மி நித்யம் ||

यस्य–எவருடைய, प्रसादात्–அனுக்ரஹத்தால், अहं एव–நானே, विष्णुः–வியாபகமான பிரஹ்மம் என்றும், मयि एव–என்னிடத்திலேயே, सर्वं–எல்லாம், परिकल्पितं च–கல்பிக்கப் பட்டிருக்கிறது என்றும், इत्थं–இவ்விதமாக, सदात्मरूपं–ஸத்தாக இருக்கும் ஆத்மஸ்வருபத்தை, विजानामि–நான் அறிகிறேனோ, तस्य–அவருடைய, अंघ्रिपद्मं–பாதகமலத்தை, नित्यं–எப்பொழுதும், प्रणतः–நமஸ்கரிக்கிறவனாக, अस्मि–இருக்கிறேன்.

எவருடைய அனுக்ரஹத்தால் நானே வியாபகமான பிரஹ்மம் என்றும் என்னிடத்திலேயே எல்லாம் கல்பிக்கப் பட்டிருக்கிறது என்றும் இவ்விதமாக ஸத்தாக இருக்கும் ஆத்மஸ்வருபத்தை நான் அறிகிறேனோ, அவருடைய பாத கமலத்தை எப்பொழுதும் நமஸ்கரிக்கிறவனாக இருக்கிறேன்.

[இந்தப் பிரகரணத்திற்கே பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் ஸ்வரூபத்தில் பேதமில்லை என்பதுதான் விஷயம். முதல் சுலோகத்தினால் பிரஹ்மஸ்வருபத்தைச் சொல்லிவிட்டு, அந்தப் பிரஹ்மத்திற்கும் தனக்குமுள்ள அபேதத்தைப் போதித்த குருவிற்கு இந்த சுலோகத்தில் வந்தனம் செய்கிறார். இனி மேல் சுலோகங்களால் குரு சிஷ்ய ஸம்வாதத்தை வர்ணிக்கிறார்.] (2)

तापत्रयार्कसंतप्तः कश्चिदुद्विग्नमानसः ।
शमादिसाधनैर्युक्तः सद्गुरुं परिपृच्छति ॥ ३ ॥

*தாப த்ரயார்க ஸந்தப்த: கச்சிதுத்விக்ன மாநஸ: |*
*ஶமாதி ஸாதனைர் யுக்த: ஸத்குரும் பரிப்ருச்சதி ||*

तापत्रयार्कसंतप्तः–(ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், என்ற) மூன்றுவித தாபங்களாகிற ஸூர்யனால் நன்கு தபித்தவனாய், उद्विग्नमानसः–(எப்படி இவைகளிலிருந்து விடுபடுவோம் என்று) நடுங்கின மனதுள்ளவனாய், कश्चित्–ஒருவன், शमादिसाधनैः–சமம் முதலான ஸாதனங்களுடன்,

युक्तः-கூடினவனாய், सद्गुरुं-உத்தமமான குருவை (தேடி யடைந்து) परिपृच्छति-கேட்கிறான்.

(ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்கிற) மூன்றுவித தாபங்களாகிற ஸூர்யனால் நன்கு தபித்தவனாய் (எப்படி இவைகளிலிருந்து விடுபடுவோம் என்று) நடுங்கின மனதுள்ளவனாய் ஒருவன் சமம் முதலான ஸாதனங்களுடன் கூடினவனாய் உத்தமமான குருவை (தேடியடைந்து) கேட்கிறான்.

[தாபம் மூன்றுவிதம் :— தன் சரீரத்திற்குள்ளேயே பூர்வ கர்மாவின் பலனாக ஏற்படக்கூடிய ஜ்வரம் முதலியது ஆத்யாத்மிகம்; தன்னைத்தவிரவுள்ள திருடன், புலி முதலிய தால் ஏற்படக்கூடிய துக்கம் ஆதிபௌதிகம்; தன்னிட மிருந்தாவது தன்னைப்போலுள்ள பிராணி வர்க்கத்தினிட மிருந்தாவது ஏற்படாமல் அக்னி, வாயு முதலான தேவதை களால் ஏற்படக்கூடிய மழை இடி முதலியது ஆதிதைவிகம். உலக மத்தியில் சரீரத்துடன் பிறந்தாலேயே இம்மூன்று தாபங்களும் நிச்சயமாக உண்டு. அவைகளால் பீடிக்கப் படாமலிருக்கவேண்டுமானால் சரீர ஸம்பந்தம் இருக்கக் கூடாது. சரீரமில்லாமல் எப்படி இருக்கமுடியும்? ஆகை யால் எப்பொழுதும் இந்த தாபங்களை ஸஹித்துத்தான் தீரவேண்டுமோ என்று பயந்தவன் தான் ஸத்குருவைத்தேடி விடுதலையடைவதற்கு வழியுண்டாவென்று கேட்பான். சரீரம், இந்திரியங்கள், மனஸ் எல்லாவற்றையும் அடக்கி சுத்தமாக வைத்துக்கொண்டிருந்தால்தான் அக்குருவின் உபதேசமும் பிரயோஜனப்படும். ஆகையால் குருவைத் தேடிச்செல்லும் சிஷ்யனுக்கு ஸம்ஸாரதாபத்தில் பயம், அதிலிருந்து விடுபடவேண்டுமென்ற ஆவல், அதற்கு வேண்டிய தேஹேந்திரியாதி நிக்ரஹம் இவை யாவும் அவசியம் தேவையென்பது இந்த சுலோகத்தில் காட்டப் பட்டது. இம்மூன்று அம்சங்களையே நான்காகவும் பிரித்து விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், முமுக்ஷுதை என்ற பெயரால் ஸாதன சதுஷ்டயம் என்பார்கள். இவ்வித

யோக்யதையுள்ள சிஷ்யன் குருவினிடம் கேட்கவேண்டிய முறையை அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார்.] (3)

(அ) சிஷ்யன் குருவினிடம் பிரார்த்தித்துக் கேட்கிறான்:—

अनायासेन येनास्मान्मुच्येय भवबन्धनात् ।
तन्मे संक्षिप्य भगवन्केवलं कृपया वद ॥ ४ ॥

அநாயாஸேன யேநாஸ்மான் முச்யேய பவ பந்தனாத் ।
தன் மே ஸம்க்ஷிப்ய பகவன் கேவலம் க்ருபயா வத ॥

अस्मात्-இந்த, भवबन्धनात्-ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து, अनायासेन-அதிக சிரமமில்லாமல், येन-எந்த உபாயத்தினால், मुच्येय-விடுபடுவேனோ, तत्-அதை, भगवन्-ஹே பகவன், संक्षिप्य-சுருக்கமாக, मे-எனக்கு, कृपया केवलं-கருணையினால் மாத்திரம், वद-சொல்லும்.

இந்த ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து அதிக சிரமமில்லாமல் எந்த உபாயத்தினால் விடுபடுவேனோ அதை, ஹே பகவன், சுருக்கமாக எனக்குக் கருணையினால் மாத்திரம் சொல்லும்.

[ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடவேண்டுமென்ற வேகம் இருந்தபோதிலும், தன்னுடைய யோக்கியதை மிகவும் குறைவாயிருப்பதால், தன் யோக்கியதைக்குத் தக்கவாறு ஸாதனத்தைச் சொல்லவேண்டுமென்றும், அந்த ஸாதனமும் அனுஷ்டிக்க அதிக சிரமமில்லாமலிருக்கவேண்டுமென்றும், ஆகையினாலேயே அதிக விஸ்தாரமில்லாமல் சுருக்கமாயிருக்கவேண்டுமென்றும் சிஷ்யன் பிரார்த்திக்கிறான். குரு ஆத்மஞானியாயிருப்பதால் அவருக்கு சிஷ்யனால் ஆகவேண்டிய கார்யம் ஒன்றுமில்லை. குருவினுடைய மஹிமைக்குத் தக்கபடி ஸேவை செய்யவும் சிஷ்யனுக்குச் சக்தியில்லை. அப்படியிருக்க குரு சிஷ்யனுக்கு உபதேசம் செய்யவேண்டுமானால் அதற்கு வேறு எவ்விதக் கைம்மாறையும் எதிர்பாராமல் கருணையினால் மாத்திரம்

அனுக்ரஹிக்க வேண்டுமென்பதையும் வினயத்துடன் தெரிவிக்கிறான்.] (4)

(அ) குரு சொல்கிறார் :—

साध्वी ते वचनव्यक्तिः प्रतिभाति वदामि ते ।
इदं तदिति विस्पष्टं सावधानमनाः शृणु ॥ ५ ॥

ஸாத்வீ தே வசந வ்யக்தி: ப்ரதிபாதி வதாமி தே ।
இதம் ததிதி விஸ்பஷ்டம் ஸாவதானமநா: ச்ருணு ॥

ते-உன்னுடைய, वचनव्यक्तिः-வாக்கினால் வெளியிட்டது साध्वी-மிகவும் அழகாக, प्रतिभाति-தெரிகிறது. इदं-இது தான், तत्-அது, इति-என்று, विस्पष्टं-மிகத்தெளிவாக, ते-உனக்கு, वदामि-சொல்கிறேன். सावधानमनाः-அதிலேயே மனதை வைத்து, शृणु-கேள்.

நீ வாக்கினால் வெளியிட்டது மிகவும் அழகாகத் தெரிகிறது. இதுதான் அது என்று வெகு தெளிவாக உனக்குச் சொல்கிறேன். அதிலேயே மனதைச் செலுத்திக் கேள்.

[சிஷ்யனுடைய ஆவலையும், சிரத்தையையும் கவனித்து, அவனுடைய கேள்வியை சிலாகித்துவிட்டு, உபதேசம் செய்ய ஆரம்பிப்பதற்கு முன் சிஷ்யன் மனதை வேறிடத்தில் ஸஞ்சரிக்கச்செய்யாமல், சொல்லப்படும் விஷயத்தையே வெகு ஜாக்ரதையாகக் கேட்கவேண்டுமென்று குரு எச்சரிக்கிறார்.] (5)

तत्त्वमस्यादिवाक्योत्थं यज्जीवपरमात्मनोः ।
तादात्म्यविषयं ज्ञानं तदिदं मुक्तिसाधनम् ॥ ६ ॥

தத்த்வமஸ்யாதி வாக்யோத்தம் யஜ்ஜீவ பரமாத்மநோ: ।
தாதாத்ம்ய விஷயம் ஞானம் ததிதம் முக்தி ஸாதனம் ॥

तत्त्वमस्यादिवाक्योत्थं-" தத்த்வம் அஸி " முதலான வாக்கியங்களிலிருந்து ஏற்படும், जीवपरमात्मनोः-ஜீவனுக்கும்

பரமாத்மாவுக்கும், तादात्म्यविषयं-உள்ள ஒரே தன்மையை விஷயமாயுள்ள, ज्ञानं-ஞானம், यत्-எதுவோ, तत्-அதுவே, इदं-இந்த (நீ கேட்ட), मुक्तिसाधनं-விடுதலைக்கு ஸாதனம்.

"தத் த்வம் அஸி" முதலான வாக்கியங்களிலிருந்து ஏற்படும் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஒரே தன்மையை விஷயமாயுள்ள ஞானம் எதுவோ, அதுவே இந்த (நீ கேட்ட) விடுதலைக்கு ஸாதனம்.

[சிஷ்யன் மோக்ஷ ஸாதனத்தைச் சுருக்கமாகச்சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொண்டதையனுஸரித்து குரு வெகு சுருக்கமாய் சொல்லிவிட்டார். ஜீவனும் பரமாத்மாவும் வாஸ்தவ ஸ்வரூபநிலையில் ஒன்றுதான் என்று உணர்ந்து விட்டால் மோக்ஷம் ஏற்பட்டுவிடும். இந்த ஞானம்தான் ஸாதனம். இந்த ஞானம் ஏற்படுவதற்கு உபநிஷத்துக்களிலுள்ள 'தத் த்வம் அஸி' முதலான வாக்கியங்களின் தாத்பர்ய ஞானம் காரணம் என்றும் உபதேசித்துவிட்டார். இவ்விதமாக அந்த ஞானத்திற்குரிய லக்ஷணத்தையும் பிரமாணத்தையும் எடுத்துச்சொன்னார். ஆனாலும் பிரமாண வாக்கியத்தின் தாத்பர்யத்தை அவ்வளவு ஸுலபமாய்க் கேட்டவுடன் உணர்ந்துவிட முடியாததனால் சிஷ்யன் குருவைப்பார்த்து இதை நன்றாக விளக்கிச்சொல்லும்படி கேட்கிறான்.] (6)

(அ) சிஷ்யன் கேட்கிறான் :—

को जीवः कः परश्चात्मा तादात्म्यं वा कथं तयोः ।
तत्त्वमस्यादिवाक्यं वा कथं तत्प्रतिपादयेत् ॥ ७ ॥

கோ ஜீவ: க: பரச்சாத்மா தாதாத்ம்யம் வா கதம் தயோ: ।
தத்த்வமஸ்யாதி வாக்யம் வா கதம் தத் ப்ரதிபாதயேத் ॥

जीवः-ஜீவன் என்பது, कः-யார்? परः आत्मा च-பரமாத்மாவும், कः-யார்? तयोः-அவ்விருவர்களுக்கும், तादात्म्यं वा-ஒன்றாயிருக்கும் தன்மைதான், कथं-எப்படி? तत्-அத்தன்மையை, तत्त्वमस्यादिवाक्यं वा-'தத்த்வம் அஸி' முதலான வாக்கியம்தான், कथं-எப்படி, प्रतिपादयेत्-எடுத்துக்காட்டும்?

ஜீவன் என்பது யார்? பரமாத்மாவும் யார்? அவ்விருவர்களுக்கும் ஒன்ருயிருக்கும் தன்மைதான் எப்படி? அத் தன்மையை "தத் த்வம் அஸி" முதலான வாக்கியம்தான் எப்படி எடுத்துக்காட்டும்?

['த்வம்' 'தத்' 'அஸி' என்ற மூன்று வார்த்தைகளின் தாத்பர்யத்தை முறையே முதல் மூன்று கேள்விகளாலும், மூன்று வார்த்தைகளும் சேர்ந்த வாக்கியத்தின் தாத்பர்யத்தை நான்காவது கேள்வியினுலும் சிஷ்யன் கேட்கிருன். அதற்கும் சுருக்கமாகவே குரு பதில் சொல்லி விடுகிருர்.] (7)

(அ) குரு பதில் கூறுகிருர் :—

अत्र ब्रूमः समाधानं कोऽन्यो जीवस्त्वमेव हि ।
यस्त्वं पृच्छसि मां कोऽहं ब्रह्मैवासि न संशयः ॥ ८ ॥

அத்ர ப்ரூம: ஸமாதானம் கோऽந்யோ ஜீவஸ் த்வமேவ ஹி।
யஸ்த்வம் ப்ருச்சஸி மாம் கோऽஹம் ப்ரஹ்மைவாஸி
ந ஸம்ஶய: ॥

अत्र-இந்த விஷயத்தில், समाधानं-ஸமாதானத்தை, ब्रूमः-சொல்கிறோம். जीवः-ஜீவன் என்பது, अन्यः-வேறு, कः-யார்? त्वं एव हि-நீயேதான். मां-என்னைப் பார்த்து, 'अहं-நான், कः-யார்' என்று, यः-எந்த, त्वं-நீ, पृच्छसि-கேட்கிருயோ, (அந்த நீ), ब्रह्म एव-பிரஹ்மமாகவே, असि-இருக்கிருய். संशयः-ஸந்தேஹம், न-இல்லை.

இந்த விஷயத்தில் ஸமாதானத்தைச் சொல்கிறோம். ஜீவன் என்பது வேறு யார்? நீயேதான். என்னைப் பார்த்து 'நான் யார்' என்று எந்த நீ கேட்கிருயோ (அந்த நீ) பிரஹ்மமாகவே இருக்கிருய். ஸந்தேஹம் இல்லை.

[ஜீவ சப்தம் கேள்வி கேட்கிறவனையே குறிக்கிறது என்றும், பரமாத்ம சப்தம் பிரஹ்மத்தைக் குறிக்கிறது என்றும், ஆகையால் கேள்வி கேட்பவனே பிரஹ்மம் என்றும்

மறுபடியும் சுருக்கமாகவே வாக்கியத்தை சொல்லி அர்த்தம் சொல்லிவிட்டார். இதை அப்படியே கிரஹித்துக்கொள்ள புத்தி இடம் கொடுக்காததனால் மறுபடியும் சிஷ்யன் வினவுகிறான்.] (8)

(அ) சிஷ்யன் கேட்கிறான் :—

पदार्थमेव जानामि नाद्यापि भगवन्स्फुटम् ।
अहं ब्रह्मेति वाक्यार्थं प्रतिपद्ये कथं वद ॥ ९ ॥

பதார்த்தமேவ ஜாநாமி நாத்யாபி பகவன் ஸ்புடம் ।
அஹம் ப்ரஹ்மேதி வாக்யார்த்தம் ப்ரதிபத்யே கதம் வத ॥

**भगवन्**-ஹே பகவன், **अद्यापि**-இன்னமும், **पदार्थं एव**-பதங்களின் அர்த்தத்தைக்கூட, **स्फुटम्**-தெளிவாக, **न जानामि**-நான் அறியவில்லை. (அப்படியிருக்க), **अहं**-நானே, **ब्रह्म**-ப்ரஹ்மம், **इति**-என்றுள்ள, **वाक्यार्थं**-வாக்கியத்தின் அர்த்தத்தை, **कथं**-எப்படி, **प्रतिपद्ये**-நான் அறிவேன்? **वद**-சொல்லுங்கள்.

ஹே பகவன், இன்னமும் பதங்களின் அர்த்தத்தைக் கூடத் தெளிவாக நான் அறியவில்லை (அப்படியிருக்க) நானே பிரஹ்மம் என்றுள்ள வாக்கியத்தின் அர்த்தத்தை எப்படி நான் அறிவேன்? சொல்லுங்கள்.

[பதங்களின் அர்த்தத்தைச் சரியானபடி கிரஹித்துக் கொண்ட பிறகல்லவா பதஸமுதாயமான வாக்கியத்தின் அர்த்தத்தைச் சரிவர கிரஹிக்க முடியும்? ஆகையால் கிருபைசெய்து தத், த்வம், அஸி, என்கிற மூன்று பதங்களினுடைய அர்த்தத்தை நன்கு தெளிவுபடுத்த வேண்டுமென்று சிஷ்யன் குருவைக் கேட்டுக் கொள்கிறான் இந்த சுலோகத்தினால்.] (9)

(அ) குரு கூறுகிறார் :—

सत्यमाह भवानत्र विगानं नैव विद्यते ।
हेतुः पदार्थबोधो हि वाक्यार्थावगतेरिह ॥ १० ॥

ஸத்யமாஹ பவானத்ர விகாநம் நைவ வித்யதே |
ஹேது: பதார்த்த போதோ ஹி வாக்யார்த்தாவகதேரிஹ ||

**भवान्**-நீர், **सत्यं**-வாஸ்தவமான விஷயத்தையே, **आह**-சொன்னீர். **अत्र**-இந்த விஷயத்தில், **विगानं**-அபிப்பிராய பேதம், **न एव विद्यते**-கொஞ்சமேனும் கிடையாது. **हि**-ஏனென்றால், **इह**-இங்கு, **वाक्यार्थावगतेः**-வாக்கியார்த்தத்தை அறிவதற்கு, **पदार्थबोधः**-பதங்களின் அர்த்தத்தை அறிவது தான், **हेतुः**-காரணமாகும்.

நீர் வாஸ்தவமான விஷயத்தையே சொன்னீர். இந்த விஷயத்தில் அபிப்பிராயபேதம் கொஞ்சமேனும் கிடையாது. ஏனென்றால் இங்கு வாக்கியார்த்தத்தை அறிவதற்கு பதங்களின் அர்த்தத்தை அறிவதுதான் காரணமாகும்.

[பதங்களின் அர்த்தம் தெரிந்தால்தான் வாக்கியத்தின் அர்த்தம் புலப்படும் என்று சிஷ்யன் சொன்ன விஷயத்தை குருவும் ஆமோதித்துவிட்டு தத், த்வம், அஸி, என்ற பதங்களை விளக்க ஆரம்பிக்கிறார். அவைகளில் முதலிலுள்ள 'தத்' என்ற பிரஹ்மத்தின் ஸ்வரூபமும், கடைசியிலுள்ள 'அஸி' என்பதால் சொல்லப்படும் ஜீவ பிரஹ்ம ஐக்கியமும் கிரஹிக்கப்படுவது சிரமமாயிருந்த போதிலும், நடுவிலுள்ள "த்வம்" (நீ) என்கிற ஆத்ம தத்வம் எல்லோருக்கும் பிரத்யக்ஷமாகவே யிருக்கையில் அதை சிரமமில்லாமலே கிரஹிக்கலாமே என்ற எண்ணத்துடன் மஹா வாக்கியத்திலுள்ள பதங்களின் வரிசையை மாற்றி த்வம், தத், அஸி என்ற கிரமமாக அர்த்தம் சொல்கிறார். தவிரவும் இது மாதிரி வாக்கியங்களில் விதேயமாகிற தத் பதத்தை விட கர்த்ருபதமான த்வம் என்பதற்கே முதன்மை நியாயம். மேலும் தெரியாத ஒரு விஷயத்தை எடுத்துச் சொல்லுகையில் முதலில் தெரிந்த ஒரு அம்சத்தைப் பற்றித் தெளிவு படுத்திவிட்டுப் பின்னால் மற்ற அம்சங்களுக்குப் போவது தான் சரியானபடி போதிக்கும் முறை. ஆகையால் ஜீவனைப்பற்றிக் கொஞ்சமாவது ஏற்கனவே "நான்" என்று ஒருவாறு தெரிந்து கொண்டிருப்பதால் அதிலிருந்தே

ஆரம்பிப்பது மிகவும் நியாயமாகும். இவ்விதக் காரணங்களினால் ஜீவனுடைய தத்வத்தையே குரு முதலில் விளக்குவதற்கு ஆரம்பிக்கிறார்] (10)

अन्तःकरणतद्वृत्तिसाक्षी चैतन्यविग्रहः ।
आनन्दरूपः सत्यः सन्किं नात्मानं प्रपद्यसे ॥ ११ ॥

அந்தக்கரண தத்வ்ருத்தி ஸாக்ஷீ சைதன்ய விக்ரஹ: |
ஆனந்த ரூப: ஸத்ய: ஸன் கிம் நாத்மாநம் ப்ரபத்யஸே ||

**अन्तःकरणतद्वृत्तिसाक्षी**–அந்தக்கரணத்தையும் அதன் விருத்திகளையும் பார்த்துக்கொண்டு, **आनन्दरूपः**–ஆனந்த ஸ்வருபனாய், **सत्यः**–ஸத்யஸ்வருபனாய், **चैतन्यविग्रहः**–சைதன்யஸ்வருபனாய், **सन्**-இருந்துகொண்டும்கூட, **आत्मानं**-தன்னை, **किं**–ஏன், **न प्रपद्यसे**–அறிந்துகொள்ளவில்லை ?

அந்தக்கரணத்தையும் அதன் விருத்திகளையும் பார்த்துக்கொண்டு ஆனந்த ஸ்வருபனாய் ஸத்யஸ்வருபனாய் சைதன்ய ஸ்வருபனாய் இருந்துகொண்டும்கூட தன்னை ஏன் அறிந்துகொள்ளவில்லை ?

[ஆத்மாவின் ஸ்வருபம் அதிஸுலபமாகத்தெரிந்து கொள்ளக்கூடியதே என்று குரு எடுத்துச்சொல்கிறார். சரீரம் ஆத்மாவல்ல, இந்திரியாதிகளும் ஆத்மாவல்ல என்று எல்லோரும் உணர்ந்துவிடலாம்; ஆனால் மனஸ், புத்தி, சித்தம், அஹங்காரம் என்று நான்கு வகைப்பட்ட அந்தக் கரணத்தை ஆத்மாவல்லவென்று தெரிந்துகொள்வது சிரமமல்லவா என்று தோன்றலாம். அதுவும் 'கரணம்' கருவியாக இருப்பதாலும் ஜடமாயிருப்பதாலும், ஆத்மாவல்லவென்று அறிந்துவிடலாமே என்பது குருவின் தாத்பர்யம். உளியையும், உளி வேலை செய்வதையும் பார்த்துக்கொண்டிருக்கிற தச்சன் அவையல்ல, வேறாயுள்ள சேதனன், என்று எப்படித் தெரிந்துகொள்கிறோமோ, அப்படியே அந்தக்கரணத்தையும் அதன் விருத்திகளையும் பார்த்துக் கொண்டிருக்கிறவன் வேறுபட்டவன், சேதனன் என்று அறிந்து கொள்ள வேண்டும்.] (11)

सत्यानन्दस्वरूपं धीसाक्षिणं ज्ञानविग्रहम् ।
चिन्तयात्मतया नित्यं त्यक्त्वा देहादिगां धियम् ॥ १२ ॥

ஸத்யானந்த ஸ்வரூபம் தீஸாக்ஷிணம் ஞான விக்ரஹம் ।
சிந்தயாத்மதயா நித்யம் த்யக்த்வா தேஹாதிகாம் தியம் ॥

देहादिगां-தேஹம் முதலானவைகளில் உள்ள, धियं-நான் என்கிற எண்ணத்தை, त्यक्त्वा-விட்டுவிட்டு, सत्यानन्द-स्वरूपं-ஸத்யஸ்வரூபமாய் ஆனந்தஸ்வரூபமாய், धीसाक्षिणं-புத்திக்கும் ஸாக்ஷியாய், ज्ञानविग्रहम्-ஞானஸ்வரூபமாயுள்ளதை, आत्मतया-தான் என்று, नित्यं-எப்பொழுதும், चिन्तय-சிந்தித்துக்கொள்.

தேஹம் முதலானவைகளில் உள்ள நான் என்கிற எண்ணத்தை விட்டுவிட்டு, ஸத்யஸ்வரூபமாய் ஆனந்த ஸ்வரூபமாய் புத்திக்கும் ஸாக்ஷியாய் ஞானஸ்வரூபமாய் உள்ளதை நான் என்று எப்பொழுதும் சிந்தித்துக்கொள்.

(அ) தேஹம் ஆத்மாவல்ல என்பதை யுக்தியால் காட்டுகிறார் :—

रूपादिमान्यतः पिण्डस्ततो नात्मा घटादिवत् ।
वियदादिमहाभूतविकारत्वाच्च कुम्भवत् ॥ १३ ॥

ரூபாதிமான் யத: பிண்டஸ் ததோ நாத்மா கடாதிவத் ।
வியதாதி மஹாபூத விகாரத்வாச்ச கும்பவத் ॥

पिण्डः-இந்த சரீரம், रूपादिमान्-ரூபம் முதலானதுடன் கூடியதாக, यतः-இருக்கும் தன்மையுடையது என்ற, ततः-அந்த காரணத்தினால், घटादिवत्-குடம் முதலானவைகளைப் போலவே, आत्मा-ஆத்மா, न-அல்ல. कुम्भवत्-குடம் மாதிரியே, वियदादिमहाभूतविकारत्वाच्च-ஆகாசம் முதலிய பஞ்ச மஹாபூதங்களின் கார்யமாக இருப்பதனாலும் (ஆத்மாவல்ல).

இந்த சரீரம் ரூபம் முதலானதுகளுடன் கூடியதாக இருக்கும் தன்மையுடையது என்ற அந்த காரணத்தினுல் குடம் முதலானவைகளைப்போலவே ஆத்மா அல்ல. குடம் மாதிரியே ஆகாசம் முதலிய பஞ்ச மஹா பூதங்களின் கார்யமாக இருப்பதனுலும் ஆத்மாவல்ல.

[புத்திக்கும் ஸாக்ஷியாக ஆத்மாவைத் தெரிந்து கொள்ளலாமென்று சொன்னதை அனுபவத்திற்குக் கொண்டுவரவேண்டுமாஞல் புத்தியைத் தன்னைவிட்டு வேருக வைத்துப்பார்க்கும் அப்யாஸமிருந்தால் தான் ஸாத்தியப்படும். அவ்வளவு பரிபக்குவம் ஏற்படாதவர் களுக்காக, தேஹாதிகளைவிட ஆத்மா வேறு என்பதற்கு யுக்தியை இங்கு சொல்கிருர். எப்படி குடம் முதலானது உருவம் முதலியதோடு இருப்பதாலும், ஆகாசம், வாயு தேஜஸ், ஜலம், பிருதிவீ என்ற ஐந்து மஹா பூதங்களால் செய்யப்பட்டிருப்பதனுலும் ரூபாதிகளற்ற கார்யமல்லாத ஆத்மா ஆகாதோ, அப்படியேதான் இந்த சரீரமும் ரூபாதி களோடு கூடியிருப்பதாலும் பஞ்சபூதங்களின் கார்யமா யிருப்பதனுலும் ஆத்மா ஆகாது என்று யுக்தியினுலேயே தெரிந்துகொள்ளலாம் என்று குரு எடுத்துச்சொல்கிருர். இதைக்கேட்டதும் எது ஆத்மாவல்லவென்று தெரிந்ததே தவிர எது ஆத்மாவென்று தெரியவில்லையே என்று மறுபடியும் சிஷ்யன் கேட்கிருன்] (13)

**अनात्मा यदि पिण्डोऽयमुक्तहेतुबलान्मतः ।**
**करामलकवत्साक्षादात्मानं प्रतिपादय ॥ १४ ॥**

அநாத்மா யதி பிண்டோऽயமுக்தஹேது பலான்மத: |
கராமலகவத் ஸாக்ஷாத் ஆத்மாநம் ப்ரதிபாதய ॥

**अयं**–இந்த, **पिण्डः**–சரீரம், **उक्तहेतुबलात्**–தாங்கள் சொன்ன யுக்தியின் பலத்தினுல், **अनात्मा**–ஆத்மாவல்ல என்று, **मतः**–எண்ணப்பட்டதாக, **यदि**–இருந்ததேயாஞல், **आत्मानं**–ஆத்மாவை, **करामलकवत्**–உள்ளங்கை நெல்லிக்கனி போல், **साक्षात्**–நேராக, **प्रतिपादय**–எடுத்துச்சொல்லுங்கள்.

இந்த சரீரம், தாங்கள் சொன்ன யுக்தியின் பலத்தினுல் ஆத்மாவல்லவென்று எண்ணப்பட்டதாக இருந்ததேயானுல் ஆத்மாவை உள்ளங்கை நெல்லிக்கனிபோல நேராக எடுத்துச்சொல்லுங்கள்.

[கொம்பைப்பிடித்துக்கொடுத்து இதுதான் மாடு என்று காட்டுவதுபோல ஆத்மாவை ஒருவன் இன்னொருவனுக்கு நேரில் பிடித்துக்காட்ட முடியாது. ஆத்மஸ்வரூபத்தை அறிய விரும்புகிறவன் தானே தான் யுக்தியினுல் ஆத்மாவை முதலில் தெரிந்துகொண்டு பின்னுல் அனுபவத்திற்குக் கொண்டு வரவேண்டும். ஆகையால் எதெல்லாம் ஆத்மா வல்லவென்று தெரிந்துகொண்டு பிறகு அவ்வநாத்ம பதார்த்தங்களை எவர் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருக் கிருரோ, எவர் இருப்பதனுல் அப்பதார்த்தங்கள் வேலை செய்கின்றனவோ அவர் தான் ஆத்மா என்று தீர்மானித்துக் கொள்ளவேண்டும் என்பதை குரு உபதேசிக்கிருர்.] (14)

घटद्रष्टा घटाद्भिन्नः सर्वथा न घटो यथा।
देहद्रष्टा तथा देहो नाहमित्यवधारय ॥ १५ ॥

கட த்ரஷ்டா கடாத் பிந்ந: ஸர்வதா ந கடோ யதா ।
தேஹ த்ரஷ்டா ததா தேஹோ நாஹமித்யவதாரய ॥

**यथा**-எப்படி, **घटद्रष्टा**-குடத்தைப் பார்க்கிறவன், **घटात्**-குடத்திலிருந்து, **भिन्नः**-வேறுபட்டவனுயிருப்பவன், **सर्वथा**-எவ்விதத்திலும், **घटः**-குடமாக, **न**-ஆகமாட்டானே, **तथा**-அப்படியேதான், **देहद्रष्टा**-தேஹத்தைப் பார்க்கிறவனுன, **अहं**-நான், **देहः**-தேஹமாக, **न**-இருக்கமுடியாது, **इति**-என்று **अवधारय**-நிச்சயம் செய்துகொள்.

எப்படி குடத்தைப் பார்க்கிறவன் குடத்திலிருந்து வேறுபட்டவனுயிருப்பவன் எவ்விதத்திலும் குடமாக ஆக மாட்டானே, அப்படியேதான் தேஹத்தைப் பார்க்கிறவனுன நான் தேஹமாக இருக்கமுடியாது என்று நிச்சயம் செய்து கொள். (15)

एवमिन्द्रियदृङ् नाहमिन्द्रियाणीति निश्चिनु ।
मनो बुद्धिस्तथा प्राणो नाहमित्यवधारय ॥ १६ ॥

ஏவமிந்த்ரியத்ருக் நாஹமிந்த்ரியாணீதி நிச்சினு ।
மநோ புத்திஸ் ததா ப்ராணோ நாஹமித்யவதாரய ॥

एवं-இப்படியே, इन्द्रियदृक्-இந்திரியங்களைப் பார்த்துக் கொண்டிருப்பவனான, अहं-நான், इन्द्रियाणि-இந்திரியங்கள், न-அல்ல, इति-என்று, निश्चिनु-தீர்மானம் செய்துகொள். तथा-அப்படியே, मनः-மனஸும், बुद्धिः-புத்தியும், प्राणः-பிராணனும், अहं-நான், न-அல்ல, इति-என்று, अवधारय-நிச்சயித்துக்கொள்.

இப்படியே இந்திரியங்களைப் பார்த்துக்கொண்டிருப்பவனான நான் இந்திரியங்கள் அல்லவென்று தீர்மானம் செய்துகொள். அப்படியே மனஸும் புத்தியும் பிராணனும் நான் அல்லவென்று நிச்சயித்துக்கொள். (16)

संघातोऽपि तथा नाहमिति दृश्यविलक्षणम् ।
द्रष्टारमनुमानेन निपुणं संप्रधारय ॥ १७ ॥

ஸங்காதோऽபி ததா நாஹமிதி த்ருச்ய விலக்ஷணம் ।
த்ரஷ்டாரமனுமானேன நிபுணம் ஸம்ப்ரதாரய ॥

तथा-அப்படியே, संघातः अपि-(தேஹம் இந்திரியங்கள் பிராணன் மனஸ் புத்தி இவைகள் சேர்ந்த) கூட்டமும், अहं-நான், न-அல்ல, इति-என்று, दृश्यविलक्षणं-பார்க்கப்படுபவைகளுக்கு விரோதமான லக்ஷணத்தோடுகூடிய, द्रष्टारं-பார்க்கிறவனை, अनुमानेन-அனுமானத்தினுல், निपुणं-நன்ருக, संप्रधारय-தீர்மானம் செய்துகொள்.

அப்படியே (தேஹம் இந்திரியங்கள் பிராணன், மனஸ், புத்தி இவைகள் சேர்ந்த) கூட்டமும் நான் அல்லவென்று பார்க்கப்படுபவைகளுக்கு விரோதமான லக்ஷணத்தோடு கூடிய பார்க்கிறவனை அனுமானத்தினுல் நன்ருகத் தீர்மானம் செய்துகொள், (17)

(அ) எதெல்லாம் ஆத்மாவல்ல என்பதற்கு அனுமானத்தைச் சொல்லிவிட்டு, எது ஆத்மா என்று அறிவதற்கு வேண்டிய அனுமானத்தை மேல் சுலோகங்களில் எடுத்துக்காட்டுகிறார்:—

देहेन्द्रियादयो भावा हानादिव्यापृतिक्षमाः ।
यस्य संनिधिमात्रेण सोऽहमित्यवधारय ॥ १८ ॥

தேஹேந்த்ரியாதயோ பாவா ஹாநாதி வ்யாப்ருதி க்ஷமா: |
யஸ்ய ஸந்நிதி மாத்ரேண ஸோ ऽஹமித்யவதாரய ||

देहेन्द्रियादयः-தேஹம் இந்திரியங்கள் முதலான, भावाः-பதார்த்தங்கள், यस्य-எவருடைய, सन्निधिमात्रेण-ஸந்நிதியினாலேயே, हानादिव्यापृतिक्षमाः-தள்ளுவது முதலான வியாபாரங்களில் சக்தியுள்ளவைகளாக இருக்கின்றனவோ सः-அவர்தான், अहं-நான், इति-என்று, अवधारय-தீர்மானித்துக்கொள்.

தேஹம், இந்திரியங்கள் முதலான பதார்த்தங்கள் எவருடைய ஸந்நிதியினாலேயே தள்ளுவது முதலான வியாபாரங்களில் சக்தியுள்ளவைகளாக இருக்கின்றனவோ, அவர்தான் நான் என்று தீர்மானித்துக்கொள்.

[ஜடமாக இருக்கும் எந்த பதார்த்தத்திற்கும் தானாக அசைவோ மற்றும் எவ்வித சேஷ்டையோ கிடையாது. அதில் ஏதேனும் அசைவோ சேஷ்டையோ காணப்பட்டால் அதற்குக்காரணமாக ஒரு சேதனன் இருந்தாகவேண்டும். தேஹம் இந்திரியங்கள், மனஸ் முதலானவைகள் அனுகூலமான பதார்த்தத்தை எடுக்கவும், பிரதிகூலமான பதார்த்தத்தை விலக்கவும் செய்கின்றனவே என்றால் அதற்கெல்லாம் காரணம் சேதனனான ஆத்மா அவைகளுடன் கூடவேயிருப்பதுதான். ஆகையால் ஜடபதார்த்தங்களிலுள்ள வியாபாரங்களுக்கு நிமித்தமாயிருக்கும் சேதனனே ஆத்மா என்று அறியவேண்டும் என்கிறார்.] (18)

अनापन्नविकारः सन्नयस्कान्तवदेव यः ।
बुद्ध्यादींश्चालयेत्प्रत्यक्सोऽहमित्यवधारय ॥ १९ ॥

*அநாபந்ந விகார: ஸந்நயஸ்காந்தவதேவ ய: |*
*புத்த்யாதீம்ச்சாலயேத் ப்ரத்யக் ஸோZஹமித்யவதாரய ||*

**अयस्कान्तवत् एव**-அயஸ்காந்தம் மாதிரியே, **अनापन्न-विकारः**-எவ்வித மாறுதலையும் அடையாமல், **सन्**-இருந்து கொண்டே, **बुद्ध्यादीन्**-புத்தி முதலானவைகளை, **यः**-எது, **चालयेत्**-சலிக்கும்படி செய்கிறதோ, **सः**-அந்த, **प्रत्यक्**-உள்ளே இருக்கும் தத்வம்தான், **अहं**-நான், **इति**-என்று, **अवधारय**-தீர்மானித்துக்கொள்.

அயஸ்காந்தம் மாதிரியே எவ்வித மாறுதலையும் அடையாமல் இருந்துகொண்டே புத்தி முதலானவைகளை எது சலிக்கும்படி செய்கிறதோ அந்த உள்ளே இருக்கும் தத்வம் தான் நான் என்று தீர்மானித்துக்கொள்.

[அரசன் நேரில் யுத்தம் செய்யவில்லையானாலும் அவன் இருப்பதனாலேதான் ஸைன்யம் யுத்தமிடுகிறது. ஆனால் சைன்யத்தை ஏவிவிடுவதான வியாபாரம், ஸைனிகர்களுக்கு சம்பளம் ஆயுதம் முதலியது கொடுக்கவேண்டிய கார்யங்கள், யுத்தம் அனுகூலமாக முடியவேண்டுமே என்ற கவலை, அனுகூலமாய் முடிந்தால் அதனால் ஏற்படும் ஸந்தோஷவிருத்தி, முதலிய யாவும் அரசனிடத்தில் பலவித சேஷ்டைகளையும் மாறுதல்களையும் உண்டுபண்ணுமென்பதில் ஸந்தேஹமில்லை. தன்னிடத்தில் எவ்வித சேஷ்டையுமன்னியில் தான் எவ்வித மாறுதலும் அடையாமல் தேஹாதிகளைச் சலிக்கும்படிச் செய்யும் ஆத்மாவிற்கு அயஸ்காந்தம்தான் மிகவும் பொருத்தமான திருஷ்டாந்தம் என்று அதை இங்கே உதாஹரிக்கிறார். அயஸ்காந்தத்தில் ஒருவித விகாரமும் ஏற்படுவதில்லை. ஆனாலும் பக்கத்தில் இருப்பது என்ற ஒருகாரணத்தினாலேயே இரும்பை அசையும்படி செய்கிறது] (19)

अजडात्मवदाभान्ति यत्सांनिध्याज्जडा अपि ।
देहेन्द्रियमनःप्राणाः सोऽहमित्यवधारय ॥ २० ॥

அஜடாத்மவதாபாந்தி யத்ஸாந்நித்யாத் ஜடா அபி ।
தேஹேந்த்ரிய மந: ப்ராணா: ஸோऽஹமித்யவதாரய ॥

**देहेन्द्रियमनःप्राणाः**-தேஹம், இந்திரியங்கள், மனஸ், பிராணன் இவைகள், **जडाः अपि**-ஜடமாக இருந்தபோதிலும் கூட, **यत्सांनिध्यात्**-எவருடைய ஸந்நிதியால், **अजडात्मवत्**-ஜடத்தன்மையில்லாதவைபோல, **आभान्ति**-தோன்றுகின்றனவோ, **सः**-அவர், **अहं**-நான், **इति**-என்று, **अवधारय**-தீர்மானம் செய்துகொள்.

தேஹம் இந்திரியங்கள் மனஸ் பிராணன் இவைகள் ஜடமாக இருந்தபோதிலும் கூட எவருடைய ஸந்நிதியால் ஜடத்தன்மையில்லாதவைபோல தோன்றுகின்றனவோ அவர் நான் என்று தீர்மானம் செய்துகொள்.

[ஆத்மாவினுடைய ஸந்நிதியில் தேஹாதிகள் சேஷ்டிக்கின்றன என்பதுமாத்திரமில்லை, தாங்களும் ஜடமில்லாதவைபோல தோன்றி விடுகின்றன. அதாவது தனக்கே சேஷ்டிக்க சக்தியிருப்பது போலவும், தன்னைச் சேஷ்டிக்க வைக்க வேறு எதுவும் தேவையில்லை போலவும், தானே ஸ்வயமாக சேஷ்டிப்பது போலவும்,காட்டிக்கொண்டு தன்னுடைய ஜடத்தன்மையை மறைக்கப்பார்க்கின்றன. வாஸ்தவத்தில் அவைகள் ஜடமே. அவைகளை ஆட்டி வைப்பது ஆத்மாவின் ஸந்நிதிதான் என்று அறிவது மூலமாக ஆத்மாவைத் தெரிந்துகொள்ளலாம்.] (20)

अगमन्मे मनोऽन्यत्र सांप्रतं च स्थिरीकृतम् ।
एवं यो वेद धीवृत्तिं सोऽहमित्यवधारय ॥ २१ ॥

அகமன் மே மநோऽந்யத்ர ஸாம்ப்ரதம் ச ஸ்திரீக்ருதம் ।
ஏவம் யோ வேத தீவ்ருத்திம் ஸோऽஹமித்யவதாரய ॥

**मे**-என்னுடைய, **मनः**-மனஸானது, **अन्यत्र**-வேறு இடத்தில், **अगमत्**-போயிருந்தது, **सांप्रतं च**-இப்பொழுது, **स्थिरीकृतं**-ஸ்திரமாகச் செய்யப்பட்டுவிட்டது. **एवं**-இவ்விதமாக, **धीवृत्तिं**-புத்தியினுடைய வியாபாரத்தை, **यः**-எவர், **वेद**-அறிகிருரோ, **सः**-அவர்தான், **अहं**-நான், **इति**-என்று, **अवधारय**-தீர்மானித்துக்கொள்.

என்னுடைய மனஸானது வேறு இடத்தில் போயிருந்தது, இப்போது ஸ்திரமாகச்செய்யப்பட்டுவிட்டது என்று இவ்விதமாக புத்தியினுடைய வியாபாரத்தை எவர் அறிகிருரோ, அவர்தான் நான் என்று தீர்மானித்துக்கொள்.

[ஆத்மாவினுடைய ஸத்தையினுலேயே தேஹாதிகள் சேஷ்டிக்கின்றன என்பதனுல் ஆத்மா, ஸத் என்று 18, 19, 20 சுலோகங்களால் காட்டிவிட்டு, 21, 22, 23 சுலோகங்களால் ஆத்மா ஞானஸ்வரூபமென்பதையும் 24, 25 சுலோகங்களால் ஆனந்தஸ்வரூபமென்பதையும் விளக்குகிருர்.] (21)

**स्वप्नजागरिते सुप्तिं भावाभावौ धियां तथा ।**
**यो वेत्त्यविक्रियः साक्षात्सोऽहमित्यवधारय ॥ २२ ॥**

ஸ்வப்ந ஜாகரிதே ஸுஷுப்திம் பாவாபாவௌ தியாம் ததா ।
யோ வேத்த்யவிக்ரிய: ஸாக்ஷாத் ஸோऽஹமித்யவதாரய ॥

**स्वप्नजागरिते**-ஸ்வப்னத்தையும் ஜாக்கிரத்தையும், **सुप्तिं**-ஸுஷுப்தியையும் (தூக்கத்தையும்), **तथा**-அப்படியே, **धियां**-புத்தி விருத்திகளுடைய, **भावाभावौ**-இருக்கும் தன்மையையும், இல்லாத் தன்மையையும், **यः**-எவர், **अविक्रियः**-ஒருவித மாறுதலும் அடையாமல், **साक्षात्**-நேராகவே, **वेत्ति**-அறிகிருரோ, **सः**-அவர்தான், **अहं**-நான், **इति**-என்று, **अवधारय**-தீர்மானம் செய்துகொள்.

ஸ்வப்னத்தையும் ஜாக்கிரத்தையும் ஸுஷுப்தியையும் (தூக்கத்தையும்) அப்படியே புத்தி விருத்திகளுடைய இருக்கும் தன்மையையும் இல்லாத்தன்மையையும் எவர்

ஒருவிதமாறுதலுமடையாமல் நேராகவே அறிகிருரோ, அவர்தான் நான் என்று தீர்மானம் செய்துகொள்.

[விழித்துக்கொண்டிருக்கும்போதே என் மனஸ் எங்கேயோ போயிருந்தது என்று அனுபவிக்கக்கூடியவன் மனஸைத்தவிர வேறு என்பது நன்ருகத் தெரிகிறது. விழிப்புக்காலத்தில் தேஹாதிகள் பிரபஞ்சம் இவைகளோடு கலந்துகொண்டு புத்தி சேஷ்டிக்கிறதென்பதும், ஸ்வப்ன காலத்தில் புத்தி வெளிப்பிரபஞ்சத்துடன் கலக்காத போனுலும் வாஸனுமயமான தேஹாதிகள் பிரபஞ்சம் இவைகளை ஸ்ருஷ்டி செய்துகொண்டு சேஷ்டிக்கிற தென்பதும், ஸுஷுப்தி ஸமயத்தில் வியாவஹாரிக மாகவோ வாஸனுமயமாகவோ, தேஹாதிகளோ பிரபஞ்சமோ தோன்ருமல் புத்தி அவித்யையில் லயித்திருப் பதும் ஆத்மாவிற்கு பிரத்யக்ஷமாகவே தெரிகின்றன. அதனுல்தான் நான் விழித்துக்கொண்டிருந்தேன், நான் ஸ்வப்னம் கண்டேன், நான் தூங்கினேன் என்று தான் நேரிலேயே அனுபவித்ததாகச் சொல்லமுடிகிறது. மேலும் ஜாக்ரத்காலத்திலேயே "எனக்கு கடஞானம் ஏற்பட்டிருக் கிறது. எனக்கு படஞானம் போய்விட்டது" என்று தன் புத்தியில் ஞானம் இருப்பதையும், அந்த ஞானம் போய் விடுவதையும் அறிந்துகொள்கிருன். பார்க்கிறவன் பார்க்கப் படுவதாக இருக்கமுடியாது என்ற நியாயப்படி இவ்வித அனுபவங்களை அறிகிற ஆத்மா வேறு என்றும், அவை களால் ஆத்மாவிடத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படாது என்றும் தெளிவாகத் தெரியவரும்.] (22)

घटावभासको दीपो घटादन्यो यथेष्यते ।
देहावभासको देही तथाहं बोधविग्रहः ॥ २३ ॥

கடாவபாஸகோ தீபோ கடாதந்யோ யதேஷ்யதே ।
தேஹாவபாஸகோ தேஹீ ததாZஹம் போதவிக்ரஹ: ॥

घटावभासकः-குடத்தைப் பிரகாசப்படுத்தும், दीपः-தீப மானது, घटात्-குடத்தைத்தவிர, अन्यः-வேறு என்று, यथा-

எப்படி, इष्यते-ஒப்புக்கொள்ளப்படுகிறதோ, तथा-அப்படியே देहावभासकः-தேஹத்தை பிரகாசிக்கச்செய்கிறவனும், बोधविग्रहः-ஞானஸ்வரூபனுமான, देही-தேஹத்திலுள்ள ஆத்மாவான, अहं-நான் (தேஹத்தைக்காட்டிலும் வேறானவன்.)

குடத்தைத் தெரியப்படுத்தும் தீபமானது குடத்தைத் தவிர வேறு என்று எப்படி ஒப்புக்கொள்ளப்படுகிறதோ, அப்படியே தேஹத்தை பிரகாசிக்கச்செய்கிறவனும் ஞான ஸ்வரூபனுமான தேஹத்திலுள்ள ஆத்மாவான நான் தேஹத்தைக்காட்டிலும் வேறு.

[பிரகாசிக்கச்செய்யும் தீபமும், அதனால் பிரகாசிக்கப் படுகின்ற குடமும் வெவ்வேறாக இருப்பதை உலகில் கண்டிருக்கிறோம். இதுபோல் தேஹத்தில் இருந்துகொண்டு தேஹத்தை விளங்க வைக்கின்ற ஆத்மா தேஹமாயிருக்க முடியாது. ஆத்மா தேஹத்தைக்காட்டிலும் வேறுதான். இங்கு ஆத்மாவின் பிரகாசம் ஞானரூபம், தீபத்தின் வெளிச்சம் போன்றதல்ல என்பதை 'बोधविग्रहः' என்ற பதத்தால் காட்டினார்.] (23)

पुत्रवित्तादयो भावा यस्य शेषतया प्रियाः ।
द्रष्टा सर्वप्रियतमः सोऽहमित्यवधारय ॥ २४ ॥

புத்ர வித்தாதயோ பாவா யஸ்ய ஶேஷதயா ப்ரியா: ।
த்ரஷ்டா ஸர்வ ப்ரியதம: ஸோऽஹமித்யவதாரய ॥

पुत्रवित्तादयः-புத்திரன், தனம் முதலிய, भावाः-பதார்த்தங்கள், यस्य-எவருக்கு, शेषतया-அங்கமாயிருப்பதனாலேயே, प्रियाः-பிரியமாக இருக்கின்றனவோ, द्रष्टा-(அங்கியாயிருந்து) பார்த்துக்கொண்டிருக்கும் அந்த ஆத்மா, सर्वप्रियतमः-எல்லாவற்றையும் காட்டிலும் மிகவும் பிரியமானவர். सः-அவர்தான், अहं-நான், इति-என்று, अवधारय-தீர்மானம் செய்துகொள்.

புத்திரன், தனம், முதலிய பதார்த்தங்கள் எவருக்கு அங்கமாயிருப்பதனாலேயே பிரியமாக இருக்கின்றனவோ,

(அங்கியாயிருந்து) பார்த்துக்கொண்டிருக்கும் அந்த ஆத்மா எல்லாவற்றையும் காட்டிலும் மிகவும் பிரியமானவர், அவர்தான் நான் என்று தீர்மானம் செய்துகொள்.

[எது ஸுகமோ அதுதான் பிரீதிக்கு விஷயமாக இருக்கும். ஸுகத்தைக் கொடுப்பதாகத் தோன்றும் பதார்த்தங்களிலும் பிரீதி ஏற்படும். ஆனால் அந்தப் பிரீதி ஸுகத்தைக் கொடுப்பதாகத் தோன்றும்போதுதான் இருக்கும். குழந்தையை அபிமானத்துடன் மடியில் எடுத்து வைத்துக்கொண்டாலும் கொஞ்சநேரம் தான் வைத்துக் கொள்ளமுடியும் தனக்கு வேறு கார்யமிருந்தாலும், குழந்தையே கனத்தாலும், அழவாரம்பித்தாலும் மடியிலிருந்து இறக்கிவிடும்படி ஏற்படும். ஆகையால் குழந்தை எப்பொழுதும் பிரீதிக்கு விஷயம் என்று சொல்வதற்கில்லை. அப்படியேதான் பார்யை, பந்துக்கள், பணம் முதலியவைகளும் அனுகூலமாயிருக்கும் வரையிலேயே பிரீதிக்கு விஷயம். எப்பொழுதும் பிரீதிக்கு விஷயமில்லை. தன்னிடத்தில் வைத்திருக்கும் பிரீதிக்கு மாத்திரம் "இதுவரையில்" என்ற வரம்பு கிடையாததால் ஆத்மாவே எல்லாவற்றையும் விட பிரியமானது] (24)

परप्रेमास्पदतया मा न भूवमहं सदा ।
भूयासमिति यो द्रष्टा सोऽहमित्यवधारय ॥ २५ ॥

பர ப்ரேமாஸ்பததயா மா ந பூவமஹம் ஸதா ।
பூயாஸமிதி யோ த்ரஷ்டா ஸோऽஹமித்யவதாரய ॥

अहं-நான், न मा भूवं-இல்லாமலிருக்கக்கூடாது, सदा-எப்பொழுதும், भूयासं-இருப்பேனாகவும், इति-என்று, परप्रेमास्पदतया-மேலான பிரீதிக்கு விஷயமாயிருக்கும் தன்மையினால், यः-எவர், द्रष्टा-பார்க்கிறவராக இருக்கிறாரோ, सः-அவர்தான், अहं-நான், इति-என்று, अवधारय-நிச்சயமாய் தெரிந்துகொள்.

நான் இல்லாமலிருக்கக்கூடாது, எப்பொழுதும் இருப்பேனாகவும், என்று மேலான பிரீதிக்கு விஷயமா

யிருக்கும் தன்மையினால் எவர் பார்க்கிறவராக இருக்கிறாரோ அவர்தான் நான் என்று நிச்சயமாகத் தெரிந்துகொள்.

[ தன்னைத் தவிர பிரீதிக்கு விஷயமாயிருக்கும் வேறு பதார்த்தங்கள் எவ்வளவு பிரியமாயிருந்தபோதிலும் அவைகளை அனுபவிக்கும் ஸமயத்தில்தான் அவை தேவைப்படுமே தவிர எப்பொழுதுமே தன்னுடன் இருந்தாகவேண்டுமென்று யாரும் நினைப்பது கிடையாது. அனுபவிக்க வேண்டுமென்ற எண்ணம் இருக்கும்போதுதான் அவைகளை விட்டுவிடத் தோன்றாதே தவிர, அனுபவித்துவிட்டபிறகும் அலுத்துப்போனபிறகும், அவைகளால் தொந்திரவும், துக்கமும் ஏற்படுகின்றனவென்பதை உணர்ந்த பிறகும், அவைகளை வைத்துக்கொண்டேயிருக்கவேண்டுமென்று நினைப்பது கிடையாது. தன் விஷயத்தில் மாத்திரம் "தான் இல்லாமல் போகவேண்டும்" என்கிற எண்ணம் ஒருநாளும் ஒருவருக்கும் ஏற்படுகிறதில்லையாதலால், தன்னிடத்தில் வைத்திருக்கும் பிரீதிதான் எல்லாவற்றிற்கும் மேலானது. அவ்விதம் உத்தம பிரீதிக்கு விஷயமாயிருக்கிறதான "தான்" என்பதுதான் ஆத்மா. அதைத் தவிர மற்ற பதார்த்தங்களில் வைத்திருக்கும் பிரீதி சில ஸமயத்திலேயே இருப்பதாலும், அந்தப்பிரீதியும் கூட தன்னிடத்திலுள்ள பிரீதிக்கு அங்கமாகவேயிருப்பதாலும் அப்பதார்த்தங்கள் யாவும் ஆத்மாவல்ல, அநாத்மாவேயாகும். அவைகளை அனுபவிக்கிறவரே ஆத்மா. அவர்தான் நான்.] (25)

**यः साक्षिलक्षणो बोधस्त्वंपदार्थः स उच्यते ।**
**साक्षित्वमपि बोद्धृत्वमविकारितयात्मनः ॥ २६ ॥**

ய: ஸாக்ஷி லக்ஷணோ போதஸ் த்வம்பதார்த்த: ஸ உச்யதே ।
ஸாக்ஷித்வமபி போத்த்ருத்வமவிகாரிதயாऽऽத்மன: ॥

**साक्षिलक्षणः**-ஸாக்ஷியாயிருக்கும் லக்ஷணத்துடன் உள்ள, **बोधः**-அறிவு, **यः**-எதுவோ, **सः**-அதுதான், **त्वंपदार्थः**-'த்வம்' (நீ) என்கிற பதத்தின் பொருளாக, **उच्यते**-சொல்லப்படுகிறது. **आत्मनः**-ஆத்மாவினுடைய, **साक्षित्वं**

**अपि**- ஸாக்ஷியாயிருக்கும் தன்மை என்பதுகூட, **अविकारितया**- தான் எவ்வித மாறுதலையும் அடையாமலே, **बोद्धृत्वं**- அறியும் தன்மையேயாகும்.

ஸாக்ஷியாயிருக்கும் லக்ஷணத்துடன் உள்ள அறிவு எதுவோ, அதுதான் 'த்வம்' (நீ) என்கிற பதத்தின் பொருள் என்று சொல்லப்படுகிறது ஆத்மாவினுடைய ஸாக்ஷியாயிருக்கும் தன்மை என்பதுகூட தான் எவ்வித மாறுதலையும் அடையாமலே அறியும் தன்மையே யாகும்.

[முன் சுலோகங்களில் ஆத்மாவை "த்ரஷ்டா" (பார்க்கிறவன்) என்றும், ஸாக்ஷியாயிருப்பவன் என்றும், அறிகிறவன் என்றும் பலவாருகச் சொல்லப்பட்டது. அப்படியிருப்பதனுல் ஆத்மாவினிடத்தில் ஏதேனும் மாறுதல் ஏற்படக்கூடியதுதானே என்ற ஸந்தேகத்திற்கு இடமன்னியில், ஆத்மாவினிடத்தில் எவ்வித மாறுதலும் கிடையாதென்பதை இங்கு வற்புறுத்துகிருர். தீப வெளிச்சம் எப்படி மற்ற பதார்த்தங்களைக் காட்டிக் கொடுத்தபோதிலும் அவைகளுடைய குண தோஷங்களால் பாதிக்கப்படாமல் ஒரே ரீதியாய் இருக்கிறதோ, அப்படியே தான் அறியப்படும் பதார்த்தங்களினுல் எவ்விதத்திலும் பாதிக்கப்படாமல் ஒரே ரீதியாய் அறிவு ஸ்வபாவத்துடன் இருப்பது ஆத்மா] (26)

**देहेन्द्रियमनःप्राणाहंकृतिभ्यो विलक्षणः ।**
**प्रोज्झिताशेषषड्भावविकारस्त्वंपदाभिधः ॥ २७ ॥**

தேஹேந்த்ரிய மன: ப்ராணாஹங்க்ருதிப்யோ விலக்ஷண: |
ப்ரோஜ்ஜிதாசேஷ ஷட்பாவ விகாரஸ் த்வம்பதாபித: ||

**देहेन्द्रियमनःप्राणाहंकृतिभ्यो**- தேஹம், இந்திரியங்கள், மனஸ், பிராணன், அஹங்காரம் இவைகளைக்காட்டிலும், **विलक्षणः**-விலக்ஷணமாகவும், **प्रोज्झिताशेषषड्भावविकारः**- பதார்த்தங்களுக்கு ஏற்பட்ட ஆறுவித விகாரங்கள் யாவும் அற்றதாகவும் உள்ளதுதான், **त्वंपदाभिधः**-'த்வம்' (நீ) என்கிற பதத்தினுல் சொல்லப்படுவது.

தேஹம், இந்திரியங்கள், மனஸ், பிராணன், அஹங்காரம், இவைகளைக்காட்டிலும் விலக்ஷணமாகவும், பதார்த்தங்களுக்கு ஏற்பட்ட ஆறுவித விகாரங்கள் யாவும் அற்றதாகவும் உள்ளதுதான் "த்வம்" (நீ) என்கிற பதத்தினால் சொல்லப்படுவது

[11வது சுலோகத்திலிருந்து இதுவரை சொல்லிவந்த ஆத்மாவின் ஸ்வரூபத்தை இங்கு ஸங்கிரஹித்துச் சொல்கிறார். தேஹாதிகள் ஜடமாகவும் சலனமுள்ளவையாகவும் இருக்கும் தன்மையுள்ளவை. ஆத்மா ஞானஸ்வரூபமாய் எவ்வித மாறுதலும் அற்றது. அம்மாறுதல் ஆறுவிதமென்று இங்கு குறிப்பிடுகிறார். அவையாவன: जायते உண்டாகிறது, अस्ति-இருக்கிறது, वर्धते வளர்கிறது, परिणमते-உருவம் மாறுகிறது, अपक्षीयते-குறைந்து போகிறது, नश्यति-நாசமடைகிறது. இவ்விதமான பிறவி, இருப்பு, வளர்ச்சி, மாற்றம், குறைவு, நாசம் என்கிற ஆறும் ஆத்மாவிற்குக் கிடையாது. "இருப்பு" என்பது ஸத்தாகவிருக்கும் தன்மையை இங்கு குறிக்கவில்லை, வியக்தமாகத் தெரிகிறது என்ற அர்த்தத்திலேயே உபயோகப்படுத்தியிருக்கிறது] (27)

त्वमर्थमेवं निश्चित्य तदर्थं चिन्तयेत्पुनः ।
अतद्व्यावृत्तिरूपेण साक्षाद्विधिमुखेन च ॥ २८ ॥

த்வமர்த்தமேவம் நிச்சித்ய ததர்த்தம் சிந்தயேத் புந: |
அதத்வ்யாவ்ருத்தி ரூபேண ஸாக்ஷாத் விதிமுகேன ச ||

एवं-இவ்விதமாக, त्वमर्थं-"த்வம்" (நீ) என்கிற பதத்தின் அர்த்தத்தை, निश्चित्य-தீர்மானம் செய்துகொண்டு, पुनः-பிறகு, तदर्थं-"தத்" (அது) என்கிற பதத்தின் அர்த்தத்தை, अतद्व्यावृत्तिरूपेण-எது "அது" அல்லவோ அதிலிருந்து விலக்கிக்காட்டும் முறையாகவும், साक्षात्-நேராகவே, विधिमुखेन च-விதித்துக்காட்டும் முறையாகவும், चिन्तयेत्-சிந்திக்கவேண்டும்.

இவ்விதமாக "த்வம்" (நீ) என்கிற பதத்தின் அர்த்தத்தைத் தீர்மானம் செய்துகொண்டு பிறகு "தத்" (அது) என்கிற பதத்தின் அர்த்தத்தை, எது "அது" அல்லவோ அதிலிருந்து விலக்கிக்காட்டும் முறையாகவும், நேராகவே விதித்துக் காட்டும் முறையாகவும் சிந்திக்க வேண்டும்.

[இதுவரை ஜீவனுடைய ஸ்வரூபத்தை சொல்லிவிட்டு இனி பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தைப்பற்றி சொல்ல ஆரம்பிக்கிறார். ஜீவனைப்பற்றிச் சொல்லும்போது ஜீவனுடைய ஸ்வரூபத்தில் தேஹம் முதலானவைகள் சேராததினால் அவைகளை விலக்கி, சுத்தமான சைதன்ய ஸ்வரூபமாகத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று இருவிதமாகவும் வர்ணித்ததுபோலவே, எதெல்லாம் பிரஹ்மமில்லையென்று தெரிந்துகொண்டு பிரஹ்மத்தின் ஸ்வரூபம் எத்தகையது என்று இருவிதமாகவும் தெரிந்துகொள்ளவேண்டும் என்பதைக் காட்டுகிறார். விலக்கிக் காட்டும் முறையை 29-வது சுலோகத்திலும், குறிப்பிட்டுக் காட்டும் முறையை 30-வது சுலோகத்திலும் கண்டிருக்கிறார்.] (28)

निरस्ताशेषसंसारदोषोऽस्थूलादिलक्षणः ।
अदृश्यत्वादिगुणकः पराकृततमोमलः ॥ २९ ॥

निरस्तातिशयानन्दः सत्यः प्रज्ञानविग्रहः ।
सत्तास्वलक्षणः पूर्णः परमात्मेति गीयते ॥ ३० ॥

நிரஸ்தாசேஷ ஸம்ஸார தோஷோऽஸ்தூலாதிலக்ஷண: ।
அத்ருச்யத்வாதி குணக: பராக்ருத தமோமல: ॥

நிரஸ்தாதிசயாநந்த: ஸத்ய: ப்ரஜ்ஞாந விக்ரஹ: ।
ஸத்தா ஸ்வலக்ஷண: பூர்ண: பரமாத்மேதி கீயதே ॥

निरस्ताशेषसंसारदोषः—ஸம்ஸார தோஷங்கள் யாவும் இல்லாதவராய், अस्थूलादिलक्षणः-ஸ்தூலமாக இருப்பவரில்லையென்பது முதலியவைகளை லக்ஷணமாக உள்ளவராய்

**अदृश्यत्वादिगुणकः**-பார்க்கப்படும் தன்மை முதலான குணங்கள் இல்லாதவராய், **पराकृततमोमलः**-அக்ஞானமாகிற அழுக்கை விலக்கியவராய், **निरस्तातिशयानन्दः**-எதற்குமேல் ஆனந்தம் கிடையாதோ அவ்வித ஆனந்த ரூபியாய், **सत्यः**-ஸத்யஸ்வபாவமுடையவராய், **प्रज्ञानविग्रहः**-ஞானஸ்வரூபியாய், **सत्तास्वलक्षणः**-இருப்பு என்பதையே தன் லக்ஷணமாக உடையவராய், **पूर्णः**-நிறைந்தவராய் இருப்பவர், **परमात्मा**-பரமாத்மா, **इति**-என்று, **गीयते**-சொல்லப்படுகிறுர்.

ஸம்ஸார தோஷங்கள் யாவும் இல்லாதவராய், ஸ்தூலமாக இருப்பவரில்லை என்பது முதலியவைகளை லக்ஷணமாக உள்ளவராய், பார்க்கப்படும் தன்மை முதலான குணங்கள் இல்லாதவராய், அக்ஞானமாகிற அழுக்கை விலக்கியவராய், எதற்கு மேல் ஆனந்தம் கிடையாதோ அவ்வித ஆனந்தரூபியாய், ஸத்யஸ்வபாவமுடையவராய், ஞானஸ்வரூபியாய், இருப்பு என்பதையே தன் லக்ஷணமாக உடையவராய், நிறைந்தவராய் இருப்பவர் பரமாத்மா என்று சொல்லப்படுகிறுர்.

[ஸம்ஸாரதோஷங்கள் பரமாத்மாவினிடத்தில் கிடையாது என்று சொன்னதினுலேயே ஆத்மாவை ஸ்தூலம் என்றோ கிருசம் என்றோ ஒரு அளவிற்குள் கட்டுப்படுத்த முடியாதென்றும், பார்க்கப்படும் தன்மையோ அக்ஞானமோ அவரிடம் கிடையாதென்றும் ஏற்படுகிறது. ஸம்ஸாரம் வெறும் தோற்றமாகவும், ஜடமாகவும், துக்க ரூபமாயும், அளவிற்குட்பட்டதாயுமிருப்பதால், அதற்கு விருத்தமான லக்ஷணத்தோடு கூடிய பரமாத்மா ஸத்யமாகவும், ஞானமாகவும், ஆனந்தமாகவும், பரிபூர்ணமாகவும் இருக்கிறுர் என்பதும் ஏற்படுகிறது இவ்விதமாக பரமாத்மாவின் ஸ்வரூபத்தை சொல்லிவிட்டு மஹாவாக்கியத்திலுள்ள 'தத்' (அது) என்பது என்னவென்பதை விஸ்தாரமாக மேல் சுலோகங்களினுல் சொல்கிறுர்.] (29-30)

सर्वज्ञत्वं परेशत्वं तथा संपूर्णशक्तिता ।
वेदैः समर्थ्यते यस्य तद्ब्रह्मेत्यवधारय ॥ ३१ ॥

ஸர்வக்ஞத்வம் பரேசத்வம் ததா ஸம்பூர்ண சக்திதா |
வேதை: ஸமர்த்யதே யஸ்ய தத் ப்ரஹ்மேத்யவதாரய ||

यस्य-எவருக்கு, सर्वज्ञत्वं-எல்லாவற்றையும் அறியும் தன்மை, परेशत्वं-மற்றதையெல்லாம் ஆளும் தன்மை, तथा-அப்படியே, संपूर्णशक्तिता-பரிபூர்ணமான சக்தியோடு கூடியவராய் இருத்தல் இவையெல்லாம், वेदैः-வேத வாக்கியங்களினுல், समर्थ्यते-பொருத்தப்படுகிறதோ, तत्-அதுவே, ब्रह्म-பிரஹ்மம், इति-என்று, अवधारय-நன்கு தெரிந்துகொள்.

எவருக்கு எல்லாவற்றையும் அறியும் தன்மை, மற்றதையெல்லாம் ஆளும் தன்மை, அப்படியே பரிபூர்ணமான சக்தியோடு கூடியவராய் இருத்தல், இவையெல்லாம் வேதவாக்கியங்களினுல் பொருத்தப்படுகிறதோ, அதுவே பிரஹ்மம் என்று நன்கு தெரிந்துகொள்.

[பரமாத்மாவின் ஸ்வரூபத்தை இரண்டுவிதமாக இரண்டு சுலோகங்களால் சொல்லிவிட்டு அதுதான் "தத்" (அது) என்பது, அதுதான் பிரஹ்மம் என்பதும், என்று சொன்னுல் மாத்திரம் அந்த ஸ்வரூபம் மனஸில் நன்கு பதியாது. நமக்கு ஏற்கனவே பரிசயமுள்ள ஜகத்திற்கும் ஜீவனுக்கும் பரமாத்மாவுடன் என்ன ஸம்பந்தமென்று சொன்னுல் தான் சரியானபடி கிரஹிக்கமுடியுமென்பதை உணர்ந்த குருவானவர் அந்த ஸம்பந்தத்தையே மேல் சுலோகங்களால் விளக்கி அதன்மூலமாய் பிரஹ்மத்தை அறிவிக்கிருர். தவிரவும், முந்தின சுலோகத்தில் இவ்விதமாக "சொல்லப்படுகிறது" என்று சொன்னவர் யாரால் சொல்லப்படுகிறதென்று சொல்லவில்லை. அவ்விதம் சொல்வது வேதமே தவிர வேறு யாராலேயும் சொல்ல முடியாதென்று காட்டுவதற்காக இந்த சுலோகத்தில் பிரஹ்மஸ்வரூப விஷயமான பிரமாணம் வேதம் தான் என்று காட்டுகிருர். அவ்வேதம் ஆத்மஸ்வரூபத்தைப் பலவிதமாக எடுத்துச்சொல்கின்றது ஆனுலும் தத்வம் ஒன்றுதான் என்று காட்டுவதற்காக அந்தப்பலவிதங்களையும் குறிப்பிடுகிருர். பிரஹ்மத்தை ஸர்வக்ஞனென்றும், பரமேசுவரன்

என்றும், ஸர்வசக்தனென்றும் வேதம் சொல்வதை இந்த சுலோகத்தில் கண்டிருக்கிறார். இந்த சுலோகத்திலிருந்தும் மேல் சுலோகங்களிலிருந்தும் ஸகுணமாகத்தோன்றும் பிரஹ்மமும், நிர்குணமாயிருக்கும் பிரஹ்மமும் வேறுபட்டதில்லை, ஒன்றுதான் என்பதையும் விளக்குகிறார். ஜகத்திற்கும் ஜீவனுக்கும் ஸம்பந்தப்படுத்திப்பார்த்தால் ஸகுணமென்றும், எவ்வித ஸம்பந்தமுமன்னியில் பார்த்தால் அதுவே நிர்குணமென்றும் அறிந்துகொள்ளவேண்டும்.]

**यज्ज्ञानात्सर्वविज्ञानं श्रुतिषु प्रतिपादितम् ।**
**मृदाद्यनेकदृष्टान्तैस्तद्ब्रह्मेत्यवधारय ॥ ३२ ॥**

யஜ்ஞானாத் ஸர்வவிஜ்ஞானம் ச்ருதிஷு ப்ரதிபாதிதம் |
ம்ருதாத்யநேக த்ருஷ்டாந்தைஸ் தத் ப்ரஹ்மேத்யவதாரய ||

**यज्ज्ञानात्**-எதை அறிவதனால், **सर्वविज्ञानं**-எல்லாவற்றையும் அறிந்ததாக ஏற்படுமோ என்று, **मृदाद्यनेकदृष्टान्तैः**-மண் முதலான பலவித உதாஹரணங்களால், **श्रुतिषु**-வேத வாக்கியங்களில், **प्रतिपादितं**-எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறதோ, **तत्**-அதுவே, **ब्रह्म**-பிரஹ்மம், **इति**-என்று, **अवधारय**-தீர்மானித்துக்கொள்.

[1] எதை அறிவதனால் எல்லாவற்றையும் அறிந்ததாக ஏற்படுமோவென்று மண் முதலான பலவித உதாஹரணங்களால் வேத வாக்கியங்களில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதுவே பிரஹ்மம் என்று தீர்மானித்துக்கொள்.

[பிரஹ்மமானது ஸர்வக்ஞன், ஸர்வத்திற்கும் ஈசுவரன், ஸர்வ சக்தியும் உள்ளது என்று சொன்னால் அதனால் அறியப்படுவதாயும் ஆளப்படுவதாயும், அதன் சக்திக்குக் கட்டுப்பட்டும் வேறு ஒரு பதார்த்தமாகத் தனித்து ஜகத் இருக்கிறதென்று தோன்றக்கூடியதே. அத்தோற்றத்தை மறுப்பதற்காக இந்த சுலோகத்தில் பிரஹ்மத்திற்கு வேறு லக்ஷணம் சொல்லப்படுகிறது. காரணமாக மண்ணை

1. சாந்தோக்யம் அ. 6.

அறிந்துவிட்டால் அதனுல் செய்யப்பட்ட குடம் முதலான வைகளெல்லாம் மண் தான் என்று எப்படி அறியப்பட்டு விடுகிறதோ அதேமாதிரியாக ஜகத்தில் இருப்பதாகத் தோன்றும் ஸகல பதார்த்தங்களும் இருப்பையே ஸ்வரூபமா யுடைய பிரஹ்மத்திலுலேயே செய்யப்பட்டிருக்கின்றன என்று அறிந்துவிடலாமென்று வேறு உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஸர்வ காரணமாய் ஸர்வ வியாபகமாய் இருப்பது பிரஹ்மம் என்றும் அறிந்து கொள்ளலாம் என்கிருர்.] (32)

यदानन्त्यं प्रतिज्ञाय श्रुतिस्तत्सिद्धये जगौ ।
तत्कार्यत्वं प्रपञ्चस्य तद्ब्रह्मेत्यवधारय ॥ ३३ ॥

யதாநந்த்யம் ப்ரதிஞாய ச்ருதிஸ் தத்ஸித்தயே ஜகௌ ।
தத்கார்யத்வம் ப்ரபஞ்சஸ்ய தத் ப்ரஹ்மேத்யவதாரய ॥

**यदानन्त्यं**—எதனுடைய எல்லையற்ற தன்மையை, **श्रुतिः**—வேதமானது, **प्रतिज्ञाय**-பிரதிக்ஞை செய்துவிட்டு, **तत्सिद्धये**—அந்த எல்லையற்ற தன்மை ஸித்திப்பதற்காக, **प्रपञ्चस्य**—பிரபஞ்சத்திற்கு, **तत्कार्यत्वं**-அதனுலேயே ஏற்பட்டதென்ற தன்மையை, **जगौ**—சொல்லிற்ருே, **तत्**-அதுவே, **ब्रह्म**—பிரஹ்மம், **इति**—என்று, **अवधारय**—தீர்மானித்துக்கொள்.

எதனுடைய எல்லையற்ற தன்மையை வேதமானது பிரதிக்ஞை செய்துவிட்டு அந்த எல்லையற்ற தன்மை ஸித்திப்பதற்காக பிரபஞ்சத்திற்கு அதனுலேயே ஏற்பட்டது என்ற தன்மையை சொல்லிற்ருே, அதுவே பிரஹ்மம் என்று தீர்மானித்துக்கொள்.

[மண்ணைத் தெரிந்துகொண்டால் மண்ணின் கார்யங்களான குடம் முதலானவைகளைத் தெரிந்துகொள்ளலா மென்பது வாஸ்தவம். ஆனுல் காரணமாயிருக்கும் மண் ஸர்வ வியாபகமில்லையே? அதைப்போல பிரஹ்மத்தைத் தெரிந்துகொண்டால் பிரஹ்மத்தின் கார்யமான பதார்த்தங்களைத் தெரிந்துகொண்டதாக ஆகலாம். பிரஹ்மத்தின் கார்யமில்லாத வேறு பதார்த்தங்களைத் தெரிந்துகொள்வ

தற்கு அவைகளுக்குக் காரணமான வேறு வஸ்துவை யல்லவா தெரிந்துகொள்ளவேண்டிவரும்? அப்படியானல் எல்லாவற்றையும் அறிவதற்கு பிரஹ்மத்தை அறிவது எப்படிப் போதும்? என்று கேட்கக்கூடியதனுல் மற்றொரு உபநிஷத் வாக்கியத்தைப் பிரமாணமாகக் காட்டுகிருர். அதில் பிரஹ்மம், [1]அனந்தம் (எல்லையற்றது) என்று சொல்லி யிருக்கிறது. பிரஹ்மத்தைத்தவிர வேறு பதார்த்தம் இருந்ததேயானல், அப்பதார்த்தம் பிரஹ்மமில்லையான தினுல், அதுவே பிரஹ்மத்திற்கு வரம்பாயிருந்துகொண்டு பிரஹ்மத்தின் ஸர்வ வியாபகத் தன்மையைக் கெடுத்து விடும். அப்பொழுது பிரஹ்மம் அனந்தம் (எல்லையற்றது) ஆகாது. ஆகையால் பிரபஞ்சம் பூராவும் பிரஹ்மத்தின் கார்யம்தான், பிரஹ்மத்தின் கார்யமில்லாத பதார்த்தமே கிடையாது என்று சொல்லவேண்டி வந்தது. அதற்காக எல்லோராலேயும் ஸர்வ வியாபகமென்று ஒப்புக்கொள்ளப் படுகிற ஆகாசமும் கூட பிரஹ்மத்தின் கார்யமே. அப்படியே கிரமமாக, வாயு, தேஜஸ், ஜலம், பிருத்வீ, இவை களும், இவைகளின் கார்யமான ஸகல பிரபஞ்சமும் பிரஹ் மத்தின் கார்யம்தான். ஆகையால் பிரஹ்மத்தின் எல்லை யற்ற தன்மைக்கு எவ்வித பாதகமும் கிடையாது என்று உபநிஷத்தின் பிரமாணத்தின்பேரில் சொல்லுகிருர். இவ் விதமாக மூன்று சுலோகங்களினுல் பிரஹ்மத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தைச் சொல்லிவிட்டு, பிரபஞ்சத்தை அறிந்தால் பிரஹ்மத்தை அறிந்ததாக ஆகாது, பிரஹ்மத்தை அறிந்தால் பிரபஞ்சம் அறியப் பட்டதாக ஆகும் என்று ஏற்படுவதால் அறியவேண்டியது பிரஹ்மம்தான் என்பதை அடுத்த சுலோகத்தில் வற்புறுத்து கிருர்.] (33)

विजिज्ञास्यतया यच्च वेदान्तेषु मुमुक्षुभिः ।
समर्थ्यतेऽतियत्नेन तद्ब्रह्मेत्यवधारय ॥ ३४ ॥

விஜிஜ்ஞாஸ்யதயா யச்ச வேதாந்தேஷு முமுக்ஷுபி: ।
ஸமர்த்யதேऽதியத்நேந தத்ப்ரஹ்மேத்யவதாரய ॥

1. सत्यं ... न्तं ब्रह्म' (தைத்திரீயோபநிஷத்)

**यत् च**-எது, **मुमुक्षुभिः**-மோக்ஷத்தில் இச்சையுள்ளவர்களால், **विजिज्ञास्यतया**-நன்கு அறியப்படவேண்டியதாக, **वेदान्तेषु**-உபநிஷத்துக்களில், **अतियत्नेन**-வெகு தீவிரமாக, **समर्थ्यते**-வற்புறுத்தப்படுகிறதோ, **तत्**-அதுவே, **ब्रह्म**-பிரஹ்மம், **इति**-என்று, **अवधारय**-தீர்மானமாய்த் தெரிந்துகொள்.

எது மோக்ஷத்தில் இச்சையுள்ளவர்களால் நன்கு அறியப்பட வேண்டியதாக உபநிஷத்துக்களில் வெகு தீவிரமாக வற்புறுத்தப்படுகிறதோ, அதுவே பிரஹ்மம் என்று தீர்மானமாய்த் தெரிந்துகொள்.

[[1] எதிலிருந்து ஜகத் உண்டாயிற்றோ, எதனாலேயே இருந்து வருகிறதோ, எதனிடத்திலேயே லயத்தை அடைகிறதோ, அதுவே பிரஹ்மம். அதைத் தெரிந்துகொள். என்று வேதாந்த வாக்கியம் உபதேசிக்கும்போது பிரஹ்மம் தெரிந்துகொள்ளவேண்டிய பதார்த்தம், ஜீவன் அறிபவன், என்று எண்ணுவதற்கு இடமுண்டு. அப்படி ஜீவன் பிரஹ்மத்தினிடமிருந்து வேறுபட்டிருந்தால் பிரஹ்மத்திற்கு ஜீவனே எல்லையாயிருந்து பிரஹ்மத்தின் எல்லையற்ற தன்மையையும் ஸர்வ வியாபகத்தன்மையையும் பாதித்து விடுவான். ஆகையால் ஜீவனுக்கும் தனிப்பதார்த்தமாக இருக்கும் தன்மை இல்லையென்றும் ஜீவனும் பிரஹ்மம்தான் என்றும் சொன்னாலொழிய பிரஹ்மம் அனந்தமாகாது. ஆனால் பிரபஞ்சம் எப்படி பிரஹ்மத்தின் கார்யமோ அதே மாதிரி ஜீவனை பிரஹ்மத்தின் கார்யமென்று சொல்வதற்கில்லை. ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் கார்யம் காரணம் என்ற ஸம்பந்தமில்லையானால் வேறு என்ன ஸம்பந்தம் என்ற கேள்வி வரும். அக்கேள்விக்கு ஸமாதானம் மேல் சுலோகத்தில் சொல்கிறார்.] (34)

1 यतो वा इमानि भूतानि जायन्ते। येन जातानि जीवन्ति। यत्प्रयन्त्यभिसंविशन्ति। तद्विजिज्ञासस्व। तद्ब्रह्मेति।

(தைத்திரீயோபநிஷத்)

जीवात्मना प्रवेशश्च नियन्तृत्वं च तान्प्रति ।
श्रूयते यस्य वेदेषु तद्ब्रह्मेत्यवधारय ॥ ३५ ॥

ஜீவாத்மநா ப்ரவேசச்ச நியந்த்ருத்வம் ச தான் ப்ரதி ।
ச்ரூயதே யஸ்ய வேதேஷு தத் ப்ரஹ்மேத்யவதாரய ॥

**यस्य**-எதற்கு, **जीवात्मना**-ஜீவரூபமாக, **प्रवेशः च**-பிரவேசமும், **तान् प्रति**-அந்த ஜீவர்கள் விஷயமாய், **नियन्तृत्वं च**-நியமனம் செய்யும் தன்மையும், **वेदेषु**-வேதங்களில், **श्रूयते**-காண்கிறதோ, **तत्**-அதுவே, **ब्रह्म**-பிரஹ்மம், **इति**-என்று, **अवधारय**-தீர்மானித்துக்கொள்.

எதற்கு ஜீவரூபமாக பிரவேசமும், அந்த ஜீவர்கள் விஷயமாய் நியமனம் செய்யும் தன்மையும் வேதங்களில் காண்கிறதோ அதுவே பிரஹ்மம் என்று தீர்மானித்துக் கொள்.

[சரீரத்தை ஸ்ருஷ்டி செய்த பரமாத்மாவேதான் ஜீவன் என்ற பெயருடன் அதற்குள் நுழைந்தார் என்று உபநிஷத் வாக்கியம் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதால் ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் ஸ்வரூபத்தில் பேதம் கிடையாது. சுத்த ஸ்வரூபத்தைவிட்டு வியாவஹாரிக தசையில் அவ்விரண்டும் வெவ்வேறு என்று வைத்துக்கொண்டால் ஜீவன் நியமிக்கப் படுகிறதாகவும், பிரஹ்மம் நியமனம் செய்கிறதாகவும் ஆகும். அந்த நியமனம் எவ்விதமென்று அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார்.] (35)

कर्मणां फलदातृत्वं यस्यैव श्रूयते श्रुतौ ।
जीवानां हेतुकर्तृत्वं तद्ब्रह्मेत्यवधारय ॥ ३६ ॥

கர்மணும் பலதாத்ருத்வம் யஸ்யைவ ச்ரூயதே ச்ருதௌ ।
ஜீவாநாம் ஹேது கர்த்ருத்வம் தத் ப்ரஹ்மேத்யவதாரய ॥

**जीवानां**-ஜீவர்களுடைய, **कर्मणां**-புண்ணியபாபகர்மாக்களுக்கு, **फलदातृत्वं**-பலனைக்கொடுப்பவராயிருக்கும் தன்மையும் (அவர்களுக்கு) **हेतुकर्तृत्वं**-கர்மாக்களைச் செய்யும்படி

செய்கிறவராயிருக்கும் தன்மையும், **यस्य एव**-எவருக்கே உண்டென்று, **श्रुतौ**-வேதத்தில், **श्रूयते**-காண்கிறதோ, **तत्**-அதுவே, **ब्रह्म**-பிரஹ்மம், **इति**-என்று, **अवधारय**-தீர்மானித்துக் கொள்.

ஜீவர்களுடைய புண்ணிய பாப கர்மாக்களுக்குப் பலனைக் கொடுப்பவராயிருக்கும் தன்மையும், அவர்களுக்குக் கர்மாக்களைச் செய்யும்படி செய்கிறவராயிருக்கும் தன்மையும், எவருக்கே உண்டென்று வேதத்தில் காண்கிறதோ அதுவே பிரஹ்மம் என்று தீர்மானித்துக்கொள்.

[ஜீவர்களிடத்தில் கர்த்ருத்வம், போக்த்ருத்வம், அதாவது கர்மாக்களைச் செய்யக்கூடிய தன்மையும், கர்மாக்களின் பலனான ஸுக துக்கங்களை அனுபவிக்கக் கூடிய தன்மையும் இருப்பதாக எல்லோரும் அறிந்திருக்கிறார்கள். ஆனால் அந்த இருவிதத் தன்மைகளும் ஜீவர்களுக்கு ஸ்வதஃஸித்தமாக ஏற்பட்டதில்லை. அவ்விதம் இருந்தால், தான் நினைத்தபடியெல்லாம் செய்ய முடிய வேண்டும், வேண்டிய ஸுகத்தை மாத்திரம் அனுபவிக்கவும், வேண்டாத துக்கத்தை அனுபவிக்காமலிருக்கவும் ஸ்வாதந்திரியம் இருக்கவேண்டும். இவை வாஸ்தவத்தில் இல்லையென்பது ஸகல ஜீவர்களுக்கும் அனுபவ ஸித்தம். ஆகையால் கர்மாவைச் செய்வதிலேயும், பலனை அனுபவிப்பதிலேயும் பராதீனமாயிருப்பதால் யாருக்குப் பராதீனம் என்ற கேள்வி ஏற்படும். எவருடைய அனுக்ரஹத்தினால் கர்மாக்களைச் செய்யும் சக்தியும், பலன்களை அனுபவிக்கும் சக்தியும் ஜீவர்களுக்கு ஏற்படுகிறதோ அதாவது ஜீவர்கள் கர்மாவைச் செய்வதற்கு எவர் உதவுகிறாரோ, எவர் செயலுக்குத் தக்கபடி ஸுக துக்கங்களைக் கொடுக்கிறாரோ அவர்தான் பிரஹ்மம் என்று அறிந்துகொள்ளவேண்டும் என்கிறார்.] (36)

(அ) இவ்விதமாக 11-ஆவது முதல் 27-ஆவது சுலோகம் முடிய ஜீவனுடைய ஸ்வரூபம் தேஹாதிகளுக்கு விலக்ஷணமாய் ஸர்வ ஸாக்ஷியாய், ஸத்தாய், சித்தாய்,

ஆனந்தமாய் இருக்கும் தன்மையென்றும். 28-ஆவது முதல் 36-ஆவது சுலோகம் முடிய பிரஹ்மஸ்வரூபம் ஜகத்தின் நியந்தாவாய், பரிபூர்ணமாய், ஸத்தாய் சித்தாய், ஆனந்தமாய், இருக்கும் தன்மையென்றும் நிர்வசனம் செய்துவிட்டு இனி அவ்விரண்டிற்கும் ஸ்வரூபத்தில் பேத மில்லையென்பதை எடுத்துச்சொல்ல ஆரம்பிக்கிறார். அதாவது மஹா வாக்கியத்திலுள்ள "த்வம்" (நீ) என்கிற ஜீவனையும் "தத்" (அது) என்கிற பிரஹ்மத்தையும் இத்தன்மையுடையதென்று சொல்லிவிட்டு, அவ்விரண்டிற்கும் உள்ள ஸம்பந்தத்தைக் குறிக்கும் "அஸி" என்கிற பதத்தின் அர்த்தமான ஐக்கியத்தை எடுத்துச் சொல்கிறார்:-

तत्त्वंपदार्थौ निर्णीतौ वाक्यार्थश्चिन्त्यतेऽधुना ।
तादात्म्यमत्र वाक्यार्थस्तयोरेव पदार्थयोः ॥ ३७ ॥

தத்த்வம் பதார்த்தௌ நிர்ணீதௌ
வாக்யார்த்தச்சிந்த்யதேZதுநா |
தாதாத்ம்யமத்ர வாக்யார்த்தஸ் தயோரேவ பதார்த்தயோ: ||

**तत्त्वंपदार्थौ**-'தத்' (அது) 'த்வம்' (நீ) என்கிற இரண்டு பதங்களுடைய அர்த்தங்கள், **निर्णीतौ**-நிர்ணயிக்கப்பட்டு விட்டன. **अधुना**-இப்பொழுது, **वाक्यार्थः**-அப்பதங்கள் சேர்ந்த வாக்கியத்தின் அர்த்தம், **चिन्त्यते**-சிந்திக்கப் படுகிறது. **तयोः एव**-அதே இரண்டு, **पदार्थयोः**-பதங்களின் அர்த்தங்களானவைகளுக்கும், **तादात्म्यं**-ஒரே ஸ்வரூபமாயிருக்கும் தன்மை, **अत्र**-இங்கு, **वाक्यार्थः**-வாக்கியத்தின் அர்த்தம்.

"தத்" (அது) "த்வம்" (நீ) என்கிற இரண்டு பதங்களுடைய அர்த்தங்கள் நிர்ணயிக்கப்பட்டுவிட்டன. இப்பொழுது அப்பதங்கள் சேர்ந்த வாக்கியத்தின் அர்த்தம் சிந்திக்கப்படுகிறது. அதே இரண்டு பதங்களின் அர்த்தங்களானவைகளுக்கும் ஒரே ஸ்வரூபமாயிருக்கும் தன்மை இங்கு வாக்கியத்தின் அர்த்தம்.

[முன் 10-ஆவது சுலோகத்தில், பதங்களுடைய அர்த்தம நன்கு தெரிந்துவிட்டால் அப்பதங்கள் சேர்ந்து உண்டாயிருக்கிற வாக்கியத்தின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளமுடியுமென்று சொன்னதையனுஸரித்து இதுவரை "த்வம்", "தத்" என்கிற பதங்களின் அர்த்தத்தை விளக்கிவிட்டபடியால் இனி வாக்கியத்தின் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டுவிடலாமென்று ஏற்படுகிறது. ஆனால் இந்த மஹா வாக்கியத்தில் இரண்டு பதங்களின் அர்த்தங்களான ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் அபேதம் சொல்வதாக "அஸி" (இருக்கிறாய்) என்ற பதத்தினால் தெரிகிறது. வெவ்வேறான லக்ஷணங்களோடு கூடின இரண்டு பதார்த்தங்கள் வெவ்வேறாக இருப்பதுதான் நியாயமே தவிர, இரண்டும் ஒன்றுதான் என்பது எப்படி என்று ஸந்தேஹம் ஏற்படுவதால் அதைக் கொஞ்சம் விவரிக்கவேண்டி வருகிறது.] (37)

संसर्गो वा विशिष्टो वा वाक्यार्थो नात्र संमतः ।
अखण्डैकरसत्वेन वाक्यार्थो विदुषां मतः ॥ ३८ ॥

ஸம்ஸர்கோ வா விசிஷ்டோ வா வாக்யார்த்தோ
நாத்ர ஸம்மத:।
அகண்டைகரஸத்வேன வாக்யார்த்தோ விதுஷாம் மத: ॥

**अत्र**-இந்த இடத்தில், **संसर्गो वा**-ஸம்ஸர்க்கமாவது, **विशिष्टो वा**-விசிஷ்டமாவது, **वाक्यार्थः**-வாக்கியத்தின் அர்த்தமாக, **न संमतः**-ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. **अखण्डैकरसत्वेन**-அகண்டமாய் ஏகரஸமாயிருப்பதே, **वाक्यार्थः**-வாக்கியத்தின் அர்த்த மென்பதுதான், **विदुषां**-வித்வான்களுக்கு, **मतः**-ஸம்மதமாகும்.

இந்த இடத்தில் ஸம்ஸர்க்கமாவது விசிஷ்டமாவது வாக்கியத்தின் அர்த்தமாக ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. அகண்டமாய் ஏகரஸமாயிருப்பதே வாக்கியத்தின் அர்த்த மென்பதுதான் வித்வான்களுக்கு ஸம்மதமாகும்.

[ஒரு பதார்த்தத்தைப்பற்றிச் சொல்லவேண்டுமானல் ஐந்துவிதமாகத்தான் சொல்லமுடியுமென்று வித்வான்கள் தீர்மானித்திருக்கிருர்கள்.

1. ஜாதி — அது இந்த இனத்தைச்சேர்ந்தது: ராமர் க்ஷத்திரியர்

2. குணம் — அதற்குள்ள ஏதேனும் குணத்தைக் குறிப்பிடுவது: ராமர் உதாரமாயிருப்பவர்.

3. கிரியை — அதற்குள்ள ஏதேனும் கிரியையைக் குறிப்பிடுவது: ராமர் ஸ்வதர்மத்தை அனுஷ்டிப்பவர்.

4. ஸம்பந்தம் — அதற்கும் வேறு பதார்த்தத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தைக் கூறுதல்: ராமர் தசரத புத்திரன்.

5. ஸம்ஞை அதற்கு வைக்கப்படும் பெயர்: இவர் ராமர் என்பவர்.

இவ்வைந்தில் ஸம்ஞை என்பது வியவஹாரத்திற்காகக் கல்பிக்கப்பட்டிருப்பதால் அதற்கு அர்த்தத்தில் தாத்பர்யமில்லே. ஜாதி, குணம், கிரியை இவைகளேச் சொல்லும் சப்தங்களின் அர்த்தம் அந்தப் பதார்த்தத்தினிடத்தில் அன்வயித்துக்கொண்டு, அதை மற்ற பதார்த்தங்களிலிருந்து விலக்கிக் காட்டுவதால் அவைகளே விசேஷணம் என்று சொல்வார்கள். அப்பதார்த்தத்தில் ஒட்டாமல் வேறு பதார்த்தத்திற்கும் அதற்குமுள்ள ஸம்பந்தத்தைச் சொல்லி விளக்குகிற ஸம்பந்தம் என்கிற நான்காவது முறையை ஸம்ஸர்க்கம் என்பார்கள். பிரஹ்மமென்பது ஏகமாகவேயிருப்பதால் அதில் ஜாதியைச் சொல்லும் சப்தத்திற்கு இடமில்லே; நிர்குணமாயிருப்பதால் குணவாசக சப்தத்திற்கும், நிஷ்கிரியமாயிருப்பதால் கிரியாவாசக சப்தத்திற்கும் இடமில்லே; ஆகையால் இவையாவும் பிரஹ்மத்திற்கு விசேஷணமாகாததிஞல் பிரஹ்மத்தை விசிஷ்டமென்று சொல்வதற்கில்லே. பிரஹ்மத்தைத் தவிர வேறு பதார்த்தமே கிடையாததிஞல் இன்னெரு பதார்த்தத்

தின் ஸம்பந்தத்திற்கும் இடமில்லை; ஆகையால் ஸம்ஸர்கத்திற்கும் வழியில்லை. ஸம்ஞை என்பது வெறும் கல்பிதமான பெயரானதினால் அதை மாத்திரம் சொல்லி பதார்த்தத்தை விளக்கமுடியாது. இவ்விதமாக ஸாதாரணமாகச் சொல்லக்கூடிய ரீதியில் எவ்வகையிலும் பிரஹ்மத்தைச் சொல்ல முடியாமலிருக்கிறது. ஆனால் உபநிஷத்திலோ நீ என்கிற சப்தத்தையும் அது என்கிற சப்தத்தையும் சேர்த்து ஒன்று படுத்தி வாக்கியம் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு என்ன தாத்பர்யம் என்றால், நீ என்ற சப்தத்தால் குறிக்கப் படும் அர்த்தத்தில் "நீ" என்கிற அம்சத்தை விட்டு விட்டும் அது என்கிற சப்தத்தால் குறிக்கப்படும் அர்த்தத்தில் "அது" என்கிற அம்சத்தை விட்டு விட்டும் இரண்டு பதார்த்தங்களிலும் மிஞ்சுகிறதான, இரண்டிற்கும் பொதுவான, வேற்றுமையற்ற ஒரே விதமாயுள்ள, சைதன்யத்தையே கிரஹித்தால் அப்பொழுதுதான் வாக்கியம் சரியான அர்த்தத்தைக் கொடுக்கும். அவ்விதம் அர்த்தம் செய்வதின் பிரகாரத்தை மேல் சுலோகங்களில் காட்டுகிறார்.] (38)

प्रत्यग्बोधो य आभाति सोऽद्वयानन्दलक्षणः ।
अद्वयानन्दरूपश्च प्रत्यग्बोधैकलक्षणः ॥ ३९ ॥

ப்ரத்யக் போதோ ய ஆபாதி ஸோZத்வயாநந்த லக்ஷண: |
அத்வயாநந்த ரூபச்ச ப்ரத்யக் போதைக லக்ஷண: ||

**प्रत्यग्बोधः**–உள்ளிருக்கும் ஞானஸ்வரூபியாக, **यः**–எவர், **आभाति**–பிரகாசிக்கிறாரோ, **सः**–அவரே, **अद्वयानन्दलक्षणः**–இரண்டற்று ஆனந்தமாயிருக்கும் தன்மையுள்ளவர். **अद्वयानन्दरूपश्च**–இரண்டற்று ஆனந்தமாயிருக்கும் தன்மை உள்ளவர்தான், **प्रत्यग्बोधैकलक्षणः** – உள்ளிருக்கும் ஞானஸ்வரூபமாயுள்ளவர்.

உள்ளிருக்கும் ஞானஸ்வரூபியாக எவர் பிரகாசிக்கிறாரோ, அவரே இரண்டற்று ஆனந்தமாயிருக்கும் தன்மை உள்ளவர். இரண்டற்று ஆனந்தமாயிருக்கும் தன்மை உள்ளவர்தான் உள்ளிருக்கும் ஞானமேஸ்வரூபமாயுள்ளவர்.

[உள்ளேயிருப்பதாகத் தோன்றும் ஜீவசைதன்யமும், இரண்டற்று வியாபகமாயுள்ள பிரஹ்ம சைதன்யமும் ஒன்றுதான். மோதிரம் தங்கம் என்று சொல்லலாம்; ஆனால் தங்கம் மோதிரம் என்று சொல்லமுடியாது. அது மாதிரி இங்கேயில்லையென்று காட்டுவதற்காக, இரண்டற்று வியாபகமாயுள்ள பிரஹ்ம சைதன்யமேதான் உள்ளேயிருப்பதாகத் தோன்றும் ஜீவசைதன்யமும் என்று மாற்றியும் உபதேசிக்கிறார்.] (39)

इत्थमन्योन्यतादात्म्यप्रतिपत्तिर्यदा भवेत् ।
अब्रह्मत्वं त्वमर्थस्य व्यावर्तेत तदैव हि ॥ ४० ॥

तदर्थस्य च पारोक्ष्यं यद्येवं किं ततः शृणु ।
पूर्णानन्दैकरूपेण प्रत्यग्बोधोऽवतिष्ठते ॥ ४१ ॥

இத்தமந்யோந்ய தாதாத்ம்ய ப்ரதிபத்திர் யதா பவேத் |
அப்ரஹ்மத்வம் த்வமர்த்தஸ்ய வ்யாவர்தேத ததைவ ஹி ‖

ததர்த்தஸ்ய ச பாரோக்ஷ்யம் யத்யேவம் கிம் தத: ச்ருணு |
பூர்ணாநந்தைகரூபேண ப்ரத்யக் போதோZவதிஷ்டதே ‖

इत्थं-இவ்விதமாக, अन्योन्यतादात्म्यप्रतिपत्तिः-ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் ஒருவருக்கொருவர் உள்ள ஒரே தன்மையின் ஞானம், यदा-எப்பொழுது, भवेत्-ஏற்படுமோ, तदा एव हि-அப்பொழுதே, त्वमर्थस्य-'த்வம்' (நீ) என்பதன் அர்த்தமான ஜீவனுக்கு, अब्रह्मत्वं-பிரஹ்மமாயிருக்கும் தன்மை இல்லை என்பது, व्यावर्तेत-விலகிவிடும். तदर्थस्य च-அப்படியே 'தத்' (அது) என்பதன் அர்த்தமான பிரஹ்மத்திற்கு, पारोक्ष्यं-நேரில் தெரியாத தன்மையுள்ளது என்பதும் (விலகிவிடும்). एवं यदि-இவ்விதம் விலகினதேயானால், ततः-அதிலிருந்து, किं-என்ன கிடைக்கிறது? शृणु-சொல்கிறேன் கேள். प्रत्यग्बोधः-உள்ளிருக்கும் ஞானஸ்வரூபம், पूर्णानन्दैकरूपेण-பூர்ணமான ஆனந்த ஸ்வரூபமாகவே, अवतिष्ठते-இருந்துவிடும்.

இவ்விதமாக ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் ஒருவருக்கொருவர் உள்ள ஒரே தன்மையின் ஞானம் எப்பொழுது ஏற்படுமோ, அப்பொழுதே 'த்வம்' (நீ) என்பதன் அர்த்தமான ஜீவனுக்கு ப்ரஹ்மமாயிருக்கும் தன்மை இல்லை என்பது விலகிவிடும். அப்படியே 'தத்' (அது) என்பதன் அர்த்தமான பிரஹ்மத்திற்கு நேரில் தெரியாத தன்மை உள்ளது என்பதும் விலகிவிடும். இவ்விதம் விலகினதேயானுல் அதிலிருந்து என்ன கிடைக்கிறது? சொல்கிறேன். கேள் உள்ளிருக்கும் ஞான ஸ்வரூபம் பூர்ணமான ஆனந்த ஸ்வரூபமாக இருந்துவிடும்.

[39வது சுலோகத்தில் ஜீவன் பிரஹ்மம்தான், பிரஹ்மம்தான் ஜீவன் என்று சொன்னதின் தாத்பர்யத்தை இவ்விரண்டு சுலோகங்களால் விளக்குகிருர். ஜீவன் என்பது உள்ளேயிருப்பதாகவும் பிரஹ்மம் வெளியே இருப்பதாகவும் ஸாமான்யமாய் ஜனங்கள் நினைத்துக்கொண்டிருக்கிறபடியால் ஜீவன் வியாபகமில்லையென்றும் பிரஹ்மம் பிரத்யக்ஷ விஷயமில்லை யென்றும் தோன்றுகிறது. ஜீவனை பிரஹ்மம் என்று சொன்னுல் ஜீவன் பிரஹ்மமில்லையென்று எண்ணுவதை நிராகரித்து ஜீவனுக்கும் ஸ்வரூபத்தில் வியாபகமாயும் ஆனந்தமாயுமிருக்கும்தன்மை உண்டென்று ஏற்படும். அப்படியே பிரஹ்மத்தை ஜீவன் என்று சொன்னுல் பிரஹ்மம் ஏதோ வெளியிலுள்ளதும் பிரத்யக்ஷமில்லாததுமானது என்கிற எண்ணம் நிவிருத்தியாகிவிடும். இவ்விதம் ஒன்றுக்கொன்று முறண்படும் அம்சங்கள் நிவிருத்தியாகிவிட்டால் ஜீவன் வேறு, பிரஹ்மம் வேறு என்ற எண்ணத்திற்கே இடமில்லாமல் இரண்டுமே ஒன்றுதான் என்கிற ஞானம் ஏற்படும். ஆனுல் உள்ளேயிருக்கும் தன்மையோடு கூடினதாகவே ஜீவனையும் வெளியிலிருக்கும் தன்மையோடு கூடினதாகவே பிரஹ்மத்தையும் பாவித்துக் கொண்டிருந்தால் அவ்விரண்டிற்கும் எவ்விதத்திலும் அபேதம் ஸித்திக்காது. ஸித்திக்கும்படி செய்யவேண்டுமானுல் 'நீ' 'அது' என்கிற இரு சப்தங்களுக்கும் அப்படியே அர்த்தம் செய்வதைவிட்டு அந்த சப்தங்களினுல் குறிக்கப்படும் சைதன்யத்தை மாத்திரம் அர்த்தமாக

கிரஹிக்கவேண்டும். அது எப்படி என்பதை மேல் சுலோகங்களில் தெளிவுபடுத்துகிறார்.] (40-41)

**तत्त्वमस्यादिवाक्यं च तादात्म्यप्रतिपादने ।**
**लक्ष्यौ तत्त्वंपदार्थौ द्वावुपादाय प्रवर्तते ॥ ४२ ॥**

*தத்த்வமஸ்யாதிவாக்யம் ச தாதாத்ம்ய ப்ரதிபாதனே |*
*லக்ஷ்யௌ தத்த்வம்பதார்த்தௌ த்வாவுபாதாய*
*ப்ரவர்த்ததே ||*

**तत्त्वमस्यादिवाक्यं च**-' தத் த்வம் அஸி' முதலான வாக்கியங்கள், **तादात्म्यप्रतिपादने**-ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் ஒற்றுமையை எடுத்துச்சொல்லும் விஷயத்தில், **तत्त्वंपदार्थौ**-'தத்' 'த்வம்' (அது, நீ) என்ற பதங்களின் அர்த்தமாக, **लक्ष्यौ**-குறிக்கப்படும், **द्वौ**-இரண்டு அர்த்தங்களையும் தான், **उपादाय**-எடுத்துக்கொண்டு, **प्रवर्तते**-பிரவிருத்திக்கின்றன.

" தத் த்வம் அஸி " முதலான வாக்கியங்கள் ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் ஒற்றுமையை எடுத்துச்சொல்லும் விஷயத்தில் " தத் " " த்வம் " (அது, நீ) என்ற பதங்களின் அர்த்தமாகக்குறிக்கப் படும் இரண்டு அர்த்தங்களையும் தான் எடுத்துக்கொண்டு பிரவிருத்திக்கின்றன.

[ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் உள்ள அபேதத்தைச் சொல்லும் மஹா வாக்கியங்கள் நான்கு. அவைகளில் உபதேச வாக்கியமான " தத் த்வம் அஸி " என்கிற வாக்கியத்திலேயே " தத் ", " த்வம் " என்கிற பதங்கள் பிரயோகம் செய்யப்பட்டிருப்பதால் அதற்கு இங்கு பிராதான்யம் கொடுக்கப்படுகிறது. ஒரு பதத்திற்கு அர்த்தம் இருவகைப்படும் வாச்யார்த்தம், லக்ஷ்யார்த்தம் என்று. அந்தப் பதத்திற்கு ஸாதாரணமாக ஏற்பட்ட அர்த்தம் வாச்யார்த்தம் எனப்படும், மாட்டைப் பார்த்து மாடு என்று சொல்வது போல். ஸாதாரணமாக ஏற்பட்ட அர்த்தம் பொருந்தாதபோது அந்தப் பதத்தினுல் குறிக்கப் படும் அர்த்தம் லக்ஷ்யார்த்தம் எனப்படும். மனுஷ்யனைப்

பார்த்து மாடு என்று சொன்னால் அவன் மாடாக என்பது நன்கு தெரிகிறபடியால் அவனிடம் மாட்டின் தன்மையான புத்தியின்மையோ முரட்டுத்தனமோ இருக்கிறதென்று அர்த்தம் செய்துகொள்வதுபோல். இவ்விடத்தில் "அது", "நீ" என்கிற பதங்களுக்கு ஸாதாரணமாயுள்ள வாச்யார்த்தத்தை எடுத்துக்கொண்டால் அவ்விரு பதங்களின் அர்த்தங்களுக்கும் அபேதம் இருக்கமுடியாததினால் சைதன்யமென்ற லக்ஷ்யார்த்தத்தையே எடுத்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. இப்படியே மற்ற வாக்கியங்களிலும் வாச்யார்த்தத்தை விட்டு லக்ஷ்யார்த்தத்தையே கிரஹிக்கவேண்டும். லக்ஷ்யார்த்தத்தையே கிரஹிக்க வேண்டுமென்ற விஷயத்தை இந்த சுலோகத்தில் சொல்லி விட்டு வாச்யார்த்தத்தை விடவேண்டுமென்பதை அடுத்த சுலோகத்தில் சொல்லுகிறார்.] (42)

हित्वा द्वौ शबलौ वाच्यौ वाक्यं वाक्यार्थबोधने ।
यथा प्रवर्ततेऽस्माभिस्तथा व्याख्यातमादरात् ॥ ४३ ॥

ஹித்வா த்வௌ ஶபளௌ வாச்யௌ வாக்யம்
வாக்யார்த்த போதநே ।
யதா ப்ரவர்த்ததேऽஸ்மாபிஸ் ததா வ்யாக்யாதமாதராத் ॥

वाक्यं–மஹாவாக்கியமானது, वाक्यार्थबोधने-வாக்கியத்தின் அர்த்தத்தை போதிப்பதில், यथा–எந்தப்பிரகாரமாக, वाच्यौ-வாச்யார்த்தங்களான, शबलौ-கலந்துள்ள தத்வங்கள் द्वौ–இரண்டையும், हित्वा–விட்டுவிட்டு, प्रवर्तते–பிரவிருத்திக்கிறதோ, तथा–அந்தப்பிரகாரமாக, अस्माभिः-நம்மால், आदरात्-கவனத்துடன், व्याख्यातं–வியாக்யானம் செய்யப்பட்டது.

மஹா வாக்கியமானது வாக்கியத்தின் அர்த்தத்தை போதிப்பதில் எந்தப் பிரகாரமாக வாச்யார்த்தங்களான கலந்துள்ள தத்வங்கள் இரண்டையும் விட்டுவிட்டு பிரவர்த்திக்கிறதோ, அந்த பிரகாரமாக எங்களால் கவனத்துடன் வியாக்யானம் செய்யப்பட்டது,

[வாச்யார்த்தம் சுத்தமான தத்வமல்லவாதலால் கலப்பு என்று அதைக் குறிப்பிட்டு, சுத்த தத்வத்தைக் கலப்புள்ளதாகச் செய்த அம்சங்களை விலக்கவேண்டும் என்று சொல்லப்பட்டது. அந்த அம்சங்கள் "த்வம்" (நீ) என்கிற பதத்தின் அர்த்தத்தில் எவையென்பதை அடுத்த சுலோகத்திலும், "தத்" (அது) என்கிற பதத்தின் அர்த்தத்தில் எவையென்பதை அதற்கடுத்த சுலோகத்திலும், விவரித்துச்சொல்லுகிறார்.] (43)

आलम्बनतया भाति योऽस्मत्प्रत्ययशब्दयोः ।
अन्तःकरणसंभिन्नबोधः स त्वंपदाभिधः ॥ ४४ ॥

ஆலம்பனதயா பாதி யோऽஸ்மத் ப்ரத்யய ஶப்தயோ: ।
அந்தக்கரண ஸம்பின்ன போத: ஸ த்வம்பதாபித: ॥

यः-எது, अस्मत्प्रत्ययशब्दयोः-"நான்" என்கிற எண்ணத்திற்கும் 'நான்' என்கிற சப்தத்திற்கும், आलम्बनतया-ஆதாரமாக, भाति-விளங்குகிறதோ, सः-அந்த, अन्तःकरणसंभिन्नबोधः-அந்தஃகரணத்துடன் கலந்துள்ள அறிவே, त्वंपदाभिधः-'த்வம்' (நீ) என்கிற பதத்தினுல் சொல்லப்படுவது.

எது "நான்" என்கிற எண்ணத்திற்கும், "நான்" என்கிற சப்தத்திற்கும் ஆதாரமாக விளங்குகிறதோ, அந்த அந்தக்கரணத்துடன் கலந்துள்ள அறிவே "த்வம்" (நீ) என்கிற பதத்தினுல் சொல்லப்படுவது.

[உலகத்தில் ஸாமான்யமாக எல்லாரும் "நான் நான்" என்ற சப்தத்தை உபயோகிக்கிறார்கள். அவ்விதம் உபயோகிக்கும்போது அவர்கள் தங்கள் புத்தியையும் அதன் அர்த்தத்தில் சேர்த்துக்கொண்டே சொல்கிறார்கள். இந்த சுலோகத்தில் புத்தியை மாத்திரம் சொன்னபோதிலும் வியவஹார தசையில் புத்தியுடன் நிற்பதில்லை. நான் பார்க்கிறேன், கேட்கிறேன் என்று சொல்லும்போது இந்திரியங்களையும், நான் பருமனாக இருக்கிறேன், இளைத்திருக்கிறேன் என்று சொல்லும்போது தேஹத்தையும்

நான் என்பதின் அர்த்தத்தில் சேர்த்துவிடுகிறார்கள். சில ஸமயம் நல்ல உடை தரித்துக்கொண்டு நான் அழகாக இருக்கிறேன் என்று நினைக்கும்போது அந்த உடையையும் கூட நான் என்பதில் சேர்த்துவிடுகிறார்கள். ஆனால் அந்தக்கரணம், இந்திரியங்கள், தேஹம் இவையெல்லாம் ஜடமாயிருப்பதால் இவைகளுக்கு அறிவு கிடையாது. சைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவின் ஸம்பந்தத்தினாலேயே இவை சேஷ்டிக்கின்றன. ஆகையால் நாம் ஸாதாரணமாய் ஆத்மா அல்லது நீ என்கிறபதத்தினால் சுத்தமான சைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவையும் ஜடஸ்வரூபமான தேஹாதி களாகிற அனாத்மாக்களையும் சேர்த்தே கலந்து வியவஹரிக் கிறோம். இவ்விதம் நீ என்ற சப்தத்தினால் ஸாமான்யமாய்ச் சொல்லப்படுவது சுத்த ஆத்மாவல்ல, கலப்பு ஆத்மா தான்.]

मायोपाधिर्जगद्योनिः सर्वज्ञत्वादिलक्षणः ।
पारोक्ष्यशबलः सत्याद्यात्मकस्तत्पदाभिधः ॥ ४५ ॥

*மாயோபாதிர் ஜகத்யோநி: ஸர்வக்ஞத்வாதி லக்ஷண: |*
*பாரோக்ஷ்ய ஶபள: ஸத்யாத்யாத்மகஸ் தத்பதாபித: ||*

**मायोपाधिः**-மாயையை உபாதியாயுடையதாயும், **जगद्योनिः**-ஜகத்திற்குக்காரணமாயும், **सर्वज्ञत्वादिलक्षणः**-ஸர்வக் ஞத்வம் முதலானதுகளை லக்ஷணமாகவுள்ளதாயும், **पारोक्ष्यशबलः**-பிரத்யக்ஷமல்லாதது என்று தோன்றக்கூடிய கலப் புள்ளதாயும், **सत्याद्यात्मकः**-ஸத்யமாயிருக்கும் தன்மை முதலானதுகளை ஸ்வரூபமாயுள்ளதாயும் இருப்பது, **तत्पदाभिधः** "தத்" (அது) என்கிறபதத்தினால் சொல்லப்படுவது.

மாயையை உபாதியாய் உடையதாயும், ஜகத்திற்குக் காரணமாயும், ஸர்வக்ஞத்வம் முதலானதுகளை லக்ஷண மாக உள்ளதாயும், பிரத்யக்ஷமல்லாதது என்று தோன்றக் கூடிய கலப்புள்ளதாயும், ஸத்யமாயிருக்கும் தன்மை முதலானதுகளை ஸ்வரூபமாயுள்ளதாயும் இருப்பது 'தத்' (அது) என்கிற பதத்தினால் சொல்லப்படுவது.

[முந்தின சுலோகத்தில் கலப்புள்ள "நீ"யை வர்ணித்து விட்டு இந்த சுலோகத்தில் கலப்புள்ள "அது"வை வர்ணிக்கிறார். கலப்பில்லாத சுத்தமான 'தத்' (அது) என்கிற பதத்தின் அர்த்தம் ஸத்யமாயும் ஞானமாயும் அனந்தமாயும் ஆனந்தமாயும் உள்ள சுத்த சைதன்யமேயாகும். ஞான ஸ்வரூபமாய் ஸ்வயம்பிரகாசமாயிருக்கும் இவ்வஸ்து உண்டா இல்லையா என்றுகூட ஸந்தேஹமேற்படும்படி மறைந்து பிரத்யக்ஷமாய் அறியக்கூடாததுபோல் ஆகிவிட்டது. இதுவே அதிலுள்ள கலப்பு. இவ்விதம் ஏற்பட்டதற்குக் காரணம் என்னவென்றால் மாயை என்பது இவ்வஸ்துவிற்கு உபாதியாக ஏற்பட்டுவிட்டது. ஸூர்ய கிரணங்களால் ஏற்படும் மேகத்தினால் எப்படி ஸூர்யன் மறைக்கப்பட்டு விடுகிறாரோ, அல்லது ஸூர்ய கிரணங்களின் பிரகாசத்தினாலேயே ஸூர்ய பிம்பத்தைப்பார்க்க முடியாமல் போய்விடுகிறதோ, அப்படியே பிரஹ்மத்தினிடமிருப்பதாகத்தோன்றும் மாயா சக்தியினாலேயே பிரஹ்மம் மறைபட்டுவிடுகிறது. கயிறு மறைந்ததுடன் நிற்காமல் எப்படிப் பாம்பாகவும் தோன்றுகிறதோ, அப்படியே பிரஹ்மம் மறைவுபட்டதுடன் நிற்காமல் ஜகத்தையும் தோன்றும்படிச் செய்கிறது. ஒருவித மாறுதலையும் அடையாமல் ஏகரூபமாயிருக்கும் கயிறு எப்படி அதில் தோன்றும் பாம்புக்குக் காரணம் என்று வியவஹரிக்கப்படுகிறதோ, அப்படியேதான் பிரஹ்மத்தை ஜகத்திற்குக்காரணம் என்று சொல்ல வேண்டும். பாம்பு கயிற்றிலிருந்து உண்டானது மாத்திரம் அல்ல, அது இருப்பதும் கயிற்றின் இருப்பினால்தான், அது மறைவதும் கயிற்றிற்குள்தான். இவ்விதமாகப் பாம்பின் உத்பத்தி, ஸ்திதி, லயம் எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பது கயிறே. அப்படியேதான் ஜகத்தின் உத்பத்தி, ஸ்திதி, லயம் இவைகளுக்குக் காரணமாயிருப்பது பிரஹ்மமே. ஜகத்தில் உள்ள பிராணி வர்க்கங்களோ, ஜடபதார்த்தங்களோ, அவைகள் உத்பத்தியாவதிலும், இருப்பதிலும், லயமடைவதிலும் உள்ள அனந்தவைசித்திரியங்களுக்கும் காரணமாயிருக்கும் பிரஹ்மம் ஸர்வக்ஞனாயிருந்தே தீரவேண்டும். எல்லாவற்றையும் அறிந்திருந்தால்

மாத்திரம் போதாது, தோன்றினதையெல்லாம் கார்யத்தில் நிறைவேற்றுவதற்கு வேண்டிய ஸாமர்த்தியமுள்ளவராக இருக்கவேண்டும்; ஆகையால் அவர் ஸத்ய ஸங்கல்பராயும் ஸர்வசக்தராயும் இருந்தாகவேண்டும். ஜகத்திலுள்ள பதார்த்தங்களைத் தன்னிஷ்டப்போல் உண்டுபண்ணவும் மாற்றவும் அழிக்கவும் சக்தியிருந்தபோதிலும், இதற்காக தான் வேறு எங்கேயோ தூரதேசத்திலிருந்து வந்தாக வேண்டிய அவசியமிருந்தால் நினைத்தவுடன் நடத்த முடியாது; ஆகையால் அப்பதார்த்தங்களைவிட்டு விலகியிராமல் அவைகள் இருக்குமிடத்திலேயே இருக்கவேண்டியதால் ஸர்வ வியாபகமாகவும் இருந்தாகவேண்டும். இவ்விதமாக பிரஹ்மத்தை ஜகத்காரணமென்று வைத்துக் கொண்டால், அப்பிரஹ்மத்திற்கு ஸர்வக்ஞத்வம் ஸத்ய ஸங்கல்பத்வம், ஸர்வசக்தத்வம், ஸர்வ வியாபகத்வம் முதலானவைகளெல்லாம் உண்டென்றே சொல்லவேண்டும். ஆனால் இவை யாவும் ஜகத்காரணமாக பிரஹ்மத்தை நினைக்கும்போதுதான் உண்டு. ஜகத்காரணமாக பிரஹ்மம் தோன்றுவது மாயையை உபாதியாக அடைந்ததினால் தான். மாயையினாலேயே பிரஹ்மம் பிரத்யக்ஷமில்லாத வஸ்துவாகத் தோன்றுகிறது இவ்விதமாகப் பலவிதக் கலப்போடு கூடியதும், ஆனால் வாஸ்தவத்தில் ஸத்ய ஞானனந்தஸ்வரூபமாயுமுள்ள வஸ்து எதுவோ அதுவே "தத்" (அது) என்கிற பதத்தினால் ஸாதாரணமாகச் சொல்லப்படுகிறது. முன் சுலோகத்தில் "த்வம்" பதத்தின் வாச்யார்த்தத்தையும், இந்த சுலோகத்தில் "தத்" பதத்தின் வாச்யார்த்தத்தையும் வர்ணித்துவிட்டு அவ்வர்த்தங்களை அப்படியே வைத்துக்கொண்டால், இரண்டிற்கும் அபேதம் சொல்வது ஸாத்தியமில்லை என்பதை அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார்.] (45)

प्रत्यक्परोक्षतैकस्य सद्वितीयत्वपूर्णता ।
विरुध्यते यतस्तस्माल्लक्षणा संप्रवर्तते ॥ ४६ ॥

ப்ரத்யக்பரோக்ஷதைகஸ்ய ஸத்விதீயத்வ பூர்ணதா ।
விருத்யதே யதஸ் தஸ்மாத் லக்ஷணா ஸம்ப்ரவர்த்ததே ॥

**एकस्य**-ஒரே பதார்த்தத்திற்கு, **प्रत्यक्परोक्षता**-உள்ளே இருந்து பிரத்யக்ஷமாயிருப்பதும், வெளியே இருந்து பிரத்யக்ஷமில்லாமலிருப்பதும் (அப்படியே), **सद्वितीयत्वपूर्णता**-இரண்டாவதுள்ளதாயும் பரிபூர்ணமாயும் இருப்பதும், **विरुध्यते**-பரஸ்பரம் விரோதமாயிருக்கிறது, **यतः तस्मात्**-என்ற காரணத்தினால், **लक्षणा**-லக்ஷணையானது, **संप्रवर्तते**-ஏற்படுகிறது.

ஒரே பதார்த்தத்திற்கு உள்ளே இருந்து பிரத்யக்ஷமாயிருப்பதும், வெளியில் இருந்து பிரத்யக்ஷமில்லாமலிருப்பதும் (அப்படியே) இரண்டாவதுள்ளதாயும் பரிபூர்ணமாயும் இருப்பதும் பரஸ்பரம் விரோதமாயிருக்கிறது என்ற காரணத்தினால் லக்ஷணையானது ஏற்படுகிறது.

[44வது சுலோகத்தில் ஜீவனுடைய ஸ்வபாவத்தைச் சொல்லும்போது அந்த:கரணத்துடன் கலந்தவனென்று சொன்னபடியால் தேஹாதிகளுக்கெல்லாம் உள்ளேயிருப்பவன் என்றும், பிரதிப் பிராணிக்கும் தனித்தனியே அந்தக்கரணமிருப்பதால் ஜீவர்கள் அநேகர் என்றும், நான் நான் என்று பிரகாசிக்கிறவன் என்றிருப்பதால் அவனையறிவதற்கு வேறு பிரமாணம் தேவையன்னியில் ஸ்வயம்பிரகாசமாயிருப்பவன் என்றும், அந்த:கரணமென்ற வரம்புக்குட்பட்டுவிட்டபடியால் ஜீவனுடைய ஞானமோ சக்தியோ ஆனந்தமோ எல்லாம் சுருங்கிவிட்டனவென்றும், சொல்லப்பட்டதாக ஆகிறது. அடுத்த சுலோகத்தில் பிரஹ்மம் ஜகத்காரணமென்றும், வியாபகமாயும் ஏகமாயுமுள்ள மாயையையே உபாதியாக உடையதென்றும், ஸத்ய ஞானானந்தானந்தஸ்வருபமாயும் ஸர்வக்ஞனும் ஸர்வ சக்தனும் ஸர்வ வ்யாபகனும் இருக்கும் தன்மையுடையது என்று ஜீவலக்ஷணங்களுக்கு நேர் விருத்தமான லக்ஷணங்களையுடையதென்று சொல்லப்பட்டது. இவ்விதம் நேர் விருத்தப்பட்ட இரண்டு பதார்த்தங்களும் வாஸ்தவத்தில் ஒன்றுதான் என்று எப்படிச்சொல்லமுடியுமென்கிற ஸந்தேஹம் வருவது ஸஹஜம்தான். வேற்றுமைப்படுத்தக்கூடிய லக்ஷணங்களுக்கே பிராதான்யம் கொடுத்துக்

கொண்டு, இரண்டிற்கும் ஐக்கியத்தை ஸாதிப்பது ஸாத்தியமேயில்லை என்பதை ஒப்புக்கொண்டு அந்த வேறு பட்ட லக்ஷணங்களுக்குப் பிராதான்யம் கொடுக்காமல் அவ்விரண்டு பதார்த்தங்களிலும் பொதுவாயுள்ள சைதன் யாம்சத்தை மட்டும் எடுத்துக்கொண்டால்தான் ஐக்கியம் ஸித்திக்கும். ஆதலால் வாச்யார்த்தத்தை விட்டு விட்டு லக்ஷ்யார்த்தத்தைத்தான் இங்கு எடுத்துக்கொள்ளவேண்டு மென்பதை இந்த சுலோகத்தில் எடுத்துக்காட்டுகிறுர். பொதுவாகவே வாச்சியார்த்தத்தைவிட்டு லக்ஷ்யார்த்தத் தையே கிரஹிக்கவேண்டுமென்ற நியமம் வரக்கூடிய இடத்தை அடுத்த சுலோகத்தில் காட்டுகிறுர்.] 46)

मानान्तरविरोधे तु मुख्यार्थस्यापरिग्रहे ।
मुख्यार्थेनाविनाभूते प्रतीतिर्लक्षणोच्यते ॥ ४७ ॥

*மாநாந்த்ர விரோதே து முக்யார்த்தஸ்யாபரிக்ரஹே ।*
*முக்யார்த்தேநாவிநாபூதே ப்ரதீதிர் லக்ஷணேச்யதே ॥*

**मानान्तरविरोधे तु**–வேறு பிரமாணங்களுக்கு விரோதம் ஏற்படும்போது, **मुख्यार्थस्य**–முக்கியமான அதாவது வாச்சிய மான அர்த்தத்தை, **अपरिग्रहे**–எடுத்துக்கொள்ள முடியாத நிலைமையில், **मुख्यार्थेन**–வாச்சியார்த்தத்திலிருந்து, **अविना-भूते**–விலகாமலிருக்கிற அர்த்தத்தில், **प्रतीतिः**–தோன்றுவது **लक्षणा**–லக்ஷணை என்று, **उच्यते**–சொல்லப்படுகிறது.

வேறு பிரமாணங்களுக்கு விரோதம் ஏற்படும்போது முக்கியமான அதாவது வாச்சியமான அர்த்தத்தை எடுத்துக்கொள்ள முடியாத நிலைமையில் வாச்சியார்த்தத்தி லிருந்து விலகாமலிருக்கிற அர்த்தத்தில் தோன்றுவது லக்ஷணை என்று சொல்லப்படுகிறது.

[மனுஷ்யனைப் பார்த்து மாடு என்றுல், மனுஷ்யன் மாடு இல்லை என்பது பிரத்யக்ஷமாகத் தெரிவதால் மாடு என்கிற பதத்திற்கு முக்யார்த்தமான மாடு ஜாதியுள்ள பிராணிதான் இங்கு குறிக்கப்படுகிறதென்று வைத்துக்

கொள்ள வழியில்லை. ஆகையால் வாச்சியார்த்தத்தை விட்டு விட அவசியமேற்படுகிறது. அவ்விதம் அவசியம் ஏற்பட்டு விட்ட காரணத்தினுல் மாடு என்கிற அர்த்தத்தைப் பூராவும் விட்டு விட்டு பக்ஷி என்ருே மரம் என்ருே அர்த்தம் செய்து விட முடியாது. மாட்டுக்கு ஸம்பந்தமுள்ள ஏதேனும் ஒரு அம்சத்தையேதான் அர்த்தமாக கிரஹிக்கவேண்டும். இந்த மனுஷியன் மாட்டின் குணமான முரட்டுத்தனம் முதலானவற்ருேடு கூடி இருக்கிருன் என்று அர்த்தம் செய்ய வேண்டும். இதையே லக்ஷணை என்பார்கள். அந்த லக்ஷணை மூன்று விதமாக இருக்கும். வாச்யார்த்தத்தில் ஒரு அம்சத்தை மாத்திரம் விடுகிறதில்லாமல் முழுவதையும் விட்டுவிட்டு அவ்வர்த்தத்திற்கு ஸம்பந்தப்பட்ட வேறு அர்த்தத்தைக் குறிப்பது: "கங்கையில் காசீ நகரம் இருக்கிறது" என்பதில் கங்கை என்ற சப்தத்தின் வாச்சியார்த்தமான கங்கா பிரவாஹத்தை விட்டு "கங்கைக்கரை" என்று அர்த்தம் சொல்வது; இது ஒருவிதம். வாச்சியார்த்தத்தில் இல்லாத ஒரு அம்சத்தைச் சேர்த்துக்கொண்டு முழுவதையும் அர்த்தமாகச் சொல்வது: "சிவப்பு ஓடுகிறது" என்பதில் சிவப்பு என்ற சப்தம் வர்ணத்தைக் குறிக்குமே தவிர ஒரு பதார்த்தத்தை குறிக்காது; வர்ணமோ தனியாக ஓடாது. ஆகையால் "சிவப்புக் குதிரை" என்றமாதிரி சேர்த்துக்கொள்ளவேண்டி வருகிறது; இது இன்னெரு விதம். மூன்ருவதுவிதத்தில் வாச்சியார்த்தத்தை முழுவதும் விட்டுவிடுவதும் கிடையாது, முழுவதையும் அப்படியே வைத்துக்கொள்வதும் கிடையாது: "அவன்தான் இவன்" என்பதில் "அவன்" என்ற சப்தம் வேறு இ[illegible]லா காலத்திலோ இருந்தவனைக் குறிக்கும்; "இவன்" என்ற சப்தம் பிரகிருதமான இடத்திலும் காலத்திலும் முன்னுல் இருப்பவனைக் குறிக்கும்; இங்கு தேசமும் காலமும் விரோதப்படுகிறபடியால் அவைகளை விலக்கி இரண்டு பதங்களிலும் பொதுவாய்த் தெரிகிற மனுஷியனை மாத்திரம் குறிப்பதாக எடுத்துக்கொண்டால்தான் வாக்கியம் சரியான படி அர்த்தம் செய்யமுடியும். இம் மூன்றுவித லக்ஷணைகளில் மூன்ருவதானதே "தத்த்வம் அஸி" முதலான

வாக்கியங்களில் பொருந்துமென்று அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார்] (47)

तत्त्वमस्यादिवाक्येषु लक्षणा भागलक्षणा।
सोऽयमित्यादिवाक्यस्थपदयोरिव नापरा ॥ ४८ ॥

தத்த்வமஸ்யாதி வாக்யேஷு லக்ஷணா பாகலக்ஷணா ।
ஸோऽயமித்யாதி வாக்யஸ்த்த பதயோரிவ நாபரா ॥

तत्त्वमस्यादिवाक्येषु-" தத் த்வம் அஸி " முதலான வாக்கியங்களில், सोऽयमित्यादिवाक्यस्थपदयोः इव-'அவன் இவன் " முதலான வாக்கியங்களிலுள்ள இ ர ண் டு பதங்களுக்கும் எப்படியோ அப்படியே, लक्षणा-லக்ஷணையானது, भागलक्षणा-பாகலக்ஷணை (வாச்சியார்த்தத்தில் ஒரு அம்சத்தை விட்டும் மற்ற அம்சத்தை விடாமலும் இருக்கும் லக்ஷணை) யேயாகும். न अपरा-வேறுவித லக்ஷணை பொருந்தாது.

"தத் த்வம் அஸி" முதலான வாக்கியங்களில், "அவன் இவன்" முதலான வாக்கியங்களிலுள்ள இரண்டு பதங்களுக்கும் எப்படியோ அப்படியே லக்ஷணையானது பாக லக்ஷணை (வாச்சியார்த்தத்தில் ஒரு அம்சத்தை விட்டும் மற்ற அம்சத்தை விடாமலும் இருக்கும் லக்ஷணை) யே யாகும். வேறுவித லக்ஷணை பொருந்தாது.

["தத் த்வம் அஸி" (நீ அதாக இருக்கிறாய்), "அஹம் பிரஹ்ம அஸ்மி" (நான் பிரஹ்மமாக இருக்கிறேன்), "அயம் ஆத்மா பிரஹ்ம" (இந்த ஆத்மா பிரஹ்மம்), "ப்ரக்ஞானம் பிரஹ்ம" (அறிவே பிரஹ்மம்), என்கிற வாக்கியங்களில் அது என்றும் பிரஹ்மம் என்றும் சொல்லப் படுகிற பதார்த்தம் ஜகத் காரணமாய் வியாபகமாய் ஸர்வக்ஞமாய் என்றெல்லாம் சொல்லக்கூடிய வஸ்து. நீ என்றும் நான் என்றும் ஆத்மா என்றும் அறிவு என்றும் சொல்லப்படுகிறபதார்த்தம் தேஹாதி அந்த:கரணம் உள்பட உள்ள உபாதிகளினால் கட்டுப்பட்டு வெகு சிறியவனாய் அல்பக்ஞனாய் என்றெல்லாம் சொல்லக்கூடிய வஸ்து. இவ்

விரண்டும் ஒன்று என்று சொல்லும் இவ்வாக்கியங்களுக்கு சரியானபடி அர்த்தம் சொல்லவேண்டுமானுல் இந்த விருத்தாம்சங்களை யெல்லாம் விட்டுவிட்டு இவ்விரண்டிலும் பொதுவாயுள்ள சைதன்யஸ்வரூபத்தைத்தான் எடுத்துக் கொள்ளவேண்டும். ஆகையால் இங்கு பாகலக்ஷணையே யாகும். இவ்விதமாகவே இம்மஹாவாக்கியங்களுக்கு அர்த்தம் செய்துகொள்ளவேண்டுமென்பதைக் காட்டிவிட்டு அவ்வர்த்தத்தை புத்தியினுல் கிரஹித்து வைத்துக்கொண்டு மாத்திரம் இருந்துவிட்டால் போதாது, அவ்வர்த்தத்தை அனுபவத்திற்குக் கொண்டுவரவேண்டும் என்பதை வற்புறுத்துகிருர்] (48)

अहं ब्रह्मेति वाक्यार्थबोधो यावद्दृढीभवेत् ।
शमादिसहितस्तावदभ्यस्येच्छ्रवणादिकम् ॥ ४९ ॥

அஹம் ப்ரஹ்மேதி வாக்யார்த்த போதோ யாவத்
த்ருடீபவேத் ।
ஶமாதி ஸஹிதஸ் தாவதப்யஸ்யேத் ச்ரவணாதிகம் ॥

**अहं**-நான், **ब्रह्म**-பிரஹ்மம், **इति**-என்ற, **वाक्यार्थबोधः**-வாக்கியத்தினுடைய அர்த்தத்தின் ஞானம், **यावत्**-எது வரை, **दृढीभवेत्**-திடமாக ஏற்படுமோ, **तावत्**-அதுவரை, **शमादिसहितः**-சமம் முதலான ஸாதனங்களுடன் கூடிய வனுக, **श्रवणादिकम्**-சிரவணம் முதலானவைகளை, **अभ्यस्येत्**-அப்யாஸம் செய்யவேண்டும்.

நான் பிரஹ்மம் என்ற வாக்கியத்தினுடைய அர்த்தத்தின் ஞானம் எதுவரை திடமாக ஏற்படுமோ, அதுவரை சமம் முதலான ஸாதனங்களுடன் கூடினவனுக சிரவணம் முதலானவைகளை அப்யாஸம் செய்யவேண்டும்.

[நான் பிரஹ்மம் என்ற ஞானம் இங்கேயே அடைய வேண்டியதான திருஷ்டப் பிரயோஜனமாயிருப்பதால், அதற்கு ஸாதனமான சிரவணம், மனனம், நிதித்யாஸனம், ஸமாதி என்பவைகளை ஞானமாகிற பலன் ஸாக்ஷாத்தாக

ஏற்படும்வரை அனுஷ்டித்தே தீரவேண்டும். சிரவணுதிகளுக்குப் பூர்வாங்கமாயுள்ள ஸாதன சதுஷ்டயம் என்கிற விவேகம், வைராக்கியம், சமாதிஷட்கம், முமுக்ஷுதா இவைகளும் ஸ்திரமாய் இருந்து தீரவேண்டும். ஆகையால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு நன்கு நிலைக்கும்வரை இந்த இரண்டுவித ஸாதனங்களையும் இடைவிடாமல் சிரத்தையுடன் அப்யஸித்துக்கொண்டே வரவேண்டும் என்பது மிக அவசியமென்பதை எடுத்துக் காட்டுகிறுர்.] (49)

श्रुत्याचार्यप्रसादेन दृढो बोधो यदा भवेत् ।
निरस्ताशेषसंसारनिदानः पुरुषस्तदा ॥ ५० ॥

विशीर्णकार्यकरणो भूतसूक्ष्मैरनावृतः ।
विमुक्तकर्मनिगलः सद्य एव विमुच्यते ॥ ५१ ॥

ச்ருத்யாசார்ய ப்ரஸாதேன த்ருடோ போதோ யதா பவேத் ।
நிரஸ்தாசேஷ ஸம்ஸார நிதான: புருஷஸ்ததா ॥

விசீர்ண கார்யகரணே பூத ஸூக்ஷ்மைரநாவ்ருத: ।
விமுக்த கர்ம நிகள: ஸத்ய ஏவ விமுச்யதே ॥

**श्रुत्याचार्यप्रसादेन**–வேதம், ஆசார்யர் இவர்களுடைய பிரஸாதத்திஞல், **बोधः**–ஞானமானது, **यदा**–எப்பொழுது, **दृढः**–திடமாக, **भवेत्**–ஏற்படுமோ, **तदा**–அப்பொழுது, **पुरुषः**–புருஷன், **निरस्ताशेषसंसारनिदानः**–ஸம்ஸாரம் முழுவதற்கும் காரணமான அவித்யை நீங்கினவஞக, **विशीर्णकार्यकरणः**–சரீரம் இந்திரியங்கள் எல்லாம் உலைந்துபோனவஞக, **भूतसूक्ष्मैः**–பூதஸூக்ஷ்மங்களால், **अनावृतः**–சூழப்படாதவஞக, **विमुक्तकर्मनिगलः**–கர்மாவாகிற விலங்கிலிருந்து விடுபட்டவஞக, **सद्यः एव**–உடனேயே, **विमुच्यते**–முக்தி அடைகிறுன்.

வேதம் ஆசார்யர் இவர்களுடைய பிரஸாதத்திஞல் ஞானமானது எப்பொழுது திடமாக ஏற்படுமோ, அப்பொழுது புருஷன் ஸம்ஸாரம் முழுவதற்கும் காரணமான அவித்யை நீங்கினவஞக, சரீரம் இந்திரியங்கள் எல்லாம்

உலேந்துபோனவனாக, பூத ஸூக்ஷ்மங்களால் சூழப்படாதவனாக, கர்மாவாகிற விலங்கிலிருந்து விடுபட்டவனாக, உடனேயே முக்தி அடைகிறான்.

["தத் த்வம் அஸி" முதலான வாக்கியங்களினால் சொல்லப்படும் அர்த்தமாகிற பிரஹ்மாத்ம ஐக்கியத்தை வேதமூலமாகவும் குருமூலமாகவும் நன்கு கிரஹித்துக் கொண்டு அனுஸந்தானம் செய்து திடமாக ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிட்ட ஜீவனுக்கு ஸம்ஸார பந்தத்திலிருந்து உடனே விடுதலை ஏற்படுகிறதென்பதை இவ்விரண்டு சுலோகங்களிலும் குறிப்பிடுகிறார். இவ்வித ஸாக்ஷாத்காரம் ஏற்படுவதற்கு மூன்று ஸாதனங்கள் அவசியமானவை என்பதையும் குறிப்பிடுகிறார். ஆத்மாவின் தத்வம் எது என்று போதிக்க வேதாந்தமும், வேதாந்தத்தில் போதிக்கப்படும் தத்வம் இதுதான் என்று ஸந்தேஹத்திற்கிடமன்னியில் தெளிவாய் எடுத்துக்காட்ட குருவும், வேதாந்தத்தினால் போதிக்கப்பட்டு குருவினால் எடுத்துக் காட்டப்பட்ட தத்வம் வாஸ்தவம்தான் என்று உணர தன் அனுபவமும், ஆக மூன்றும் அவசியம். உதாஹரணமாக கல்கண்டை நேரில் பார்க்காத ஒருவன் "கல்கண்டு தித்திக்கும்" என்று கேள்விப்பட்டிருக்கலாம் ஆனால் கல்கண்டு என்பது எது என்று எடுத்துக்காட்ட கல்கண்டின் தித்திப்பை அனுபவித்த மற்றொருவனும் அவசியம்; அவன் "தித்திக்கும் கல்கண்டு இது" என்று சொல்லலாம். இவ்விரண்டுடன் நிறுத்திவிட்டால் நாக்கில் கல்கண்டின் ருசி தெரியாது; இவ்விரண்டின் மூலமாய் அறிந்துகொண்ட கல்கண்டை நாக்கில் போட்டுக்கொண்டால்தான் கேள்விப் பட்டதும் உபதேசிக்கப்பட்டதுமான கல்கண்டின் தித்திப்பு வாஸ்தவம்தான் என்கிற அனுபவம் ஏற்படும்; அப்பொழுது தான் "கல்கண்டு தித்திக்கிறது" என்ற ஞானம் ஏற்படும். இவ்விதமாகவே வேதாந்த சிரவணத்தினாலும் குருவின் உபதேசத்தினாலும் ஆத்ம தத்வத்தைப் பரோக்ஷமாக அறிந்துகொண்டு நிரந்தரம் அனுஸந்தானம் செய்வதினால் அபரோக்ஷமாக அறியவேண்டும். இவ்விதம் ஆத்ம ஸாக்ஷாத்காரம் திடமாக ஏற்பட்ட உடனேயே ஆத்ம

தத்வத்தை அறியாத்தன்மையாகிய அவித்யை நிவிருத்தி ஆகிவிடும். "உடனே" என்பது 'அடுத்த க்ஷணத்தில்" என்ற அர்த்தத்தில் உபயோகிக்கவில்லை; "அதே க்ஷணத்தில்" அதாவது ஸமகாலத்தில் என்றுதான் அர்த்தம். அவித்யையே காமமாக பரிணமித்து கர்மாவில் இழுத்து விட்டு ஸுக துக்கங்களை அனுபவிக்கும்படி செய்கிற படியால் ஸர்வ ஸம்ஸாரத்திற்கும் அவித்யையே மூல காரணம். அதன் விரோதியான ஆத்மஞானம் ஏற்பட்ட க்ஷணமே, தீபம் வந்த க்ஷணமே இருட்டு விலகுவதுபோல, அவித்யை விலகிவிடும். அவித்யை போய்விட்டபடியால் அதன் கார்யங்களான காம க்ரோதாதிகளுக்கு ஆசிரயமான ஸூக்ஷ்ம சரீரமும், காம க்ரோதாதிகளை வெளிக்காட்டவும் அவைகளின் பலனான ஸுக துக்கங்களை அனுபவிக்கவும் அவசியம் வேண்டியிருக்கிற போகாயதனமான ஸ்தூல சரீரமும், பிரயோஜனமற்றுப்போய்விடுகின்றன. இந்த ஸூக்ஷ்ம சரீரத்திற்கு உபாதானகாரணமான அபஞ்சீகிருதமான ஐந்து ஆகாசாதி பூதங்களும், ஸ்தூல சரீரத்திற்கு உபாதான காரணமான பஞ்சீக்ருதமான ஐந்து ஆகாசாதி பூதங்களும் இனி ஆத்மாவை மறைக்க சக்தியற்றவைகளாக ஆகிவிடுகின்றன. போகாயதனமான ஸ்தூல சரீரமும் போக ஸாதனமான ஸூக்ஷ்ம சரீரமும் பிரயோஜனம் அற்றுப்போனவுடன் போகத்திற்கே இடமில்லாததினால் போகத்திற்குக் காரணமான புண்ணிய பாப கர்மாக்களும் இந்த ஞானியை பாதிக்கும் தன்மையை இழந்துவிடும். ஆக அவித்யாகாம கர்மங்களும் அவைகளின் ஆசிரயமான தேஹாதிகளும் விலகினவுடன் ஸ்வயம்பிரகாசமாயுள்ள ஆத்மா எவ்வித பந்தமும் மறைவும் இல்லாமல் பிரகாசிக்கிறார். இதுவே முக்தி எனப்படும். ஞான ஸமகாலத்திலேயே முக்தியையடைந்துவிட்டபோதிலும் இந்த சரீரத்தைக்கொடுத்த கர்மாவின் வேகமிருக்கும் வரையில் சரீராதிகளுக்கு விலக்ஷணமாயுள்ள ஆத்மஸாக்ஷாத்காரம் இருந்து வந்தபோதிலும் சரீராதிகள் அத்யந்த நாசத்தையடையா. ஆகையால் அந்த ஞானி வாஸ்தவமாக முக்தனாயிருந்தபோதிலும் சரீராதிகள் உள்ள

வனுக மற்றவர்களுக்குக் காணப்படுவான். அந்தக்கர்மா வின் வேகமும் தீர்ந்தவுடன் வேறு சரீரமெடுக்க நிமித்தமே யில்லாமல் விதேஹமுக்தனுக கைவல்ய பதவியை அடைந்து விடுவான். இதையே மேல் இரண்டு சுலோகங்களில் குறிப்பிடுகிருர்.] (50-51)

प्रारब्धकर्मवेगेन जीवन्मुक्तो यदा भवेत् ।
कंचित्कालमनारब्धकर्मबन्धस्य संक्षये ॥ ५२ ॥

निरस्तातिशयानन्दं वैष्णवं परमं पदम् ।
पुनरावृत्तिरहितं कैवल्यं प्रतिपद्यते ॥ ५३ ॥

ப்ராரப்த கர்ம வேகேன ஜீவன்முக்தோ யதா பவேத் |
கஞ்சித்காலமநாரப்த கர்ம பந்தஸ்ய ஸம்க்ஷயே ||

நிரஸ்தாதிஶயாநந்தம் வைஷ்ணவம் பரமம் பதம் |
புநராவ்ருத்தி ரஹிதம் கைவல்யம் ப்ரதிபத்யதே ||

**प्रारब्धकर्मवेगेन** - பிராரப்தகர்மத்தின் வேகத்திஞல், **कञ्चित्कालं**-சிலகாலம், **जीवन्मुक्तः**-ஜீவன்முக்தனுக, **यदा**-எப் பொழுது, **भवेत्** - இருப்பானே (அதன்பின்) **अनारब्धकर्म-बन्धस्य** - பிராரப்தமல்லாத (ஸஞ்சிதம், ஆகாமி என்கிற) கர்மாக்களின் கட்டு, **संक्षये**-நசித்துவிட்டபடியால், **निरस्ताति-शयानन्दं**-எதற்கு மேலாக ஆனந்தம் கிடையாதோ அப்பேர்ப் பட்ட ஆனந்த ஸ்வரூபமாயும், **पुनरावृत्तिरहितं** - திரும்பியும் ஸம்ஸாரத்திற்கு வருவதென்பதேயில்லாததாயும், **वैष्णवं**-ஸர்வவியாபகமான பிரஹ்மத்திற்குரியதாயும், **कैवल्यं**-ஒன் ருகவே தனித்திருக்கும் தன்மையுடையதாயும் உள்ள, **परमं**-உத்தமமான, **पदं**-நிலையை, **प्रतिपद्यते**-அடைகிருன்.

பிராரப்த கர்மத்தின் வேகத்திஞல் சிலகாலம் ஜீவன் முக்தனுக எப்பொழுது இருப்பானே, (அதன்பின்) பிராரப்தமல்லாத (ஸஞ்சிதம் ஆகாமி என்கிற) கர்மாக் களின் கட்டு நசித்துவிட்டபடியால் எதற்கு மேலாக

ஆனந்தம் கிடையாதோ அப்பேர்ப்பட்ட ஆனந்த ஸ்வரூபமாயும் திரும்பியும் ஸம்ஸாரத்திற்கு வருவதேயில்லாததாயும் ஸர்வவியாபகமான பிரஹ்மத்திற்குரியதாயும் ஒன்றாகவே தனித்திருக்கும் தன்மையுடையதாயும் உள்ள உத்தமமான நிலையை அடைகிறான்.

[புலியென்று நினைத்துவிடப்பட்ட அம்பு, புலியல்ல பசுவென்று தெரிந்துவிட்டதற்காக நின்றுவிடாது. அந்த பிராணியை அடித்தே தீரும். அதேமாதிரியாக இந்த சரீரத்தைக்கொடுத்த பிராரப்த கர்மா ஆத்மஞானம் ஏற்பட்டு விட்டதற்காக நசித்துவிடாது அக்கர்மாவின் வேகமிருக்கும்வரை இருந்தேதீரும். ஆக சரீரம், ஆத்மஞானம் இரண்டும் சேர்ந்தேயிருக்கிறபடியால் அந்த ஞானியை ஜீவன்முக்தன் என்பார்கள். பலனைக்கொடுக்க ஆரம்பிக்காத முன்செய்த கர்மாக்கள் பூராவும் ஞானத்தினால் நாசமடைந்துவிடுகின்றன. ஞானமேற்பட்ட பின் செய்யும் சேஷ்டைகளில் "நான் செய்கிறேன்" என்கிற எண்ணமேயில்லாததினால் அவை கர்மாவேயாகாது ஆகையால் பிராரப்த கர்மாவின் முடிவில் வேறு ஜன்மத்தையோ வேறு லோகத்தையோ கொடுக்கக்கூடிய எவ்வித கர்மாவும் இல்லாததினால் அந்த ஞானி ஸர்வ வியாபகமான பிரஹ்மத்தோடு ஒன்றாக ஆகிவிடுகிறான். இதே விதேஹ முக்தி என்பது அந்த நிலையில் ஆனந்த ஸ்வரூபமாகவே இருந்துவிடுகிறபடியால் அதற்குமேல் ஆனந்தமிருக்கக்கூடியதேயில்லை என்று சொல்லி இச்சிறு பிரகரணத்தை ஸ்ரீமத் ஆசார்யார் மங்களமாக முடிக்கிறார்கள்.] (52-53)



॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥

---